# பொருள்களை வைக்க கீரா காபினெட்டுகள்!

கீரா ஸ்டீல் காபினெட்டுகள் அழகான மெருகுள்ளவை...துருவினாலும் அரிப்பினாலும் பாதிக்கப்படாமலிருக்கும்படி 'ட்ரீட்' செய்த எஃகினால் தயாரிக்கப்பட்டவை. இவை நீண்டகாலம் நீடிக்கின்றன. பொருள்களை வைக்க இவை வசதியானவை, பத்திரமானவை. எல்லா காபினெட்டுகளுக்கும் பத்திரமாக பூட்டும் ஏற்பாடு உள்ளது. இவற்றின் ஷெல்ஃபுகளை வேண்டும்படி பொருத்திக்கொள்ளலாம்; பொருத்தமான 'ஃபிட்டிங்குகள்' கூட கிடைக்கும். வீட்டிலும் சரி, ஆஃபீஸிலும் சரி, உங்கள் பொருள்களை பத்திரமாக வைக்க கீரா காபினெட்டுகளே சிறந்தவை!



'யுடிலிடி': 1971 எம்.எம். x 910 எம்.எம். x 481 எம்.எம். (78"x36"x19")



'பாபுலர்': 1641 எம்.எம். x 831 எம்.எம். x 481 எம்.எம். (65"x33"x19")



'மிஜட்': 1270 எம்.எம். x 760 எம்.எம். x 481 எம்.எம். (50"x30"x19")

JWT-KSW-483




கீரா ஸ்டீல் ஒர்க்ஸ் பிரைவேட் லிமிடெட்
ஸ்வாமி விவேகானந்தா ரோட், ஸாந்தா க்ருஸ், பம்பாய்-54



# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க மாசி 20 - மார்ச் 3




பட விளக்கம்
பக்கம் 16


கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.


டிரிப்யூனல்
கட்சி பற்றிய தீர்ப்பு


குற்றவாளிக் கூண்டில் நீதிபதி


ரயில்வே பட்ஜெட்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 27 ☐ இதழ் 31

# ஏழைகளைக் கொள்ளையிட்டுக் காந்தி விழாவா?

**கா**ந்தி அடிகள் அவதரித்த நூறாம் ஆண்டைக் கொண்டாடப் பெருமளவில் ஏற்பாடுகள் செய்யப்படும் அதே சமயத்தில் பல ராஜ்யங்கள் மதுவிலக்கைத் தளர்த்தவும், ரத்து செய்யவும் முன்வந்திருப்பது போன்ற அவமானகரமான, பரிதாபமான, பரிகாசமான விஷயம் வேறு இல்லை.

காந்தியடிகளுக்கு உயிராக இருந்தது மதுவிலக்குக் கொள்கை. நமது அரசியல் சாஸனத்தில் நான்காம் பகுதியின் நாற்பத்தேழாவது பிரிவும், மதுவிலக்கை அமுலாக்க அரசாங்கம் முயற்சி எடுக்க வேண்டும் என்று கூறுகிறது. தேச பிதாவுக்கு மிகவும் பிரியமான ஒன்றுக்கு — தேச சாஸனம் விதிக்கும் ஒன்றுக்கு — விரோதமாகப் பல மாநில அரசாங்கங்கள் செயல்படுவது விசனிக்க வேண்டியதாகும். இவற்றில் பல காந்திஜியின் பெயரைச் சொல்லி வாக்குக் கேட்கும் காங்கிரஸ் அரசாங்கங்கள் என்பதை எண்ணும்போது நம் அரசியலில் நிலவும் பொய்ம்மையைக் கண்டு பதைக்கவே வேண்டியிருக்கிறது.

சோஷலிஸத்தினால் உற்பத்தியைப் பெருக்க முடியவில்லை என்ற பிறகும் அந்தக் கோட்பாட்டை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கின்றனர் ஆட்சியாளர். பொருளாதார ரீதியில் படுதோல்வி கண்டுவிட்ட சோஷலிஸத்தை அவர்கள் இன்னமும் பற்றிக் கொண்டிருப்பதற்கு ஒரே காரணம் அது ஏழைகளுக்கு நன்மை செய்வதாகச் சொல்லப்படுவதுதான். ஏழைகளுக்கு நேரடியாக நன்மை செய்யாவிடினும், பணம் படைத்தவர்களை சோஷலிஸம் தாக்கும் என்றும், இதிலேயே ஏழைகளுக்கு ஒரு மாயத் திருப்தியை உண்டு பண்ணிவிடலாம் என்றும் சோஷலிஸவாதிகள் கருதுகின்றனர். அவர்களுடைய இந்த சோஷலிஸ வாதத்துக்கே நேர் எதிர்த் திசையில் அமைந்துள்ளது, மதுவிலக்கின் போக்கு. சர்க்கார் லைசென்ஸ் பெற்ற மதுக் கடைக்காரர், மதுவருந்தும் ஏழையரைவிடப் பணம் கொழுத்தவராகவே இருப்பார். ஏழையின் பணம் அவரிடம் சேருகிறது. பணக்காரரின் சொத்தை ஏழைகளுக்குப் பகிர்ந்து தரும் சோஷலிஸத்தைப் பேசுபவர்கள் ஏழையரின் பணம் பணக்காரரிடம் பெயர்வதற்கு அநுகூலமாகப் புதியதொரு லைசென்ஸ் வர்க்கத்தைப் படைத்திருக்கிறார்கள். அப்படிப் பெயரும் ஏழையின் பணத்தில் கலால் வரியாக ஒரு பங்கைச் சர்க்காரும் அபகரிக்கின்றனர். ஏழை இந்தியனுக்கு ஒரு நன்மையும் செய்யாமல், அவனுக்கும் அவன் குடும்பத்துக்கும் தீமையே பயக்கக்கூடிய மது அரக்கனை முடுக்கி விட்டுச் சர்க்காரும், லைசென்ஸ்தாரரான பணக்காரர்களும் லாபம் அடையப் பார்க்கிறார்கள்! கள்ளைக் காட்டி ஏழையைக் கொள்ளை அடித்து அந்தக் கொள்ளையில் சர்க்காரும் பங்கு பெறுவது சோஷலிஸமும் அல்ல, காந்தியமும் அல்ல, கௌரவமான ஆட்சி முறையும் அல்ல. ஏலத்தில் யார் அதிகத் தொகை தர முன்வருகிறார்களோ அவர்களுக்குத்தான் கள்ளுக்கடை லைசென்ஸ் தரப்படும் என்பதிலிருந்து இது பணக்காரர்களைக் கொண்டு ஏழைகளை மேலும் ஏழையாக்கும் திட்டமாகவே தெரிகிறது. இது சோஷலிஸத்துக்கு நேர் எதிர் துருவம் அல்லவா? மதுக் கடையின் வழியாகச் செல்லும் ஓர் ஏழையின் பையில் உள்ள பணம் அவன் உழைத்துச் சம்பாதித்ததாகவே இருக்கும். அது கள்ளின் கவர்ச்சி காரணமாக லைசென்ஸ்தாரரின் காசுப் பெட்டிக்குப் போகிறது. அதாவது, உபயோகமான தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களைப் 'பணக்கார வர்க்கம்' என்று நிந்திப்பவர்களே உபயோகமற்ற மதுத் தொழிலில் ஈடுபட்டுள்ள பணக்காரர்களிடம் ஏழையின் பணம் செல்ல வழி செய்கிறார்கள்!

மதுவில் போதைப் பொருள் குறைவாக இருப்பதால் இந்த வியாபாரம் நல்லதாகி விடாது. போதைப் பொருள் அதிகமாக உள்ள மதுவை ஒரு மொந்தை சாப்பிடுபவர்கள், அது

## காமகோடியின் கருணைமொழி



நமது சரீரத்தை நம்முடையதல்ல என்று நினைக்கவேண்டும் என்று சொல்வது சுலபம். அப்படிச் செய்வது கடினம்தான். யாராவது நம்மை அடித்தால் அடிக்கவில்லை என்றாவது நோக வில்லையென்றாவது வைத்துக் கொள்ள முடிகிறதா?

உடம்பு இல்லையென்று நினைக்க முடியாமல் போனால் லோகத்தில் எல்லா உடம்பும் நம்முடையதே என்று நினைக்க ஆரம்பிக்க வேண்டும். அதே இதற்குச் சரியான உபாயம். அப்படி நினைப்பதால் இதரர்கள் கஷ்டப்படும்போது அதற்குப் பரிகாரம் செய்ய நமக்கு எண்ணம் உண்டாகிறது. இதரர்களுடைய சுக துக்கம் நம்முடையனவாக ஆகிவிடுகின்றன. நாம் செய்யும் எந்தக் காரியமும் நமக்காக அல்லவென்னும் எண்ணம் தானாகவே ஏற்பட்டு விடும். இந்த முடிவையே எல்லாவற்றையும் ஈசுவரனுக்கு அர்ப்பணமாகச் செய்ய வேண்டும் என்று பகவான் கீதையில் அர்ஜுனனுக்கு உபதேசிக்கிறார். ஆகையால் எப்பொழுதும் பிறருக்காக உழைக்க வேண்டும். நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் ஈசுவரார்ப்பணம் செய்ய வேண்டும்.

---

குறைவாக உள்ள கள்ளை ஒரு மிடாய் குடித்து ஈடு செய்து கொள்வார்கள். ஸயன்ஸ்படி மதுப் பழக்கத்தால் மனிதனின் சங்கற்ப பலம் நலிகிறது. நாளடைவில் குடிப்பவன் பகுத்தறிவை இழந்து மதுவுக்கு அடிமையாகிறான். போதிய ஊட்டமான உணவுக்கு வகையற்ற ஏழைகள் விஷயத்திலோ இந்த வசியம் அதிகமாகவே இருக்கும். இதனால் மது அருந்துபவர்கள் மட்டுமின்றி அவர்கள் குடும்பமும் சொல்லொணா உபாதைகளுக்கு ஆளாவர். தாய்மார்களின் கஷ்டத்தை எப்படிச் சொல்லித் தீர்ப்பது ? உபயோகமான செலவுக்குப் பணமில்லாமல் கள்ளில் சம்பாத்தியத்தைத் தொலைத்து விட்ட ஆடவர்களின் அநாகரிகத்துக்குப் பெண் குலத்தை ஆளாக்குவதுதான் காந்தி சதாப்தி கொண்டாடுபவர்களுக்கு அழகா ?

சில அயோக்கியர்கள் சட்டத்தை மீறித் திருட்டுத்தனமாகச் சாராயம் காய்ச்சுகிறார்கள் என்பதால், சர்க்காரே சில வஞ்சகர்களை ஏழைகள் போகிற வழியில் நியமித்து ஏழைகளின் பணத்தைப் பறிக்கச் செய்து அதில் பங்கு பற்றுவது முறையாகி விடுமா? கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்களைப் பிடித்துத் தண்டிப்பதில் அநேக ராஜ்யங்களில் போதிய திறமை காணப்படவில்லை. கள்ளத்தனமாகக் குடித்தவனைப் போலீஸார் பிடித்துத் தண்டனை தருவதையே பெரும்பாலும் காண்கிறோமே யன்றி, கள் காய்ச்சியவர்கள் நடவடிக்கைக்கு ஆளாவதில்லை. ராஜாஜி சென்னை மாகாணத்தில் மதுவிலக்கை முதன் முதலில் அமுல் செய்த போது இதற்கு மாறான ஒரு யோசனையைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஸர் சார்லஸ் கன்னிங்ஹாமிடம் கூறினார். அதாவது சட்டம் மீறிக் கள் குடிப்பவனை எதிரியாக்கி அவன்மீது வழக்குத் தொடுக்காமல், அவனைச் சாட்சியாகப் பயன்படுத்திக் கொண்டு கள் காய்ச்சுபவனைப் பிடித்து, பின்னவன்மீது தாவாபோட வேண்டும் என்பதே ராஜாஜியின் யோசனை. இப்போதோ சட்ட விரோதத்தைத் தடுக்கும் போலீஸ் நடவடிக்கையும் ஏழைக்கு அதிகக் கொடுமை செய்வதாகவே உள்ளது. கள்ளச் சாராயக் காய்ச்சலைத் தடுப்பதில் தீவிர நடவடிக்கை இன்று தேவையே தவிர, மதுவிலக்குச் சட்டத்தையே ரத்து செய்வதல்ல.

பொதுவாக மக்கள் கருத்து மதுவிலக்குக்கு ஆதரவாகவே உள்ளபடியால் கள்ளச் சாராயம் காய்ச்சுதல் நீண்ட நாட்கள் நடக்க முடியாது. சட்ட விரோதமான எந்த வியாபாரமும் மக்கள் ஆதரவின்றி அதிக காலம் தாக்குப் பிடிக்க முடியாது. இன்று விஸ்கியும் பிராந்தியும் விழுங்கும் 'உயர்வகுப்பினர்' தவிர மற்றவர்கள் மதுவைப் பொதுவாக வெறுக்கவே செய்கின்றனர். பெர்மிட் வாங்கியே தாங்கள் உயர்ந்த மதுவகைகளைப் பெற முடிவதால், பணக்காரர்கள், 'இந்தத் தொல்லை எதற்கு? எல்லாரும் குடிக்கும்படியாக மதுவிலக்கை ரத்து செய்துவிடலாமே?' என்று எண்ணுகின்றனர். பெர்மிட் வாங்க அவமானப்பட்டுக் கொண்டே அவர்கள் இவ்வாறு நினைக்கிறார்கள். இந்த மான உணர்வே மக்கள் கருத்து மதுவுக்கு விரோதமானது என்பதற்கு அடையாளமாகும். அமெரிக்காவில் இதற்கு மாறாக மக்கள் கருத்து மதுவுக்கு ஆதரவாக இருந்ததாலேயே அங்கு மதுவிலக்கை ரத்து செய்ய வேண்டியிருந்தது.

தமிழகம் நீங்கலாக எல்லா ராஜ்ய அரசாங்கங்களும் காந்தித் துரோகம் செய்து விட்ட இன்று, மைசூர் மந்திரி சபையிலிருந்து காந்தியத்துக்காக வெளியேறிய ஸ்ரீமதி யசோதரம்மா தாஸப்பாவையும், மதுவிலக்கை இம்மியும் தளர்த்தாத தமிழக முதல்வர் திரு சி. என். அண்ணாதுரையையும் இதயபூர்வமாகப் பாராட்டிக் கொண்டாடுகிறோம். நிதி நிலைமையைப் பார்த்தால் ஆட்சி பீடத்தினருக்கு, 'மதுக் கடையைத் திறந்து கலால் வரி வசூலிக்கலாமே' என்ற சபலம் ஏற்படவே செய்யும். நம் முதன் மந்திரியிடம் அந்தச் சபலம் இல்லாதது பெருமைக்குகந்தது.

தில்லியும் ராஜ்யங்களும் நிதியைப் பகிர்ந்துகொள்ளும் விதத்தாலும், ராஜ்யங்கள் போடுகிற அபிவிருத்தித் திட்டங்களாலும் பெரும் பணத் தேவை ஏற்படுகிறது; விளைவாக, மதுக் கடையைத் திறந்து விடுகிறார்கள். ஆனால் ஏழையிடமிருந்து மது மூலம் பெறுகிற ஒரு ரூபாயில் அவன் குடும்

பத்தினர் ஐந்து ரூபாய் மதிப்பை இழக்கின்றனர் என்ற உணர்வு இருந்தால் இந்தக் கொடுமை நிகழாது.

சமூக அந்தஸ்தில் ஏழைகள் உயரவும், அவர்களது குடும்ப வாழ்வு சௌகரியமாகவும் கௌரவமாகவும் அமையவும் வாய்ப்புத் தரும் ஒரு மகத்தான சீர்திருத்தம் மதுவிலக்கு. ஏழைப் பெண்மணிகளைக் கேட்டுப் பார்த்தால் அவர்கள் சான்று தருவார்கள். அவர்கள் வாக்குக்கு விரோதமாகச் சென்று துரோகம் இழைப்பது காந்தி சதாப்திக்கு உரிய நடவடிக்கையல்ல.

# வேறு வழியில்லை!

**வ**ங்காளத்தில் ராஷ்டிரபதி ஆட்சி பிரகடனம் செய்யப்பட்டிருக்கிறது. மக்கள் தேர்ந்தெடுத்த மந்திரி சபையை நீக்கி, இவ்வாறு ராஷ்டிரபதி ஆட்சிக்கு வழி செய்வது ஜனநாயகத்தின் ஓர் ஆதார அம்சத்தைப் புறக்கணிப்பதாகவே பொதுவில் கொள்வதுண்டு. ஆனாலும் சில பிரத்தியேகமான சூழ்நிலைகளில் இதைத் தவிர நல்லாட்சிக்கு வேறு உபாயமில்லாமல் போகிறது. வங்காளத்தின் நெருக்கடி இத்தகைய உச்ச கட்டத்தை அடைந்து விட்டது என்பதில் ஐயமில்லை. ஸ்ரீ அஜாய்முகர்ஜியின் ஆட்சியை நீக்கியபோதே வங்கத்தை ராஷ்டிரபதியின் ஆட்சியின் கீழ் கொண்டு வந்திருக்க வேண்டும் என்ற பொதுக் கருத்து நிலவியது. எனவே, இப்போது அங்கு ராஷ்டிரபதி ஆட்சி ஏற்பட்டிருப்பது தவிர்க்க முடியாத ஒரு முடிவு என்று கொண்டு, அதை வரவேற்கவே வேண்டும். பெரும்பாலான கட்சிகள் இவ்வாறு வரவேற்றும் உள்ளன.

இப்போது செய்ய வேண்டியது, ராஜ்யத்தில் கூடிய விரைவில் சமாதானமும் ஒழுங்கும் நிலவச் செய்து புதிய பொதுத் தேர்தல் நடத்தி ஜனநாயகத்துக்கு உயிர் தருவதுதான்.

இதைவிட முக்கியமானது, சுதந்திரக் கட்சி நீண்ட காலமாக வற்புறுத்தி வருவது போல், கம்யூனிஸ்ட் கட்சியைத் தடை செய்வதுதான். அதைச் செய்யாத வரையில் வங்கத்தில் சமாதானமும் ஒழுங்கும் ஏற்படுமா என்பதே சந்தேகம்தான்.

# ஆகாசவெடி




''சிறந்த முறையில் கோர்ட்டுத் தீர்ப்பு ஏதாவது ஒன்றைத் தமிழில் மொழிபெயர்ப்பவருக்கு ரூ. 5000 பரிசளிக்கப்படும்'' என்று சென்னை சட்ட மந்திரி அறிவித்துள்ளார். — செய்தி

''அது ரூ. 5000 செலுத்தும்படி கூறும் தீர்ப்பாக அமையுமானால் எப்படி?'' என்று கேட்கிறார் ஒருவர்!

---

''செலவு அதிகமாகும் என்பதால், கடல் நீரிலிருந்து குடிநீர் எடுக்கும் திட்டம் ஒத்திப் போட வேண்டியதாயிற்று.''
—சென்னை அரசாங்க அறிவிப்பு

''கைப்பாலிலிருந்து குடி தண்ணீர் எடுக்கும் திட்டம் ஒன்றை முயன்று பார்க்கலாமே'' என்று வினவுகிறார் ஒரு குடித்தனக்காரர்.



---



''இந்திய அரசாங்கம் ஏற்படுத்திய கால்நடைப் பண்ணை ஒன்றில், ஆடு மேய்க்கிற பையன்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால், ஆட்டைக் காணோம்...!''
— சென்னை விவசாய மந்திரி

''வேலை எதுவும் இல்லையென்றால் சில சமயங்களில் பையன்களை மேய்ப்பதும் கடினம்தான்!''

---

''பம்பாய் புறநகர் ரயில் நிலையம் ஒன்றில் கேட்பாரற்றுக் கிடந்த படுக்கையைப் பிரித்தபோது அதில் நிறையக் கரன்ஸி நோட்டுகள் இருந்தன.''

''பெட்டியில் தூங்குவானேன்?'' என்று கருதி, ஒருவேளை பணத்துக்குப் படுக்கை வாங்கிக் கொடுத்திருக்கலாம் அதன் உரிமையாளர்!''



''கோக்கி''

# ராஜாஜியின் கருத்துக்கள்

தென் வியட்நாமில் உள்ள பல நகரங்களை வியட்காங் தன் வசப்படுத்திக் கொண்டுள்ளதாகத் தகவல்கள் கிடைத்துள்ளன.

கம்யூனிஸ்டுகளின் உள்நாட்டு நாச வேலையிலிருந்தும் அந்நிய ஆக்கிரமிப்பிலிருந்தும் தெற்கு வியட்நாம் மக்களையும் சர்க்காரையும் பாதுகாப்பதற்கு வெளிநாட்டு அரசாங்கம் ஒன்றால் எவ்வளவு செய்ய முடியுமோ அவ்வளவையும் அமெரிக்கா செய்து விட்டது. ஆரம்பத்திலிருந்தே இச்சண்டை அணு ஆயுதப் போராக முடிந்துவிடக் கூடும் என்ற பயத்தில் அமெரிக்கா செயலாற்ற வேண்டியிருந்ததே அதற்கு ஒரு தடங்கலாகும். உள்நாட்டு நகரங்களைக் கம்யூனிஸ்டுகள் தாக்குவதைத் தடுப்பதற்கு உலகில் முதன்மையான வல்லரசான அமெரிக்காவாலும் முடியாமற் போன சூழ்நிலை உண்டாகி விட்டது.

ஜான்ஸன் நிருவாகத்தின் செயற்போக்கை இடைவிடாமல் எதிர்த்து வந்த அமெரிக்கப் பத்திரிகையாளருக்கும் அறிஞருக்கும் வலுக் கொடுக்கும் முறையில் நிகழ்ச்சிகள் அமைந்துவிட்டன. ஆனால் ஜான்சன் கொள்கையைக் கண்டித்தவர்கள் யோசனை கூறியபடி முன்பே அமெரிக்கா இப்போரிலிருந்து வாபஸ் பெற்றிருந்தால், இன்று அமெரிக்கப் பாதுகாப்பு அடைந்த தோல்விக்குச் சமமாக ஆசியா முழுவதுமே ஒரு துரதிர்ஷ்டவசமான நிலை ஏற்பட்டிருக்கும். இறுதியில் தோல்வி கிடைத்தாலும் கூட, தமது கடமை என்று உணர்ந்த விஷயத்தில் ஒருவர் தம்மால் முடிந்தமட்டில் செயலாற்றுவதே சிறந்தது. தம்மால் முடிந்த வரையில் முற்றிலும் அவ்வாறு செயலாற்றாமல் போரை விட்டுக் கொடுத்திருந்தால் அது நீதியாயிராது. கடமையை ஆற்றத் தொடங்காமல் முதலிலேயே போரில் ஈடுபடாதிருந்தால் அது வேறு விஷயம்.

எந்த ராணுவப் போராட்டத்திலும் வெற்றிக்கோர் அவசியமான அம்சம், ராணுவம் சம்பந்தப்படாத உள்நாட்டு நிர்வாக அடிப்படையிலும் ஆதிக்கம் இருப்பதுவேயாகும். அமெரிக்காவுக்கு வியட்நாமில் இத்தகைய ஒரு கட்டுப்படுத்தும் சக்தி இல்லாததே பலவீனமாயிற்று. மனிதனுக்கு இரண்டு கால்கள் தேவைப்படுவதுபோல், நாச வேலைகளைத் தடுத்து நிறுத்துவதற்கு இரண்டு கால்கள் தேவை. இதில் ராணுவச் செயல்முறை ஒரு கால்தான். உள்நாட்டு நிர்வாகம் இன்னொரு கால். தெற்கு வியட்நாமில் இந்த இன்னொரு கால் விந்தி விந்தியே நடக்க முடிந்தது.

வியட்நாம் போரில் வெற்றி காண வேண்டுமாயின் அதற்கு உதவியாக ஒரு நூதனமான கடினமான யோசனையை அமெரிக்கா மேற்கொள்ள வேண்டும் என்று 1966 பிப்ரவரியிலேயே நான் அமெரிக்க ஜனாதிபதிக்கு ஒரு கடிதம் எழுதினேன். 'வியட்நாமின் ஆக்கிரமிப்பையும் தெற்கு வியட்நாமிலேயே போர்க்கோலம் பூண்டுள்ள கம்யூனிஸ்ட் கட்சியின் எதிர்ப்பையும் முறியடிக்க வேண்டுமாயின் தெற்கு வியட்நாமின் உள்நாட்டு நிர்வாகம் திறன்படைத்ததாகவும், ராணுவ முயற்சிக்கு உறுதியான அடித்தளமாகவும் அமைய வேண்டும். எனவே தெற்கு வியட்நாம் அரசாங்க நிருவாகத்தையே அமெரிக்கா தருமகர்த்தா ரீதியில் மேற்கொள்ள வேண்டும். இதுமிகவும் தீவிரமான, கடினமான நடவடிக்கைதான். எனினும் ஐ.நா.வுக்கு அறிவிப்புச் செய்துவிட்டு அமெரிக்கா இவ்வாறு செய்தால்தான் போர் குறுகிய காலத்தில் முடிவு பெறுவதற்கும், தெற்கு வியட்நாம் மக்கள் குறைந்த செலவில் வெற்றி காண்பதற்கும் வழி பிறக்கும்'— இவ்வாறு அந்தக் கடிதத்தில் கூறியிருந்தேன்.

'தருமகர்த்தா போல் தெற்கு வியட்நாமின் அரசாங்கத்தை மேற்கொள்ளும் என் யோசனை ஆரம்பத்தில் அசாத்தியமானதாகத்தான் தோன்றும்; இதற்கு ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் உள்ள கம்யூனிஸ்ட் நாடுகளும், மற்றவர்களும் பலவிதமாகத் திரித்துப் பெயர் தருவார்கள் என்பது வாஸ்தவம்' என்று அக்கடிதத்தில் ஒப்புக் கொண்டிருந்தேன். ஆனாலும் இவ்வாறு செய்யாமற் போனால் போர் நீண்டு கொண்டே போய், அதற்கு ஆதரவு தர அமெரிக்கப் பிரஜைகள் மறுக்கும் நிலை ஏற்படக் கூடும் என்று எடுத்துக்காட்டி வலியுறுத்தியிருந்தேன். உண்மையில் இது காரணமாகத்தான் ஹனோய் எந்த விதமான பேச்சு வார்த்தைக்கும் இணங்க உறுதியாக மறுத்து வந்திருக்கிறது.

அமெரிக்காவின் முந்திய வரலாற்றுச் சான்றுகளை எடுத்துக் காட்டி அது எப்படியெல்லாம் மற்ற நாடுகள் சுதந்திரம் பெறுவதற்குத் தான் தந்த வாக்குறுதிகளைச் சத்தியத்துடன் நிறைவேற்றியுள்ளது என்பதையும், அது தருமகர்த்தா அதிகாரத்தைக் காலனி ஆட்சி முறையாக்கித் தன் சாம்ராஜ்யத்தைப் பரப்பியதில்லை என்பதையும் விளக்கிவிட்டு, என் யோசனையை அமெரிக்கா மேற்கொள்ள வேண்டும் என்றும் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன். என் சிந்தனைகளை ஜனாதிபதியுடன் பகிர்ந்து கொள்வதில் நான் விருப்பம் காட்டியதற்காக மகிழ்ச்சி தெரிவித்துப் பதிலும் வந்தது. ஆனால் யோசனை மேற்கொள்ளப்படவில்லை. காரணங்களை எளிதில் ஊகிக்கலாம்.

பூரணமாகப் போரில் ஈடுபடாமல் ஓரளவுக்கு ஈடுபடுவதில் ஆபத்து குறைவு என்பது வாஸ்தவம். ஆனால் ஓர் எல்லைக்குள் கட்டுப்பட்டுப் போர் செய்வது மிகவும் கடினம். விடுதலை முன்னணி என்ற பெயரில் தெற்கு வியட்நாமில் ஒரு நாசகரமான உள்நாட்டு இயக்கம் உள்ளபோது, பலமான உள்நாட்டு நிருவாகமின்றி அந்நிய ராணுவ சகாயத்தால் மட்டும் பிரச்னையைச் சமாளிப்பது எளிதல்ல.

ஆசியாவில் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கு அமெரிக்கா மேற்கொண்ட சாகஸ முயற்சி ஜனநாயகத்தில் பற்றுள்ள ஆசிய மக்களுக்கெல்லாம் கவலையை உண்டாக்கும் கட்டத்தை அடைந்துவிட்டதாகக்காண்கிறது.

ஃஃஃ

தி. மு. க. மந்திரி சபையின் கொள்கைகள் யாதாயினும் சரி, அந்த மந்திரி சபைக்கு

இயன்ற அளவு உதவி புரிய வேண்டும் என்பதில் என் நாட்டம் எவ்வளவு இருப்பினும் சரி — உழவு செய்யும் விவசாயிக்குச் சுதந்திரம் தர வேண்டும் என்பதில் நான் கொண்டுள்ள நம்பிக்கையை மாற்றவே முடியாது. மக்கட் தொகையில் மற்றப் பிரிவினருக்கு நன்மை பயப்பதாக எண்ணிக் கொண்டு விவசாயிகளின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தி எடுக்கும் எல்லா நடவடிக்கைகளுக்கும் நான் எதிரி. நானே ஒரு விவசாயி மகன். நெல் பயிர் விளையும் நிலத்தைப் பார்த்துக் கொள்வதென்ருல் என்ன என்று அறிவேன். அதை நன்கு விளையச்செய்ய என்ன பண்ண வேண்டுமென்பது எனக்குத் தெரியும். நடவு நடுகிற பெண்கள், களை எடுப்பவர்கள் உள்பட உழவில் ஈடுபட்டுள்ள அனைவரும் எவ்வளவு சிலத்துடனும், சிரத்தையுடனும் பாடுபடுகிருர்கள் என்பதையும், அந்த உழைப்பின் மதிப்பையும் அறிவேன். சமையலுக்காகவோ, பஞ்சத்தில் அடிபட்ட ஒரு பிச்சைக்காரனுக்குப் போடுவதற்காகவோ எடுக்கப்படும் பிடி அரிசியைப் பார்க்கும்போது, என் மனக்கண் முன் இத்தானிய மணிகளுக்காக உழவர்களால் மேற்கொள்ளப்பட்ட உழைப்பும், கவனிப்பும் இடர்ப்பாடுகளும் வந்து நிற்கின்றன.

ஃஃஃ

அரசியல் சாஸனத்தின் பதினேழாம் பகுதியைப் பெயர்தெழுதித் தாமே தயாரித்த பிரதிகளைச் சில மாணவர்கள் கொளுத்தியதற்காக அவர்கள் கைது செய்யப்பட்டிருக்கின்றனர் — அரசியல் சாஸனத்தை அவமதித்ததாக. மாணவர்கள் தமக்கு ஜீவாதார முக்கியத்துவம் வாய்ந்த ஒரு பிரச்னை குறித்துத் தம் உணர்ச்சிகளை அமைதியான முறையில் தெரிவிப்பதற்கு வழியே இல்லாமல் அடைத்து விட்டால், அது இளைஞர்களை ஒழுங்கீனத்துக்குத் தூண்டி விடுவதாகவே முடியும்.

அரசியல் சாஸனத்தின் எந்த ஒரு பகுதியையும் திருத்த வேண்டும், அல்லது ரத்து செய்ய வேண்டும் என்று கோருவது சாஸனத்தை அவமதிப்பதாக ஆகாது. சில ராஜ்ய அரசாங்கங்களே சாஸனத்தின் முக்கியக் கொள்கைகளில் ஒன்ருன மதுவிலக்கை அலட்சியம் செய்துவிட்டு, இதுகாறும் மூடியிருந்த கள்ளுக் கடைகளைத் திறந்திருக்கின்றன. மாணவர்கள் ஓர் அடையாளத்துக்காகச் செய்த ஆட்சேபணையை விட, இதுவே சாஸனத்துக்குப் பெரிய அவமதிப்பாகும்.

ஃஃஃ

சுதந்திரத் தமிழ் நாடு கோரிக் கோஷையில் ஒரு மாணவர் கூட்டம் கூப்பாடு எழுப்பி வருவது மிகவும் வருந்தத் தக்கது. இதனல் மாணவர் சமுதாயமும், மத்திய சர்க்காரும் மொழிப் பிரச்னையைப் பற்றித் தவருகப் புரிந்து கொள்ளுமாறு நேரிடும். இப்படிச் செய்வதால் திரு சி. என். அண்ணுதுரையின் அந்தஸ்துக்கும் அதிகாரத்துக்கும் குழி பறிப்பதாகும் என்பதைச் சம்பந்தப்பட்டவர்கள் உணர வேண்டும். இந்தக் கண்ணியிலிருந்து மாணவர்கள் தப்பியாக வேண்டும். அண்ணுதுரையின் அரசாங்கத்துக்குக் கெட்ட பெயர் வாங்கி வைத்துச் சிரமப்படுத்த வேண்டும்; இதனல் ராஷ்டிரபதி ஆட்சியின் கீழ்வந்துள்ள ராஜ்யங்களின் வரிசையில் தமிழ் நாட்டையும் கொண்டு வரவேண்டும் என்பதில் நாட்டம் கொண்டுள்ள சிலரின் தூண்டுதலாலேயே இது நடந்திருக்கிறது என்று நிரூபணமானல் நான் ஆச்சரியம் கொள்ள மாட்டேன்.

மத்திய ஸெக்ரிடேரியட்டிலும், ராஜ்யங்களுக்கிடையான விவகாரங்களிலும் ஆங்கிலத்தையே எப்படி நீடிப்பது என்பதற்குத்தான் இன்று போராட்டம் தேவை. 'பிரிவினை வேண்டும்', 'தனித் தமிழ்நாடு வேண்டும்' என்று கூச்சலிடுவதால் எவ்வித லாபமும் இல்லை. இந்தியாவின் ஓர் பாகமாக இன்றி, தனித்துத் தமிழகம் வாழ்ந்து, தன்னைத் தானே பராமரித்துக் கொள்ளவும் ஆக்கிரமிப்புச் சக்திகளை எதிர்த்து நிற்கவும் முடியாது. எனவே இந்த கோஷத்தை விட்டு விட்டு, மாணவர் சமுதாயம் திரு அண்ணுதுரையின் பின் நின்று, அவரது கரங்களை வலுப்படுத்த வேண்டும். பிரிவினை இயக்கங்கள் அவரைப் பலவீனப்படுத்தவே செய்யும். தூண்டிவிடும் சூழ்ச்சிக்காரர்களிடமிருந்து மாணவர் தலைவர்கள் மாணவர்களை ஜாக்கிரதைப்படுத்திக் காக்க வேண்டும்.

ஃஃஃ

முன்பு சொன்னதைத் திருப்பிக் கூறுகிறேன். தேர்தல் செலவைக் குறைத்து, அச்செலவின் பெரும் பகுதியைச் சர்க்காரே ஏற்குமாறு செய்து, வேட்பாளர்களின் பளுவை இலேசாக்குவதற்கு தேர்தல் கமிஷனர் வழி கண்டாலொழிய இந்தியாவின் ஜனநாயகத்தைக் காப்பாற்ற முடியாது. புதுத் திட்டத்திலும் சில தீமைகள் இருக்கக் கூடும். ஆனல் நடைமுறையில் உள்ள பெரிய தீமைகளுக்குப் பதிலாக வேறு சில சிறிய தீமைகளை ஏற்கலாம்.

பொதுத் தேர்தல்களை இரண்டு நிலைகளில் நடத்தலாம். இந்திய சர்க்காரை முன்னின்று நடத்துவதற்காக ஒரு முன்னணித் தலைவரை முதலில் தேர்ந்தெடுக்கலாம். இதன் முடிவு வெளியான பிறகு மக்கட் சபை அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்கலாம். இதை அமெரிக்க முறைக்கும் பிரிட்டிஷ் முறைக்கும் இடைப்பட்ட ஒரு சமரஸமாகக் கருதலாம்.

ஃஃஃ

கட்ச்சைப் பற்றி ஒரு வார்த்தை. சர்வதேசத் தீர்ப்புக் குழு ஒன்றின் முடிவுக்கு இணங்குவதாக நாம் ஒப்புக் கொண்டுவிட்ட பிறகு, அத்தீர்ப்பை கௌரவத்துடன் ஏற்றுக் கொள்வதுதான் நமக்கு நல்லதும் கண்ணியமானதும் ஆகும். ஓர் உயர் நிலைக் குழுவிடம் நாம் விவகாரத்தை விட இசைந்தோம் என்பதே இச்சர்ச்சையை அமைதிகரமாகத் தீர்க்க வேறு வழியில்லை என்பதைத்தான் காட்டுகிறது. தீர்ப்பு ஓரளவுக்குத் நம் விருப்பத்துக்கு எதிராக உள்ளது என்று கண்டு கொண்டபின் ஸ்ரீ ஸ்வர்ண சிங்கைத் தாக்குவதில் பொருள் இல்லை. இது போன்ற தீர்ப்புக்களுக்கெதிராகப் பொது மக்கள் கருத்தைத் தூண்டிவிட்டோமாயின், பிற்பாடு இம்மாதிரியான பணிகளை ஆற்றுவதற்கு எந்த சுயேச்சையான நீதிபதியின் சேவையும் நமக்குக் கிட்டாமற் போகும்.

*[திரு என். ஏ. பால்கிவாலா பம்பாய் நகரில் பிரபல வழக்கறிஞர். நம் நாட்டின் வரி சம்பந்தமான நுணுக்கங்களையும் சட்டங்களையும் நன்கறிந்தவர்.]*

# உலக வரலாற்றில் ஓர் உதாரண புருஷர்

என். ஏ. பால்கிவாலா

ராஜாஜி என்று கோடிக் கணக்கானவர்களால் அன்புடனும் மரியாதையுடனும் அழைக்கப்படும் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் இன்று வசிக்கும் இந்தியர்களில் முதலிடம் பெற்ற மகோன்னத பிரஜை என்று கூறுவதை யாரும் மறுக்க முடியாது என்று எண்ணுகிறேன்.

தொண்ணூறு ஆண்டுகளின் போக்கில் ராஜாஜி தனித்ததொரு சிறப்புடன் பல பாகங்கள் மேற்கொண்டிருக்கிறார். பொதுப் பணி என்பதன் மிக உயர்ந்த உத்தியோகம் உள்படச் சேவையின் முழுமையான விஸ்தாரத்தையும் கண்டிருக்கிறார். 1950 ஜனவரியில் குடியரசு பிறப்பதற்கு முந்தைய இருபது மாதங்களில் அவர் கவர்னர் ஜெனரலாக இருந்தபோது அவரது தீர்க்கதிருஷ்டியும் ராஜதந்திரமும் ''மந்திரி சபை அங்கத்தினருக்கும், தேசத்துக்கும் மதிக்கவொண்ணாத பேருதவி புரிந்தன'' என்று 1950 ஜனவரி 24ல் மத்திய மந்திரிசபை நிறைவேற்றிய தீர்மானம் கூறியது.

இந்தியாவின் துரதிர்ஷ்டம் இங்கு அரசியல்வாதிகள் மிக அதிகமாக இருப்பதும் ராஜநீதி வல்லுநர்கள் மிகக் குறைவாக இருப்பதுமேயாகும். ராஜாஜி ஓர் உண்மையான ராஜநீதி வல்லுநர். அவர் சில சமயங்களில் தவறியிருக்கிறார் எனினும் அவரைப் போல் இத்தனை மாறுபட்ட விஷயங்களைக் கையாண்டு இவ்வளவு சமயங்களில் சரியானதையே செய்த இன்னொரு தலைவர் இருந்ததில்லை.



ராஜாஜியின் அறிவு கத்தி போல் கூர்மையானது. அவரது அறிவு வாயு வேகத்தில் பலப்பல ஆண்டுகள் செயலாற்றியுள்ளது. அவருடைய அறிவின் வீச்சு எவ்வளவோ அதற்கு இணையானது அவருடைய படிப்பின் விஸ்தாரம். அவருடைய தீர்க்கதரிசனம் மந்திர சக்தி வாய்ந்தது என்றே சொல்லலாம். ''ராஜாஜி குறைந்தபட்சம் எனக்கு ஆறு மாதங்கள் முன்கூட்டியே பிரச்னைகளைப் பார்த்து விடுகிறார்'' என்று ஒருமுறை காந்தியடிகள் கூறினார். ''நான் ஜனாதிபதியானதிலிருந்து என்னை மிகவும் பண்படுத்திய சக்திகளில் ராஜாஜியின் சந்திப்பும் ஒன்று'' என்று கென்னடி கூறினார்.

பலதரப்பட்ட மனிதர்களுக்கேற்பப் பல நிலைகளிலிருந்து பேசும் அசாதாரணமான வரப்பிரசாதம் வாய்ந்தவர் அவர். ஆழ்ந்து சிந்திக்கும் சக்தியாலும் அதை வெகு தெளிவாக, சுருக்கமாக வெளியிடுவதாலும் அறிஞர்களிடம் தம் கருத்துக்களைப் பதிய வைப்பவர் அவர். அதே சமயத்தில் பொது மக்கள் கூட்டம் உணர்ந்து புரிந்துகொள்ளக் கூடிய வகையில் அவர்களது அறிவையும் இதயத்தையும் சக்தி வாய்ந்த முறையில் கிளறிவிடவும் அறிந்தவர்.

அவரது ஆற்றலுக்கு எந்தப் பெரிய பிரச்னையும் பெரிதாக இருந்ததில்லை. அவரது கவனத்துக்கு எந்தச் சிறிய பிரச்னையும் சிறியதாக இருந்ததுமில்லை. அவர் செய்யும் சகல காரியங்களையும் திருந்தச் செய்பவர். கண் பார்வை தளர்ந்து விட்ட இந்த முதுமையிலும் அவரே கட்டுரைகள் எழுதி, அவரே புருப்பும் திருத்துகிறார். ஏனெனில் அவரே என்னிடம் சொல்லியது போல் கட்டுரைகளைப் புருப் பார்க்கும்போது முன்னிலும் பொருத்தமான ஒரு வார்த்தை அவருக்குக் கிடைத்து அதைப் பிரயோகிக்க முடிகிறதாம்.

அவருடைய அறிவின் சத்தியத்தன்மையும் அவரது தகர்க்கவொண்ணாத் திறமும், அவரது சம்பூரணமான எளிமையும் சகல மக்களும் அறிந்தவை. காற்றுக்கள் எப்படிச் சுற்றியடித்தாலும், அலைகள் எப்படி மாறி வீசினாலும் ராஜாஜி ஒரே துருவத்தைத் துணைக்கொண்டு [கப்பலைச் செலுத்துகிறார். அவரது மனச்சாட்சி என்பதே அந்தத் துருவம். தாம் சொல்லுவது சத்தியமானது என்பதில் அவரது அறிவுக்குள்ள உறுதியே அந்தத் துருவம்.

அவர் பொது வாழ்வில் ஈடுபட்டுள்ள அரை நூற்றாண்டுகளாக அவரது இரும்பை நிகர்த்த சங்கல்பத்தை வெற்றி

கொள்ளவோ, அவரது பொதுச் சேவை உணர்வை நலிவுறச் செய்யவோ எவராலும் இயன்றதில்லை.

அரசியலில் இத்துணை நீண்டகால புயலுக்கு மேல் ஒரு சிகரமாக ராஜாஜி விளங்குவதற்குக் காரணம் அவரிடம் பேரறிவும் சிலமான நடத்தையும் இருப்பதோடன்றிச் செயலாற்றலிலும் அவருக்கென ஓர் உத்வேகமான பண்பு இருப்பதுதான். நிர்வாகி என்ற முறையில் அவருக்குச் சமமானவர் இருந்ததில்லை என்றே சொல்லலாம். அவரது உன்னதமான அறிவின் பார்வையும் தார்மீக திருஷ்டியும் பொய்க்காதவை. இவற்றோடு மக்களையும் மக்கள் பற்றிய விவகாரங்களையும் நடைமுறையில் நிர்வகித்துக் காட்டும் கலையில் அவரது சாதுரியமும் சேர்ந்துள்ளது. இதுவே தேசத்துக்கு வழிகாட்டுபவர்களுக்கு மிகவும் அவசியமான தேவை.

ஞானத்துக்கும் மனிதாபிமானத்துக்கும் ஒரு மங்கள தீபமாக விளங்கும் இவரை எத்தனையோ தலைமுறைக்குப் பின் வருபவர்களும் நினைவு கொண்டு அஞ்சலி செலுத்துவர். அந்த நாள் வரும்போது இன்று அரசியல் அரங்கில் தலைதூக்கி நிற்கும் பெரும்பாலோர் முற்றிலும் மக்கள் நினைவிலிருந்து அகன்றிருப்பார்கள். இந்திய சுதந்திரம் என்ற கதையை அவர் ஒரு புதிய அத்தியாயத்துக்கு அழைத்துச் சென்றவர் — 'இந்தியரை அந்நியர் அடக்கியாண்டதிலிருந்து விடுதலை' என்ற கதைக்குப் பின் 'இந்தியரை இந்தியரே அடக்கியாண்டதிலிருந்து விடுதலை' என்ற அத்தியாயத்தை உண்டாக்கியவர் அவரே. இனி வரப்போகும் ஆண்டுகளில் தான் இதன் முக்கியத்துவம் உரியபடி உணரப்படும்.

உலக சரித்திரத் தேவதை அவர் சரிதத்தை எழுதும்போது அவரது மகத்தான சாதனைகளுள் மிகப் பெரியது அவர் 80 ஆண்டுகளுக்குப் பின் மேற்கொண்டதே என்று கூறும். அடர்ந்த அறியாமையில் மூழ்கிய அரசியல்வாதிகளின் மத்தியில் அவர் முன்பு பலமுறை தாம் செய்ததை மீண்டும் செய்ய உறுதி பூண்டார் — அதாவது புதியதான ஓர் ஒளிப் பாதையை வகுத்துக் காட்டினார். மக்களுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டும் என்ற மகோன்னதமான லட்சியம் கொண்ட அரசியல் சாஸனம் நமக்கு இருப்பினும் சர்வாதிகாரம் படைத்த ஓர் அதிகார வர்க்கம் மக்களின் அடிப்படைச் சுதந்திரங்களை மூச்சடைக்கச் செய்தபோது, பெர்மிட், லைசென்ஸ் ஆட்சி அதனுடைய இரும்புப் பிடியைத் தேசப் பொருளாதாரத்தின்மீது செலுத்தியபோது, தேசமெங்கும் லஞ்ச ஊழல் தலைவிரித்தாடியபோது தூர்ப்பலமான தேகமுடைய இந்த எண்பதாண்டுக் கிழவர் தேசிய அரங்கின் நடு மையத்தில் மீண்டும் குதித்தார். அப்போது பழைய வாழ்முறையின் கலாசாரமும் தர்மமும் பழைய பொதுவாழ்வும் கௌரவங்களும் சிறப்புக்களும் அழிந்தே போய்விடும் என்கிற நிலை இருந்தது. இந்தத் தருணத்தில்தான் ராஜாஜி புதியதோர் அரசியல் கட்சியைத் தொடங்கினார். ஸ்வராஜ்யாவில் அவர் வாரந்தோறும் எழுதிய கட்டுரைகளும் பற்பல ராஜ்யங்களுக்குச் சென்று அவர் நிகழ்த்திய உரைகளும் மக்களுடைய பயத்தையும் அவநம்பிக்கையையும் கரைக்கும் திராவகமாக விளங்கின. சுதந்திரம், ஜனநாயகம் இவற்றின் சரித்திரத்தில் எத்தனை எத்தனையோ நிகழ்ச்சிகள் நேர்ந்துள்ளன. எனினும் இவற்றுள் கடந்த பத்தாண்டுகளில் ராஜாஜி சாதித்திருப்பதற்கு இணை எங்குமே காண இயலாது. ராஜாஜியின் வயதில், அவருக்குள்ள ஏராளமான தடைகளுக்கெதிராக அவர் இன்று முயற்சிகளை விடாமல் மேற்கொள்ளுவதுபோல், நீரத்தை விடாமல் பற்றிக் கொண்டிருப்பது போல் அலுக்காமல், சளைக்காமல் உழைப்பது போல் மக்களுக்கு உண்மை நிலையை வாரி வாரி வழங்குவது போல் உலகத்தின் சரித்திரத்திலேயே எவரும் செய்தது இல்லை எனலாம். புராதனமான பண்பாடுகளில் வார்த்தெடுக்கப்பட்ட ராஜாஜி இந்தியாவுக்கு மீண்டும் சுதந்திர உணர்வை ஊட்டியுள்ளார். அந்தச் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்கே அவர் தமது வாக்கு வன்மை, வாதத் திறமை, நன்னடத்தை, செயலாற்றல் இவற்றின் ஒவ்வொரு துளியையும் செலவிட்டு வருகிறார்.

கடந்த பத்தாண்டில் ராஜாஜி செய்துள்ள தனிப் பெரும் பணியை அளக்க அவரது கட்சியின் அங்கத்தினர்களது எண்ணிக்கையோ, அல்லது அவர்கள் பெற்ற வாக்குகளின் எண்ணிக்கையோ ஓர் அளவை ஆகாது. அடிப்படைச் சுதந்திரத்தின் வித்து போன்ற சக்திகளை விரைவுபடுத்தியதிலேயே அவரது மகத்தான பணியின் பெருமை அமைந்துள்ளது. சட்டத்தின் ஆட்சி என்ற உயிர்ப்புள்ள தத்துவத்துக்கு அவர் தந்துள்ள புது வாழ்வே அவரது மகத்தான பணிக்கு அளவையாகும். இவை இருந்தால் தான் இந்தியாவில் நமது காலத்துக்குப் பின்பும் தேசத்தில் ஜனநாயகமும் மக்கள் சுதந்திரமும் எஞ்சியிருக்க முடியும். அவர் நமக்குத் தன்மான உணர்வை மீண்டும் பெற்றுத் தந்தார். உண்பதால் மட்டும் நாம் உயிர் வாழ்வதில்லை என்பதை உணர்த்தினார். நாம் நினைப்பதை விட நாம் மகத்தானவர்கள் என்பதைப் புரிய வைத்தார். அவரது வாழ்வின் மாலைப் பாதையில் நன்றி கொண்ட தேசம் மரியாதையுடன் ஏற்றி வைக்கும் ஒளிமிகு தீபங்களே அவர் ஆற்றும் இடையறாத பணிகளுக்கும் அப்பணிகளுக்கும் மேம்பட்டதான அவரது சீரிய நடத்தைக்கும் அளவையாகும்.

ஆன்மாவுக்குப் பசியோ, இளமையோ, மூப்போ, சாக்காடோ கிடையாது. ஆழ்ந்த ஆன்மீக ஊட்டம் பெற்ற ஒருவராலேயே அசைக்கவொண்ணாத சாசுவதமான தெய்வ நம்பிக்கைகொண்ட ஒருவராலேயே—90வயது கண்ட ராஜாஜி போல் சிந்திக்கவும் செயலாற்றவும் முடியும். எனினும் தமது உள்ளார்ந்த எளிமை காரணமாக அவர், மக்களின் விதிகளை உருவாக்கும் மகா சக்திகளின் திட்டத்தைச் செயல்படுத்தும் ஒரு சிறிய கருவியே தாம் என்று உணர்கிறார்.





## செய்திப் படங்கள்

1. உலகத் தமிழ் விழாவின் நினைவுப் பரிசைப் பெறுகிறார் ராஷ்டிரபதி டாக்டர் ஜாகிர் ஹுசைன். தமிழக முதல் அமைச்சர் சார்பில் இதனை வழங்கியவர் மத்திய சர்க்கார் சுகாதார அமைச்சர் டாக்டர் சந்திர சேகர்.

2. சமீபத்தில் தில்லியில் தைப்பூச விழாவினை இராமலிங்க அடிகளாரின் பக்தர்கள் ஒரு திருநாளாக மத்திய உள்துறை துணை அமைச்சர் திரு கே. எஸ். ராமசாமி தலைமையில் கொண்டாடினர். டாக்டர் பி. நடராஜன் வள்ளலாரின் அருமைத் தத்துவங்களை விளக்கினார். திரு சிவசண்முகம் பிள்ளை அருட்பெருஞ்சோதியை விளக்கிப் பேசினார். அருட்பா பாடலில் வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.





3. உலகத் தமிழ் விழாவையொட்டி கலைச்சிறப்புமிக்க மாபெரும் ஊர்வலத்துக்குப் பாடுபட்ட திரு எஸ். எஸ். வாசனைத் தமிழக முதல் அமைச்சர் திரு அண்ணாதுரை பாராட்டியதோடு அவருக்கு வெள்ளிப்பேழையைப் பரிசளித்தும் கௌரவித்தார்.

4. ஸீமென்ஸ் நிறுவனத்தார் சமீபத்தில் தங்களது இந்தியத் தொடர்பின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடினர். படத்தில் தொழில் மந்திரி திரு நெடுஞ்செழியனும், ஜெர்மன் கான்சல் ஜெனரலும் நூற்றாண்டு விழாவையொட்டி ஏற்பாடு செய்யப்பட்ட கண் காட்சியைப் பார்வையிடுகின்றனர்.




“சுமார் இருபது வயதான, சரோஜா என்ற பெயர் கொண்ட தாயார் இங்கே அறிவிப்பாளர் அறையில் மகன் ராமுவைக் காணோம் என்பதால் அழுது கொண்டிருக்கிறாள். பச்சைப் புடவையும் அதற்குப் பொருத்தமான ரவிக்கையும் கழுத்தில் தங்கச் செயினும் போட்டுக் கொண்டிருக்கிறாள். மகன் ராமு எங்கே இருந்தாலும் உடனடியாக அறிவிப்பாளர் அறைக்கு வந்து தாயாரைக் கூட்டிக் கொண்டு போகவும்!”

உலக வர்த்தகத் தொழில் கண்காட்சியில் இப்படி ஒலிபெருக்கியில் அறிவித்தால் யாரும் ஆச்சரியப்பட வேண்டாம். ஏனெனில் உண்மையிலேயே இங்கு காணமற் போகிறவர்கள் குழந்தைகள் அல்ல; பெரியவர்கள் தான். கண்காட்சியிலுள்ள அதிசயங்களைத் திறந்த வாய் மூடாமல் பார்த்துக்கொண்டே சென்று தொலைந்து போய் விடுகிறார்கள். உடன் வந்தவர்களையும் மறந்து லயிக்கும் அளவுக்குக் காட்சிப் பொருள்கள் இருக்கின்றன.

## பின்னி நிறுவனம்

உதாரணமாக பின்னி அண்டு கம்பெனியின் அரங்கத்தையே எடுத்துக் கொள்ளுங்களேன். எகிப்திய பிரமிட்டைத் தமிழகத்தில் கொண்டு வந்து நிறுத்தியிருப்பது போல் பிரமிக்க வைக்கிறது அது.

ஜான் பின்னி என்ற தொழில் மேதை ஒரு ஸ்காட்லாந்துக்காரர். அந்தக் காலத்தில் சென்னையில் இருந்த நவாபின் ஆங்கிலக் காரியதரிசியாக இருந்து அநுபவம் அடைந்து இந்தியாவிடம் பற்றுக்கொண்டார். உலகப் பிரசித்தி பெற்ற தொழிலதிபராக வளர்ந்தார். 1799ல் தொடங்கப்பட்ட பின்னி நிறுவனம் எத்தனையோ விதத்தில் வளர்ந்து இன்று பாரதத்துக்கே பெருமை தரும் விதத்தில் இயங்கி வருகிறது.

பாரதத்தின் மிகப் பெரிய நெசவு ஆலைகளுள் ஒன்றான பக்கிங்காம் அண்ட் கர்நாடிக் மில்ஸ்; பெங்களூர் ஸில்க், காட்டன் மில்ஸ் ஆகிய மிகப் பெரிய நிறுவனங்களெல்லாம் பின்னியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டவையே. இன்னும் சர்க்கரை ஆலை, கடல் வாணிபம்,

# தொழில் வளம் தெரிகிறது



என்ஜினீயரிங் கம்பெனிகள், விவசாயத் துறை, மாபெரும் இயந்திரங்களும் அவற்றின் உறுப்புக்களும் தயாரிப்பு ஆகியவற்றிலெல்லாம் பங்கு கொண்டு பின்னி கம்பெனி மகத்தான சாதனைகளைப் புரிந்து வருகிறது.

## கைத்தறிக் காட்சி

அயல்நாட்டவரும் மையல் கொள்ளும் விதத்தில் கண்ணைக் கவரும் வண்ணங்களில் கைத்தறிப் புடவைகள் குவிந்திருக்கின்றன, ஹாண்ட்லூம் ஹவுஸில். அவைகள் தங்கள் மனைவிமார்களின் கண்களில் பட்டுவிடக் கூடாதே என்று கணவன்மார்கள் எவ்வளவு முயன்றாலும், அவற்றின் அலங்காரம் யாரையும் கவரக்கூடியதாக இருக்கின்றன. பாரத நாட்டில் எங்கெல்லாம் கைத்தறி நெசவு இருக்கிறதோ, அங்கிருந்தெல்லாம் புடவைகளும் சோளிகளுமாகப் பலப்பல மோஸ்தர்களில் வந்து நிறைந்திருக்கின்றன. அதே அளவுக்குப் பெண்களும் அங்கு கலகலப்பாக நிறைந்திருப்பதிலிருந்தே ஹாண்ட்லூம் ஹவுஸுக்கு எவ்வளவு மவுஸு இருக்கிறதென்று தெரிந்து கொள்ளலாம். இதே போல்தான் தமிழ்நாடு கைத்தறி நெச




- ☐ தமிழக அரசின் அரங்கம் கோவிலையும், தேரையும் நம் கண்முன் நிறுத்திக் கலை அழகுடன் விளங்குகிறது.
- ☐ பின்னி கம்பெனியின் அதியற்புதமான தோற்றம் நம்மைப் பிரமிக்க வைக்கிறது.
- ☐ பத்தாயிரம், ஐயாயிரம், ஆயிரம் ரூபாய் நோட்டுக்களையும் அயல் நாட்டு நோட்டுக்களையும் பார்க்க ஆவலுடன் கனரா பாங்கி வாசலில் மக்கள் 'க்யூ' வரிசையில் நிற்கின்றனர்.
- ☐ காரும் அதன் உறுப்புக்களும் தயாரிக்கும் பல ஸ்தாபனங்கள் சேர்ந்து வைத்துள்ள அரங்கத்தில் டி. வி. எஸ்., பகுதியை அமைச்சர் கருணாநிதி பார்வையிட்டார்.
- ☐ 'பாக்ட்' அரங்கின் வெளித் தோற்றம்.




வாளர் கூட்டுறவுச் சங்கத்தின் அரங்கத்திலும் வான வில்லின் வர்ண விசித்திரங்களில் பட்டு நூல் புடவைகளைக் காணும்போது ஆடவர் முகத்திலும் ஏக்கம் தேங்கும்!

## காரும் அதன் உபகரணங்களும்

ஒரு காரில் எத்தனை தனித் தனிப் பாகங்கள் இருக்கின்றன என்று ஒரு நண்பரைக் கேளுங்கள். அவர் தெரியாது என்றதும் கொஞ்சமும் தயங்காமல் 1357 என்று சொல்லுங்கள். மறுத்துரைக்க முடியுமா நண்பரால்? எனினும் உண்மையாகவே காரில் உள்ள தனித் தனிப் பாகங்களைப் பற்றி நன்கு அறிய, உலகக் கண்காட்சியில் காரும் அதன் உபகரணங்களும் அடங்கிய அரங்குக்குப் போகலாம்.

காருக்குத் தேவையான நூற்றுக் கணக்கான பாகங்களைத் தயாரிக்கும் ஸ்தாபனங்கள் பலவற்றையும் ஒரே இடத்தில் பார்க்கும்படி வைத்திருக்கிறார்கள். பிரசித்தி பெற்ற டி. வி. எஸ். நிறுவனங்கள், ரானே கம்பெனி, இந்தியா பிஸ்டன், அசோக் லேலண்ட், கிர்லோஸ்கர், அக்மி மான்யுபாக்சரிங் கம்பெனி, ஏ. பி. ஐ., இன்டர்நேஷனல் இன்ஸ்ட்ருமென்ட்ஸ், சஹானி என்டர்பிரைஸஸ், ஸ்டாண்டர்டு மோட்டார் பிராடக்ட்ஸ் முதலியவை தவிர வேறு பல மோட்டார் தயாரிப்பு நிறுவனங்களும் பங்கு பற்றியுள்ளன. பலவித மோட்டார் சைக்கிள்களும் கண்காட்சியாக விளங்குகின்றன.

## ஹெவி எலெக்டிரிகல் ஸ்தாபனங்கள்

அனல் மின் நிலையங்களும் நீர் மின் நிலையங்களும் மின்சாரம் உற்பத்தி செய்கின்றன என்றால் ஹெவி எலக்டிரிகல் ஸ்தாபனங்கள் மின் நிலையங்களையே தயாரிக்கின்றன. அதாவது மின் நிலையங்களுக்குத் தேவையான பெரிய பெரிய மின்சக்தி மோட்டார்கள், டிரான்ஸ்பார்மர்கள், டர்பைன்கள், ஜெனரேட்டர்கள் முதலியவற்றைத் தயாரிக்கின்றன. மிகப் பெரிய பிரும்மாண்டமான டிரான்ஸ்பார்மரை ராஜஸ்தான் அணு மின் நிலையத்துக்குக் கொடுத்திருக்கிறது, போபால் ஹெவி எலெக்டிரிகல் தொழிற்சாலை.

போபால் ஹெவி எலெக்டிரிகல் நிறுவனம் பிரிட்டனிலுள்ள அஸோஸியேடட் எலெக்டிரிகல் இண்டஸ்ட்ரீஸ் நிறுவனத்தின் தொழில் நுணுக்கக் கூட்டுறவோடு இயங்குகிறது.

மற்றொரு ஹெவி எலக்டிரிகல் ஸ்தாபனம் திருச்சியில் தலைமைக் காரியாலயத்துடன் இயங்கும் பாரத் ஹெவி எலக்டிரிகல்ஸ் ஆகும்.

சுமார் 120 அடி உயரம் கம்பீரமாக நிற்கும் ராக்ஷஸக் கொதிகலனின் எஃகுச் சுவரில் ''பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ்'' என்று பெரிதாக எழுதப்பட்டிருப்பது இந்தப் பொருட் காட்சியில் அனைவருடைய கவனத்தையும் ஈர்க்கிறது. எல்லாம் ராக்ஷஸ இயந்திரங்களாகத்தான் இருக்கும் என்று



ணைக்க முடிந்தாலும், உள்ளே நுழைந்து தான் வருவோமே என்ற ஆவலும் உந்தித் தள்ளுகிறது.

பாரத் ஹெவி எலக்டிரிகல்ஸ ஸதாபனத்துக்கு நான்கு இடங்களில் தொழிற்சாலைகள் உள்ளன. ஹைதராபாத்தில் உள்ள தொழிற்சாலை பெரிய அளவுள்ள மின் உற்பத்தி யந்திரங்களையும் அங்கேயுள்ள மற்றொரு தொழிலகம் ''ஸ்விச் கிர்'' என்ற சாதனங்களையும் தயாரிக்கின்றன. திருச்சிராப்பள்ளியிலுள்ள கொதிகலன் தொழிற்சாலையில் பிரம்மாண்டமான கொதிகலன்களைத் தவிர, இவற்

னுக்குச் சம்பந்தப்பட்ட வேறு பல உபகரணங்களும், அனல் மின் உற்பத்திக்கு இசைவாகத் தயாரிக்கப்படுகின்றன. நான்காவது தொழிற்சாலை ஹரித்துவாரத்திலுள்ளது. இங்கே பெரிய அளவு வார்ப்படங்கள் தயாரிக்கப்படுகின்றன. உற்பத்தி விரைவிலேயே தொடங்கவிருக்கிறது.

ஆசியாவிலேயே மிகப் பெரியது என்று மதிக்கக்கூடிய தொழிற்சாலைகள் இவை.

❀ உலகத் தொழில் கண்காட்சியில் ஐ. ஏ. ஜ. ஸி. அரங்கம்.

❀ நெய்வேலி யூரியா உரத் தொழிற்சாலையின் மாதிரி நெய்வேலி அரங்கத்தில் காட்சி தருகிறது.

❀ ஏர் இந்தியா நிறுவனத்தின் கண்கவர் வனப்புமிக்க சிறிய அரங்கில் விமான உபசரணை நங்கையர் நல்வரவு கூறுகின்றனர்.



## கூட்டு அரங்கம்

மூன்று கம்பெனிகளின் கூட்டு அரங்கமாகத் திகழ்கிறது ஒரு மண்டபம்.

புரோடோரைட், டி. ஐ. சைக்கிள், கார்பரண்டம் யூனிவர்ஸல் ஆகியவையே அந்த நிறுவனங்கள்.

உள்ளே நுழைந்ததும் முதலில் வரவேற்பது சைக்கிள் வாகனத்தின் சரித்திர வரலாற்று ஓவியங்களும் விமானத்திலிருந்து எடுக்கப்பட்ட சைக்கிள் தொழிற்சாலையின் புகைப் படங்களும். விமானத்திலிருந்தபடியே படமெடுக்க வேண்டிய அளவுக்கு நீள அகலங்களை உடைய ஸ்தாபனந்தான் டி. ஐ. சைக்கிள். பூமியிலிருந்தபடி படம் பிடித்தால் டி. ஐ. சைக்கிள் நிறுவனத்தின் பெரிய அளவினை உணர்த்த இயலாது.

ஹெர்குலிஸ், பிலிப்ஸ், பி. எஸ். ஏ. ஆகிய பெயர்களை அறியாதார் யார்? சில சைக்கிள் ரகங்கள் நேர்த்தியாகவே இருந்தன. ஆனால் உள்ளூரில் கண்ணில் படாதவை. இந்த இனங்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. விலையும் சற்றுக் கூடத்தான். அதிகப்படி பளபளப்புக் கொடுத்து விசேஷ உறுப்புக்களும் பொருத்தப்பட்டிருப்பதால், அதிக விலை. ஆனால் அமெரிக்காவில் சைக்கிள் ஓர் ஆடம்பரப் பொருள்தானும். மோட்டார் கார்தான் அங்கே அத்தியாவசியப் பொருள்! ஆடம்பரப் பொருளாக இருப்பதால் அந்தச் சொந்தக்காரருக்குப் பொருத்தமாகச் சைக்கிள்களை மதிப்பு மிக்கதாகவும், கவர்ச்சிகரமாகவும் செய்ய வேண்டியிருக்கிறதாம்!

சைக்கிள் உறுப்புக்கள்தான் எத்தனை! அவைகள் எல்லாம் இந்தத் தொழிற்சாலைப் பகுதிகளில் தயாரிக்கப்படுகின்றன என்பதைக் காட்சிப் பொருள்கள் தெளிவுபடுத்தின. சைக்கிள் தயாரிப்புக்கு அடிப்படைத் தேவை எஃகுக் குழாய்கள். எஃகுக் குழாய்கள் தயாரிக்கும் யந்திரத்தின் சிறிய மாதிரியை அமைத்து இயக்கிக் காட்டுகிறார்கள் இங்கே. எஃகுத் தகடுகள் இதனுள்ளே செலுத்தப்பட்டு மறு முனையில் குழாய்களாக வெளி வருவது விநோதமாகவும் வேடிக்கையாகவும் உள்ளது.

இரண்டாவது பகுதி கார்பரண்டம் கம்பெனியின் தயாரிப்புக்களை விவரிக்கும் பகுதி. பவுண்டன் பேனவா, பாதரக்ஷைகளா, குண்டூசியா, ரயில்வே என்ஜினு—எதுவானாலும் அவற்றின் தயாரிப்பின்போது ஏதாவதொரு கட்டத்தில் சாணைக்கற்கள் அல்லது சாணைத் தாள்கள் உபயோகப்பட்டேயாக வேண்டும். சாணைக் கற்களிலும் உப்புக் காகிதங்களிலும் பல ரகங்களைத் தயாரிக்கிறது கார்பரண்டம் யூனிவர்சல் ஸ்தாபனம்.

இந்த அரங்கில் மூன்றாவது நிறுவனம் கோரமாண்டல் ப்ரோடோரைட் கம்பெனி. இவர்கள் தயாரிப்பது ஆர்பொலைட் எனும் பொருளை. பாக்குத் தட்டு முதல், குளியலறைத் தொட்டி வரையில் பலவிதப் பொருள்களின் தயாரிப்பில் ஆர்பொலைட் கலவை உபயோகமாகிறது. ஆர்பொலைட், பிளாஸ்டிக் இனத்தைச் சேர்ந்தது. கோந்தும் கண்ணாடியும் இணைந்த பளபளப்பான ஒரு பொருள். எந்த விதமான திரவமானாலும் இதில் கறை படியாது. தரைக்கு மேலே பரப்புவதற்கும் பயனாகிறது ஆர்பொலைட்.

## தொழில் மேதையின் சாம்ராஜ்யம்

"அமால்கமேஷன்ஸ்" என்று சொன்னால் தொழில் துறையில் பரிச்சயமுள்ளவர்களுக்குக் காலஞ்சென்ற தொழில் மேதை திரு அனந்தராமகிருஷ்ணன் அவர்கள் நினைவுதான் வரும். அவருடைய அபார மேதையின் காரணமாகவே சுமார் 17, 18 தொழில் ஸ்தாபனங்களை ஒரு குடையின் கீழ் இறும்படக் கட்டியாள வாய்த்திருக்கிறது. இன்று சென்னை மவுண்ட்ரோடில் பாதி அமால்கமேஷன்ஸார் வசம் என்று வேடிக்கையாகச் சொன்னாலும் அதில் உண்மை இல்லாமற் போகவில்லையே!

அமால்கமேஷன்ஸாரின் அரங்கத்துக்குள் நுழைந்தால் முதலில் நம் கண்ணைக் கவருவது ஒரு பழங்காலக் கோச் வண்டி. ஆயினும் புத்தம் புதிதாக இன்று செய்து வைத்தாற்போல் மின்னிப் பளிச்சிடுகிறது. அது ஸிம்ஸன் கம்பெனியார் சுமார் 92

முல்லைச் சிரிப்போ
முழு மதியோ?

பொருளடக்கப் பகுதியில் இடம் பெறும் படத்தை அனுப்பியவர் :

— சென்னை அ. சீனிவாசன்

ஆண்டுகளுக்கு முன் செய்தது. ஆம், அன்று சென்னைக்கு விஜயம் செய்த வேல்ஸ் இளவரசரின் பட்டணப் பிரவேசத்துக்காக அன்றைய சென்னை கவர்னரின் வேண்டுகோளின்படி ஸிம்ஸன் கம்பெனியார் செய்தளித்ததாகும்! 1876ம் ஆண்டு வேல்ஸ் இளவரசர் உபயோகித்த கோச்சைப் பார்க்கும்போதே ஸிம்ஸன் கம்பெனி எவ்வளவு பழம் கம்பெனி என்ற பிரமிப்பும் பெருமையும் ஏற்படுகிறது. ஏன், இன்றைய பிரபல புத்தக வியாபாரிகளான ஹிக்கிம்பாதம்ஸ் தோன்றி 124 ஆண்டுகளாகின்றன. இப்படிப் பலப் பல பழம் கம்பெனிகளை மட்டுமின்றிப் பலப் பல புதிய தொழில்களையும் ஏற்று நடத்துபவர்கள் அமால்கமேஷன்ஸார்.

கார்களுக்கும் டிராக்டர்களுக்கும் வேண்டிய என்ஜின்களைச் செய்கிறார்கள். பெர்கின்ஸ் என்ஜின் மிகப் பிரசித்தமானது. "இண்டியா பிஸ்டன்ஸ்" அதைவிடப் பெயர் போனது. பல மேற்கத்திய நாடுகளுக்கும் கிழக்காசிய நாடுகளுக்கும் ஏற்றுமதி செய்கிறார்கள். அதைத் தவிர பலவகைப்பட்ட அம்மோ பாட்டரிகள் வேறு செய்கிறார்கள்.

விவசாயத் துறையில் பயன்படக் கூடிய டிராக்டர்களையும் மற்ற உபகரணங்களையும் செய்து அளிக்கும் ஸ்தாபனம் டாஃபே.

மொத்தத்தில் அசோகச் சக்கரவர்த்தியைப் போல் அனந்தராமகிருஷ்ணன் ஒரு தொழில் சாம்ராஜ்யமே நிறுவிவிட்டுச் சென்றிருக்கிறார் எனலாம்.

## பலதுறை நிறுவனங்கள்

"மபத்லால்" என்றவுடன் அழகான மில் துணிகளின் நினைவுதான் வரும். பம்பாயில் பதினொரு துணி ஆலைகளை நடத்தும் இவர்கள் அவற்றைத் தவிர வேறு பல துறைகளிலும் இறங்கித் தொழில்கள் நடத்தி வருகிறார்கள். சணல், சாயம், ரசாயனப் பொருட்கள், கண்ணாடி, பிளைவுட் போன்ற பல பொருட்கள் உற்பத்தி செய்து வருகிறார்கள். அழகிய பூ வேலைப்பாடுகளுடன் கூடிய உறுதியான கண்ணாடிப் பொருள்கள் இவர்கள் நடத்தும் "நவின் கிளாஸ்" ஸ்தாபனத்தில் செய்யப்படுகின்றன.

## நூற்றாண்டு வருட சேவை

ஜகத்ஜோதியாய் விளங்கும் ஓர் அரங்கத்தைப் பார்த்தவுடனேயே மின்சாரத் தொழிலில் முன்னணியில் நீண்ட நாளாக இருந்து வரும் கிராம்ப்டன் கம்பெனியாரின் கூடம்தான் அது என்று சொல்லிவிடலாம்!

கர்னல் ஆர். இ. பி. கிராம்ப்டன் என்ற இங்கிலீஷ்காரர் இக்கம்பெனியை ஆரம்பித்து முதல் முதல் பேஸின்பிரிட்ஜில் 1906ல் சென்னைக்கு மின்சார சப்ளை செய்யும் அனல் மின் நிலையத்தை நிறுவினார். அதிலிருந்து கிராம்ப்டன் கம்பெனியார் சென்ற 60 ஆண்டுகளுக்கு மேலாகத் தேசமெங்கிலும் பலப் பல பிரும்மாண்டமான மின்சார உற்பத்திசாலைகளையும் மின்சாரத் திறனால் இயங்கும் ஆலைகளையும் நிறுவிப்புகழ் சம்பாதித்திருக்கிறார்கள். விழுப்புரம் — சென்னை மின்சார ரயில் ஓடுவதற்கான வேலையையும் இவர்கள்தான் முடித்துக் கொடுத்திருக்கிறார்கள். மின்சாரம் சம்பந்தமான எந்த வேலைக்கும் கிராம்ப்டன் இருக்கையில் கவலை இல்லை என்ற எண்ணத்தை நாட்டில் உண்டாக்கி விட்டார்கள்.

கிராம்ப்டன் என்றவுடன் பெஸ்ட் அண்டு கம்பெனியின் நினைவும் கூடவே வரும். இந்தக் கம்பெனி 1879ல் சென்னையில் தனது வியாபாரத்தைத் தொடங்கியது. இப்போது வியாபாரம் மட்டுமின்றித் தொழில் துறையிலும் புகுந்து விட்டிருக்கிறது. இதன் கிளையாகத்தான் கிராம்ப்டன் தொடங்கியது. இப்போது பெஸ்ட் கம்பெனியார் பல நீர்ப்பாசன யந்திரங்களையும் பம்புகளையும் செய்கிறார்கள். ஓர்திங்டன்-சிம்ப்ஸன் மோட்டார்கள் மிகப் புகழ் வாய்ந்தவை. சினிமாத் தொழிலுக்கு இன்றியமையாத கண்ணைப் பறிக்கும் ஒளி உண்டாக்கும் கார்பன் குச்சிகளை உற்பத்தி செய்து விநியோகிக்கிறார்கள்.

135 அடி உயரமுள்ள விச்வேசுவரய்யா கோபுரத்தின் உச்சிக்கு ஒரே சமயத்தில் 35 பேர்களை 20 விநாடிகளில் ஏற்றிச் செல்லும் ராக்ஷஸ லிப்டைத் தயாரித்தது பெஸ்ட் கம்பெனியின் ஈவான்ஸ் பகுதி. பெஸ்ட் என்றால் ஆங்கிலத்தில் சிறப்பானது என்று பொருள். பெஸ்ட் கம்பெனி விநியோகிக்கும் எப்பொருளும் பெஸ்டாகத்தான் இருக்கும் என்ற பெயரைச் சென்ற தொண்ணூறு வருட சேவையின் மூலம் நிலைநாட்டி விட்டார்கள்.

## விளக்கேற்றி வைக்கும் கம்பெனி

ஈஸன் என்ஜினியரிங் கம்பெனி தொடக்க கால வரலாறு மிக வியப்பளிக்கக்கூடியது. ஸ்ரீ கே. ஆர். சுந்தரமய்யர், ஈசுவரய்யர் ஆகிய இருவரும் சேர்ந்து ஒரு சைக்கிள் கடை சென்னையில் தொடங்கி அது இப்பொழுது பல்கிப் பெருகிப் பெரும் ஆலமரம் போல் பல தொழில் துறைகளில் பலமான விழுதுகள் விட்டு நிற்கிறது. அதில் முக்கியமான ஒன்று ஈஸன் இன்ஜினியரிங் கம்பெனி. தேசத்தில் பலப் பல பகுதிகளில் மின்சார விநியோகம் செய்ய உபயோகமாகும் சாதனங்களை உற்பத்தி செய்வது ஈஸன் இன்ஜினீரிங் கம்பெனி. இந்தக் கம்பெனியின் யந்திர சாதனங்கள் தேசமெங்கும் பரவியிருக்கின்றன. இன்னும் தேசத்தில் மின்சாரம் பரவாத பகுதிகள் எவ்வளவோ இருக்கின்றன. அங்கெல்லாம் ஈஸன் இன்ஜினீரிங் கம்பெனியின் டிரான்ஸ்பார்மர்கள் புகுந்து இருள் நீக்கி விளக்கேற்றி வைக்கும் என்று எதிர்பார்ப்போமாக!







# அவனுக்கு ஒவ்வொரு நாளும் இன்க்ரிமின்* கொடுங்கள்

## தீவிரமான பசியைத் தூண்டவும், படிப்படியாக எடையை அதிகரிக்கவும்

இன்க்ரிமின்* செரி பழத்தின் மணம் நிறைந்தது. l-லைசின் என்ற இன்றியமையாத பொருள் அடங்கியது. இந்தப் பொருள் உடல் நலத்திற்கு உகந்த பசியைத் தூண்டி, உணவின் முழுப்பயனையும் சிறந்த முறையில் பெற உடலுக்கு உதவுகிறது. இன்க்ரிமின்* சாப்பிட்டு வந்தால் உங்கள் குழந்தை வயிறாரச் சாப்பிடுவான். அவனுடைய எடையும் படிப்படியாக அதிகரிக்கும். ஒவ்வொரு நாளும் அவனுக்கு இன்க்ரிமின்* கொடுங்கள்–அவன் மனமாரச் சாப்பிடுவதையும் வளர்ச்சியடைவதையும் கண்டு மகிழுங்கள்!




இன்க்ரிமின்* வளரும் குழந்தைகளுக்கெனவே உண்டாக்கப்பட்ட ஒரு லெடர்லி தயாரிப்பு.

**இன்க்ரிமின்*... வளர்ச்சிக்கு மிகவும் சிறந்தது**

நாள் ஒன்றுக்கு:
இன்க்ரிமின்* ட்ராப்ஸ்: 10-20 துளிகள்.
இன்க்ரிமின்* ஸிரப்: ஒரு தேக்கரண்டி.

* ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

CHO-36 TAH



லெடர்லி டிவிஷன். ஸயனமிட் இந்தியா லிமிடெட் 

# மகாபாரதம்

## ராஜாஜி

## 14. அரக்கு மாளிகை

பீமசேனனுடைய தேக பலத்தையும், அருச்சுனனுடைய சாமர்த்தியத்தையும் கண்டு துரியோதனனுக்குப் பொறாமை வளர்ந்து கொண்டே போயிற்று. துரியோதனனுக்குக் கர்ணனும் சகுனியும் சதியாலோசனைக்காரர்களாக அமைந்தார்கள்.

தகப்பன் திருதராஷ்டிரன் அறிவு படைத்தவன். தம்பியின் மக்களிடத்தில் பிரியம் உண்டு. ஆனால், தன் மக்களிடத்தில் பற்று அதிகம். மனோபலம் கிடையாது. தெரிந்தே துரியோதனனுக்காகத் தவறான வழியில் செல்வான். துரியோதனன் அநேக உபாயங்கள் செய்து பாண்டவர்களைக் கொல்லப் பார்த்தான். விதுரனுடைய ரகசிய மரண உதவியைக் கொண்டே பாண்டவர்கள் உயிர் தப்பி வந்தார்கள்.

நகரத்து ஜனங்கள் பாண்டவர்களைப் புகழ்ந்தார்கள். நாற்சந்திகளிலும் சபைகளிலும் யுதிஷ்டிரனே ராஜாவாகத் தகுந்தவன் என்று பேசி வந்தார்கள். ''திருதராஷ்டிரன் பிறவிக் குருடன்; ஆகையால் அவன் பட்டாபிஷேகம் பெறவில்லை. ராஜ்யத்தைத் தன் சுவாதீனத்தில் இப்போது அவன் வைத்துக் கொண்டிருப்பது நியாயமில்லை. பீஷ்மர் சத்தியசந்தர்; ராஜ்யம் தமக்கு வேண்டாம் என்று சத்தியம் செய்து விட்டவர். ஆகையால் யுதிஷ்டிரனுக்கே பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும். அவனே கௌரவர்கள் வம்சத்தையும் நாட்டையும் தருமமாக நடத்துவான் என்று எங்கே பார்த்தாலும் ஜனங்கள் கூடிக் கூடிப் பேசி வந்தார்கள். துரியோதனனுக்கு இந்தப் பேச்சைச் சகிக்க முடியவில்லை. மனக் கொதிப்பு அடைந்தான்.

திருதராஷ்டிரனைத் தனியாகப் பார்த்து அவனிடம் சொன்னான்: ''பிதாவே! நகரத்து ஜனங்கள் தாறுமாறாகப் பேசுகிறார்கள். உம்மையும் பீஷ்மரையும்கூட அவர்கள் மதிக்கவில்லை. யுதிஷ்டிரனுக்கு உடனே ராஜ்யாபிஷேகம் செய்ய வேண்டும் என்று பேசி வருகிறார்கள். இது



நமக்குப் பேராபத்தாக முடியும். கண் தெரியாமையால் நீர் இராஜ்யம் இழந்தீர். உமது தம்பி அரசனுனன். அவனுக்குப்பின் யுதிஷ்டிரன் பட்டம் பெற்றுல், பிறகு எங்களுக்கு என்றைக்கும் ராஜ்யம் கிடையாது. அவனுக்குப்பின் அவன் மகனுக்கே போகும். நாங்களும் எங்கள் மக்களும் உலகத்தில் அவமதிக்கப்படவேண்டியதுதான். அன்னத்துக்குக்கூடப் பிறரை அண்ட வேண்டியதாகும். அதைவிட நரகமே மேலாகும்.''

இதைக் கேட்ட திருதராஷ்டிரன் சிந்திக்கலானுன். ''மகனே! நீ சொல்வது சரி. ஆயினும், யுதிஷ்டிரன் தருமம் தவருதவன். எல்லாரிடத்திலும் அன்பு வைத்திருக்கிறுன். அவனுடைய தகப்பனுரைப் போலவே சிறந்த குணமுள்ளவன். ஜனங்கள் எல்லோரும் அவனை நேசிக்கிருர்கள். அவனை நாம் எவ்வாறு எதிர்க்கக் கூடும்? அவனுக்குச் சகாயம் அதிகமாக இருக்கிறது. தம்பி பாண்டு இருந்த காலத்தில் மந்திரிகள் எல்லோரும் அவனுல் நன்ருக ஆதரிக்கப்பட்டார்கள். சேனைத் தலைவர்களும் வீரர்களும் அவர்கள் குடும்பத்தாரும் அவ்வாறே பாராட்டப்பட்டனர். பாண்டுவோடு பழகின ஜனங்கள் எல்லோரும் யுதிஷ்டிரன் சார்பாகத்தான் இருப்பார்கள். நாம் அவர்களை எதிர்த்து வெல்ல முடியாது. நாம் அதருமம் செய்தால் நம்மையும் நம்மைச் சேர்ந்தவர்களையும் நகரத்து ஜனங்களே கொல்வார்கள். அல்லது ஊரைவிட்டு வெளியேற்றிவிடுவார்கள். நாம் உலகத்தின் பழியைச் சம்பாதிப்போம்'' என்றுன்.

துரியோதனன், ''நீர் பயப்படுவது சரியல்ல. பீஷ்மர் எந்தக் கட்சியிலும் சேரமாட்டார். அசுவத்தாமன் எனக்கு வேண்டியவன். துரோணர் தம்முடைய புத்திரனை விட்டுவிட்டு வேறு கட்சிக்குப் போக மாட்டார். அசுவத்தாமனுடைய மாமனுகிய கிருபரும் நம்முடைய பக்கத்தில்தான் இருப்பார். விதுரர் நம்மை வெளிப்படையாக எதிர்க்க முடியாது. அவருக்கு நம்மை எதிர்க்கும் சாமர்த்தியம் இல்லை. பாண்டவர்களை இப்போதே வாரணுவதத்திற்கு அனுப்பிவிடும். இதில் ஒன்றும் தவறு நேராது. என் துக்கத்தை நான் பொறுக்க முடியாது ; உள்ளத்தைப் பிளக்கிறது. இரவில் தூக்கம் இல்லாமல் செய்கிறது. நான் உயிருடன்



இருக்க முடியாது. இவர்களை வாரணாவதத்துக்கு அனுப்பிவிட்டு நாம் நம் கட்சியைப் பலப்படுத்திக் கொள்வோம்'' என்றான்.

பிறகு பல ராஜநீதி நிபுணர்களையும் தன் கட்சியில் சேர்த்துக் கொண்டு அவர்களையும் தகப்பனிடம் சொல்ல வைத்தான். முக்கியமாகச் சகுனியின் மந்திரியாகிய கனிகன் என்பவன் துரியோதனனுடைய ஆலோசனைக்கு ஆதரவாகத் திருதராஷ்டிரனுக்கு உபதேசம் செய்தான். சொல்ல வேண்டியதையெல்லாம் உதாரணங்களுடனும் பிரமாணங்களுடனும் சொல்லிவிட்டு, ''ராஜாவே! செல்வம் உள்ளவன்தான் சிறந்தவன். பாண்டு புத்திரர்களிடமிருந்து உம்மைக் காத்துக் கொள்ளும். பாண்டவர்கள் உம்முடைய சகோதரனுடைய புத்திரர்கள். ஆனாலும் பின்னால் வருத்தப்படாமல் இருக்குமாறு முன் ஜாக்கிரதையாக இருப்பீராக! அரசனே! அவர்கள் மிகுந்த பலமுள்ளவர்கள்'' என்றான்.

''நான் சொன்னதைக் கேட்டு என் மேல் கோபம் கொள்ளத் தகாது. அரசன் எப்போதும் தன்னுடைய பராக்கிரமத்தைக் காட்டிக் கொண்டிருக்க வேண்டும். தன் பலத்தைப் பிறர் குறைக்க இடம் கொடுக்கக் கூடாது. ராஜ காரியங்களை ரகசியமாக வைத்துக் கொள்ள வேண்டும். ஒரு காரியத்தை ஆரம்பித்த பிறகு, அதைச் செவ்வையாக நிறைவேற்றாமல் இருக்கக்கூடாது. தைத்த முள்ளைச் சரியாக எடுக்காமற் போனால் நீடித்த புண்ணை உண்டாக்கும். பராக்கிரமமுள்ள விரோதிகளை அழித்துவிட வேண்டும். பலவீனமாக இருந்தாலும் சத்துருவை அலட்சியம் செய்யக் கூடாது. சிறிய நெருப்பு வனம் முற்றிலும் பரவி எரித்துவிடும். உபாயங்களினால் சத்துருவைக் கொன்றுவிட வேண்டும். தயை காட்டத் தகாது. அரசனே! பாண்டு புத்திரர்களிடமிருந்து உம்மைக் காத்துக் கொள்ளும். அவர்கள் மிகுந்த பலமுள்ளவர்கள்'' என்று சகுனியின் மந்திரி மேலும் மேலும் விடாமல் போதித்தான்.

துரியோதனன் திருதராஷ்டிரனுக்குச் சொன்னான்: ''நான் ராஜ சேவகர்களுக்குத் திரவியமும் வெகுமதிகளும் கொடுத்துச் சந்தோஷப்படுத்தியிருக்கிறேன். அவர்கள் நமக்குச் சகாயமாகவே இருப்பார்கள். எல்லா மந்திரிகளும் என் சுவாதீனத்தில் இருக்கச் செய்திருக்கிறேன். நீர் நயமாகச் சொல்லி, பாண்டவர்களை வாரணாவதம் அனுப்பி விட்டால் பிறகு நகரமும் நாடும் நம்முடைய முழுச் சுவாதீனமாகும். எல்லோரும் நம்முடைய கட்சிக்கு வந்துவிடுவார்கள். இராஜ்யம் நம்முடைய கையில் நன்றாக நிலையாக நிலைத்த பிறகு பாண்டவர்கள் திரும்பி வரலாம். அப்போது நமக்கு அவர்களால் அபாயம் ஏதுமில்லை.''

இவ்வாறெல்லாம் பலர் ஒரேவிதமாகச் சொல்லவும் திருதராஷ்டிரன் மன உறுதி யிழந்து மகனுடைய ஆலோசனைக்குச் சம்மதித்தான். வேண்டிய ஏற்பாடு நடந்தது.

பாண்டவர்களுடைய காதில் விழும்படி வாரணாவத நகரத்தின் அழகைப் பற்றி மந்திரிகள் பேசலானார்கள். அவ்விடம் சிவபெருமானுக்குப் பெரிய உற்சவம் மிகச் சிறப்பாக நடக்கும் என்பதையும் எடுத்துச் சொன்னார்கள். அங்கே போக வேண்டும் என்று பாண்டவர்களே கேட்கும்படி செய்தார்கள்.

''கட்டாயம் போய் உற்சவத்தைப் பார்த்துவிட்டு வாருங்கள். அவ்விடமுள்ள ஜனங்களும் உங்களைப் பார்க்கப் பிரியப்படுகிறார்கள். அவர்களையும் திருப்தி செய்து வாருங்கள்'' என்று திருதராஷ்டிரனும் மிக்க அன்பு பாராட்டுவதைப் போலச் சொன்னான். பீஷ்மர் முதலிய பெரியோர்களிடம் விடைபெற்றுக்கொண்டு பாண்டவர்கள் வாரணாவதம் போனார்கள்.

துரியோதனனுக்குப் பேரானந்தம். குந்தியையும் அவள் புத்திரர்களையும் வாரணாவதத்தில் தொலைத்து விடச் சகுனியும், கர்ணனும் துரியோதனனும் ஆலோசனை செய்தார்கள். புரோசனன் என்னும் மந்திரியை வரவழைத்து அவனுடன் கலந்து ஆலோசித்து ரகசியமான முடிவுக்கு வந்தார்கள். அவனும் எல்லாம் செய்து முடிப்பதாக வாக்குக் கொடுத்துப் போனான்.

பாண்டவர்கள் வாரணாவதம் போய்ச் சேருவதற்கு முன்னமேயே புரோசனன் வேகமாக வாகனம் ஏறிச் சென்று அந்த நகரம்போய்ச் சேர்ந்தான். பாண்டவர்களுக்கென்று ஓர் அழகான மாளிகை நிருமாணித்தான். சணல், குங்கிலியம், மெழுகு, நெய், எண்ணெய், கொழுப்பு, அரக்கு இவைகளோடு மண்ணைக் கலந்து தீப் பிடிக்கத்தக்க சரக்குகளையே சேர்த்து மாளிகையைக் கட்டினான். சுவருக்குப் பூசிய பூச்சும் தீப் பிடிக்கத்தக்கதாகவே செய்தான். அங்கங்கே எளிதில் நெருப்புப் பற்றிக் கொள்ளும்படியான பொருள்களைச்

சாமர்த்தியமாகப் பல இடங்களில் வைத்து நிரப்பினன். மனத்தைக் கவரும்படியான ஆசனங்களும் சயனங்களும் ஏற்பாடு செய்தான். மாளிகை முற்றிலும் தயாராகும் வரையில் பாண்டவர்கள் ஊரில் சந்தேகமின்றித் தங்கியிருக்க வசதிகளும் செய்தான். பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் வந்து தங்கி இரவில் தூங்கிக் கொண்டிருக்கும் போது அதற்குத் தீ வைத்து விடத் தீர்மானித்தான். பல நாட்கள் சுகமாக மாளிகையில் அவர்கள் இருந்த பின் ஊராருக்கு எவ்விதத்திலும் தெரியாதபடி வீட்டுக்கு நெருப்பு வைத்து விட்டு அவர்களைத் தீக்கிரையாக்கிவிட்டால், தற்செயலாக நடந்தது என்று ஜனங்கள் நம்புவார்கள்; கௌரவர்கள் பேரில் யாரும் பழி சொல்ல மாட்டார்கள் என்பது துரியோதனனுடைய திட்டம். **(தொடரும்)**

# படித்துப் பாருங்கள்

## சரஸ்வதீ சந்திரன்

குஜராத்தியின் நவீன இலக்கிய பரம்பரையில் கற்றறிந்த வாசகர்களிடையே பெரும் விழிப்பூட்டிய நூல் ''சரஸ்வதி சந்திர''னே. நவீன காலத்தில் குஜராத்தியாரிடையே கலாசார உணர்வை எழுப்பிப் பெருமையுறச் செய்த மகா புருஷர்களில் காந்தியடிகளுக்கு முன்னல் பெரும் பங்காற்றியவர் நூலாசிரியர் ஸ்ரீ கோவர்த்தனராம் திரிபாடியே.

ஆசிரியர் கதையை முழுதும் எழுதி முடிக்கப் பதினறு ஆண்டுகள் எடுத்துக் கொண்டார். வாசகர்களும் சளைக்கவில்லை. விடாமல் படித்து வந்தார்கள். தத்தம் இல்லங்களில் குழந்தைகளுக்குக் குசுநாயகி குமுத சுந்தரியின் பெயரையும் அவள் சகோதரி குசும சுந்தரியின் பெயரையும் இட்டழைத்தார்கள்.

இராமாயணம், மகாபாரதம், புத்தர் ஜாதகக் கதைகள்; பவபூதி - காளிதாஸன் ஆகியோரின் நாடகங்கள்; தாந்தே, கெத்தே, டால்ஸ்டாய் போன்ற மேனாட்டு இலக்கிய கர்த்தாக்களின் படைப்புக்கள் ஆகியவற்றில் நாம் காணும் கற்பனைகள் பலவற்றின் சாயையை நாவலில் காண்கிறோம்.

தாமே ஒரு தரம் கூறியது போல் கட்டுரை எழுத வேண்டும் என்று அவர் நினைத்தது உண்மை என்றாலும் நாவல் வடிவமே அவருக்கு இயற்கையாகவே வந்தடைந்தது என்பதன் மூலம் சுயமான கதாசிரியர் அவர் என்பதும் தெளிவாகிறது.

ஆசிரியர் தம் சிந்தனைகளை வாசகர்களின் மீது ஒரு போதும் சுமத்த முயலுவதில்லை. எதிரான எண்ணங்களையும் வழங்கி வாசகர்களைச் சிந்திக்கத் தூண்டுகிறார். அவர் படைத்துள்ள பாத்திரங்கள் இயற்கைக்கு அப்பாற்பட்டவர்கள் அல்லர் என்பதையும் காட்டியுள்ளார். அவர்கள் குணக்குன்றுகள் அல்லர். அவர்களிடையே பல தவறுகளும் குறைகளும் இருக்கின்றன.

சரஸ்வதி சந்திரனின் கலையழகு பற்றி அண்ணல் காந்தியடிகள் கூறியதாவது:

''முதல் பாகத்தில் ஆசிரியர் தமது திறன் அனைத்தையும் கையாண்டிருக்கிறார்; நாவலின் சுவை முழுவதும் இதில் வெளிப்படுகிறது; பாத்திரங்களை மிக அழகாக வடித்திருக்கிறார். இரண்டாம் பாகத்தில் ஹிந்து சமூக வாழ்வைத் திறம்படச் சித்திரித்திருக்கிறார். மூன்றும் பாகத்தில் இந்தத் திறனெல்லாம் எங்கோ ஓடி ஒளிந்து விட்டிருக்கிறது. நான்காம் பாகத்தில், தாம் வாழ்வில் அடைந்து விட்ட பயனையெல்லாம் புத்தக மூலம் தந்துவிட வேண்டும் என்று நிச்சயித்து விட்டாற் போன்று வரைந்து தள்ளியிருக்கிறார்.''

சரஸ்வதி சந்திரனின் முதல் பாகம் வெளிவந்தபோது குஜராத்தி மொழி உரை நடையின் வயது ஏறக்குறைய ஆசிரியரின் வயதேயாகும். (முப்பத்திரண்டு) இன்றும் படிக்கப் படிக்க வாசகருக்கு இன்பமூட்டும் சரஸ்வதி சந்திரனின் உரை நடையை இலக்கிய உலகின் பக்குவமேறாத நாட்களில் படைத்த பெருமை ஆசிரியரையே சாரும்.

**''சரஸ்வதி சந்திரன்'' நூலுக்கு உமா சங்கர் ஜோஷி எழுதிய முன்னுரையிலிருந்து சில பகுதிகள்.**

தமிழில் பிரசுரம்: **சாகித்திய அக்காதெமிக்காக: கலைமகள் காரியாலயம், சென்னை —4 : விலை ரூ. 5-00.**

## வழிகாட்டி

மகாபலிபுரம் செல்வோருக்கு நல்ல வழித் துணை நூலைப் பிரசுரித்திருக்கிறார் எம். கே. ரங்கஸ்வாமி அய்யங்கார். அங்குள்ள பல்வேறு சிற்பங்களைப் பற்றிய வர்ணனைகளையும் சரித்திரக் குறிப்புக்களையும் தருகிறது நூல். Guide book of Mahabalipuram என்ற இந்த ஆங்கில நூலின் விலை: 80 பைசா.

இதே ஆசிரியர் தியாகப் பிரும்மத்தின் பாடல்கள் பலவற்றுக்குப் பொழிப்புரை தந்திருக்கிறார் தமிழிலே. தியாகையரின் கிருதிகளைப் பொருளுணர்ந்து பாடவும் கேட்கவும் உதவும் ''தியாகராஜ தத்துவம்'' எனும் இந்நூல். விலை: முதல் பாகம் 50 பைசா; இரண்டாம் பாகம்: 70 பைசா.

கிடைக்குமிடம் : ரங்கதாஸன், 14, ஸ்ரீராம் நகர், சென்னை — 18.

# நல்லுணர்வை வளர்ப்பது கிரிக்கெட்

[கிரிக்கெட் பற்றிச் சென்ற இதழில் வெளியான கட்டுரையில் திரு பா. சடகோபன் அவர்கள் தெரிவித்த கருத்துக்கள் பற்றிப் பாரத கிரிக்கெட் கோஷ்டியின் முன்னாள் 'விக்கெட்கீப்பர்' டாக்டர் எஸ். வி. டி. சாரி அவர்களின் அபிப்பிராயத்தைக் கேட்டோம். சென்னை மருத்துவக் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்று மருத்துவராகப் பணியாற்றி வரும் டாக்டர் சாரியின் கருத்துக்களைப் பார்ப்போம்.]

"ஆங்கிலேயரிடம் நாம் பயின்ற விளையாட்டுத்தான் கிரிக்கெட். கட்டுப்பாடு, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை, நேச உணர்வு, பிறருடைய திறமையைப் பாராட்டும் பண்பு இவைகளையெல்லாம் வளர்க்கப் பெரிதும் உதவுகிறது இந்த ஆட்டம் என்பது அதில் ஈடுபட்டவர்களுக்கெல்லாம் தெரிந்திருக்கும். ஆட்டத்தில் ஒருவர் நேர்மைக்கு எடுத்துக்காட்டாக விளங்கினால், வேடிக்கை பார்க்கும் ஆயிரமாயிரம் மக்களிடையேயும் அந்த உணர்வு பரவுமல்லவா? ஒரு நாட்டின் மக்களிடையே பெருமளவில் நற்பண்புகளை வளர்க்க ஒரு விளையாட்டு உதவக் கூடுமானால், அது பயனற்றது என்று கூறுவது முறையாகாது. அந்த அளவுக்கு லாபம்தானே?

"கிரிக்கெட் டெஸ்ட் பந்தயங்கள் ஐந்து, ஆறு நாட்கள் விளையாடப்படுவது சரிதான். ஆனால், ஆண்டுக்கு ஒரு முறைதானே? அதுவும், வெளிநாட்டுக் கோஷ்டிகள் இங்கு வரும் போதுதான். வருடத்துக்கு ஐந்து நாட்கள் நடைபெறும் இப்பந்தயங்களால் காலம் விரயம் ஆவதாகக் கூறமுடியாது. ஆண்டுக்குச் சராசரி எவ்வளவு நாடகங்கள், திரைப் படங்கள் பார்க்கிறார்கள், மக்கள்? இதற்கு ஆகும் மொத்த நேரம், செலவு எவ்வளவு என்பதைக் கணக்குப் பாருங்கள். இன்பமான ஒரு பொழுதுபோக்குத்தானே இதுவும். இதற்கு மட்டும் நேரக் கணக்குப் பார்ப்பானேன்? மற்ற விளையாட்டுக்களை விட கிரிக்கெட் பந்தயங்களைப் பார்க்க வருகிறவர்களின் தொகை பன்மடங்கு கூடுதல் என்பதிலிருந்தே லட்சக் கணக்கான மக்களின் உள்ளங்களை இந்த விளையாட்டு கவர்ந்திருக்கிறது என்பது புலனாக வில்லையா? ஹாக்கி, டென்னிஸ் இவைகளிலுள்ள விறுவிறுப்பு இதிலும் உள்ளது என்பது ரசிகர்களுக்குத் தெரியும். ஆட்டக்காரர்கள் அனைவருக்குமே பந்து எந்த நிமிடம் தன்னிடம் அடிக்கப்படுமோ என்ற விழிப்புணர்ச்சியுண்டு. ஹாக்கி, கால் பந்து முதலியவை ஒரு மணி நேர விளையாட்டு ஆகையால் ஆட்டக்காரர்கள் எல்லோரும் நின்ற இடத்தில் நிற்காமல் ஓடிக் கொண்டிருக்க முடிகிறது. அப்படியே ஆறு மணி நேரம் அவர்களால் இயங்க முடியுமா? கிரிக்கெட் ஒரு நாள் முழுதும் விளையாடப்பெறும் ஆட்டமாகையால், ஆட்டக்காரர்களின் இயக்கமும் அதற்கேற்ப அமைந்துள்ளது" என்கிறார் டாக்டர் எஸ். வி. டி. சாரி.

"ஆட்டத்தின் முடிவைத் தெரிந்துகொள்ள 5, 6 நாட்கள் காத்திருக்க வேண்டியிருக்கிறது என்று கிரிக்கெட் பற்றிக் குறை கூறுகிறார்களே?" என்று கேட்டேன்.

டாக்டர் சாரி உற்சாகத்துடன் பதில் கூறினார்: "ஒரு பந்தயத்தின் முடிவைத் தெரிந்துகொள்ள ஐந்தாறு நாட்கள் வரை லட்சக் கணக்கான மக்கள் பொறுமையோடு காத்திருக்கிறார்கள் என்பதிலிருந்தே அந்த முடிவு எவ்வளவு சுவாரசியமானது" என்பது விளங்கவில்லையா? சில கிரிக்கெட் பந்தயங்கள் எந்தக் கட்சிக்கும் வெற்றி — தோல்வி இல்லாமல் (Draw) முடிவதும் உண்டு. அதிலும் ஒரு சுவாரசியம் இருக்கிறது. ஐந்து நாட்கள் வீணாகிவிட்டன என்ற எண்ணம் ரசிகர்களுக்கு ஏற்படுவதில்லை. இது கிரிக்



கெட்டின் பலவீனமன்று. பலம். இந்த 'சஸ்பென்ஸ்'தான் கிரிக்கெட்டின் ஜீவன்.''

''கிரிக்கெட் மாணவர்களின் படிப்புக்குத் தடையாக உள்ளது என்ற கூற்றை ஒப்புக் கொள்ளுகிறீர்களா?''

''அது தவறான கருத்து. பாரதத்தின் தூதுவராகச் சிறப்பாகப் பணியாற்றி வரும் திரு ஜி. பார்த்தசாரதி என்னுடன் மாநிலக் கல்லூரியில் படித்தவர். மிகச் சிறந்த மாணவர். படிப்பில் சூரராக விளங்கின இவர் எங்கள் கல்லூரி கிரிக்கெட் கோஷ்டியின் காப்டனாகவும் இருந்தார். என்னுடன் மருத்துவக் கல்லூரியில் பயின்று வந்த ஈ. ஜே. கல்லென் (பாரத ஹாக்கிக் குழுவில் இடம் பெற்று ஒலிம்பிக் பந்தயத்தில் கலந்து கொண்டவர்) கிரிக்கெட்டைப் போலவே படிப்பிலும் திறமை காண்பித்தார். நானும் (தயக்கத்துடன் சற்று நிறுத்தி விட்டுத் தொடர்ந்து கூறினார்) வகுப்பில் மூன்றாவது அல்லது நான்காவது மாணவனாக விளங்கி வந்தேன். எனக்குத் தெரிந்து எவ்வளவோ கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் படிப்பில் தேர்ச்சியுள்ள மாணவர்களாக இருந்தார்கள்'' என்று கூறிவிட்டு ஒரு நீண்ட பெயர்ப் பட்டியலையே நினைவுபடுத்தி வெளிவிட்டார்.

''பொருளாதார ரீதியில் நமது கிரிக்கெட் கோஷ்டிகளின் அயல்நாட்டுப் பயணங்கள் லாபகரமாக இருப்பதில்லை; நமது கோஷ்டிகளின் திறமைக் குறைவினால் நாம் பிறநாட்டு மண்ணில் இதுவரை வெற்றி ஈட்டியதில்லை. * — இந்தக் கூற்றைப் பற்றித் தங்கள் கருத்து என்ன?'' என்றேன்.

''பொதுவாக விளையாட்டுக்களைப் பொறுத்த மட்டில் ரூபாய் — பைசா அடிப்படையில் லாப நஷ்டக் கணக்குப் பார்ப்பது முறையாகாது. கிரிக்கெட் விளையாடும் நாடுகளிடையே பரஸ்பரம் எவ்வளவு நேச மனப்பான்மையும் நல்லுணர்வும் வளர்கின்றன என்பதைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். ஆயிரம் அரசியல்வாதிகளால் ஏற்படுத்த முடியாத நட்புணர்வை ஒரு சிறிய கிரிக்கெட் கோஷ்டியால் உருவாக்கிவிட முடியும். இந்த அடிப்படையில் பார்த்தால், நாம் பல முறைகள் மேற்கிந்தியத் தீவுகளிலும், பிரிட்டனிலும், ஆஸ்திரேலியாவிலும் தோல்வியுற்றிருந்தாலும், விளையாட்டில் நமது ஆட்டக்காரர்கள் காண்பித்துள்ள பண்பினாலும் பெருந்தன்மையினாலும் அந்த அந்த நாடுகளிலுள்ள லட்சக்கணக்கான உள்ளங்களில் சிறப்பிடம் பெற்றிருக்கிறோம். இந்த நல்லுணர்வு ரூபாய்க் கணக்குக்கு அடங்காது.

''இதே பிரச்னையை வேறொரு கோணத்திலிருந்து அணுகுவோம். நம் நாட்டின் பொருளாதாரம் வளம் பெற்றிருந்தால் அடிக்கடி ஆஸ்திரேலியா, பிரிட்டன் முதலிய கிரிக்கெட் கோஷ்டிகளுடன் நமது கோஷ்டிகள் ஆடும் வாய்ப்பினைப் பெற இயலும். அதன் பயனாக நமது ஆட்டக்காரர்களின் திறமை பெருகும். அதுவே வெற்றிக்கு வழிகோலும். நமது கோஷ்டிகளின் சுற்றுப் பயணமும் லாபகரமாக அமையும்.''

''கிரிக்கெட் பணக்காரர்களுக்கே ஏற்பட்ட ஆட்டம் என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?''

''தவறு. நமது நாட்டில் உள்ள சிறந்த ஆட்டக்காரர்கள் பலர் பணக்காரர்கள் அல்லர். எம். ஜே. கோபாலன், சி. ஆர். ரங்காச்சாரி, ஏ. ஜி. ராம்சிங், ஏ. வி. கிருஷ்ணசாமி, என். ஜே. வேங்கடேசன் முதலிய சென்னை ஆட்டக்காரர்கள் தங்கள் திறமையாலேயே முன்னுக்கு வந்தவர்கள். பண வசதியால் அன்று. அந்தக் காலத்தில் பணக்காரர்கள் என்று சொல்லக் கூடிய கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் ஆங்கிலேயர்கள் தான். வாழ்க்கைக்கு வழிதேடிக் கொள்ள வேண்டிய காரணத்தாலேயே பலர் கிரிக்கெட்டையே மறக்க வேண்டியதாயிற்று. பிரிட்டன், ஆஸ்திரேலியா மாதிரி நல்ல ஆட்டக்காரர்களுக்கு வேலை வாய்ப்புக்கள் கிடைத்து, பொருளாதாரப் பிரச்னையை மறந்திருக்கும் வசதி ஏற்பட்டிருந்தால் நமது ஆட்டத் திறமையும் வளர்ந்திருக்கும். என்னைப் பொறுத்தவரையிலும் கூட இதே நிலை தான். நான் நன்றாக விளையாடிக் கொண்டிருந்த தருணத்தில் தொழிலில் ஈடுபட வேண்டியிருந்ததால் கிரிக்கெட்டை விட்டு விடவேண்டியதாயிற்று'' என்று கூறும்போது திரு சாரியின் கிரிக்கெட் ஆர்வத்தையும் அதை விட்டு விலகியதால் ஏற்பட்ட ஏக்கத்தையும் புரிந்துகொள்ள முடிந்தது.

''நமது கிரிக்கெட்டின் தரம் உயர நீங்கள் கூற விரும்பும் யோசனைகள் ஏதாவது உண்டா?'' என்றேன். அவருக்கு இயல்பான அடக்கம் காரணமாக ஒரு கணம் தயங்கி விட்டுக் கூறினார்:

''கிரிக்கெட் ஆட்டத்தில், குறிப்பாக ஆட்டக்காரர்களைத் தேர்ந்தெடுப்பதில் 'அரசியல்' தலைகாட்டக் கூடாது. திறமைக்கும் தகுதிக்குமே முதலிடம் தர வேண்டும். தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் அந்தக் காலத்திலும் 'அரசியல்' இல்லாமலில்லை! அது வெற்றிக்குத் தடையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. கிரிக்கெட் விளையாடுபவர்கள் குடிப்பது நல்லதல்ல. அந்தக் காலத்தில் நாங்கள் பெரும்பாலோர் சிகரெட் கூடப் பிடித்ததில்லை. வெள்ளையர்கள் சிலர் மட்டுமே புகை பிடிப்பார்கள். சிறந்த பிரிட்டிஷ் ஆட்டக்காரரும் காப்டனுமான ஜார்டைன் குடி, சிகரெட் முதலிய எவ்வித பழக்கமும் இல்லாதவர் என்பது குறிப்பிடத்தக்கது. ஜாக் ஃபிங்கிள்டன், நெவில் கார்டஸ் போன்ற சிறந்த கிரிக்கெட் விமர்சகர்கள் நம்மிடையே இல்லாதது ஒரு குறை. ஆட்டத்தின் நுணுக்கங்களை நன்கறிந்த விமரிசகர்கள், தைரியமாகக் குறைகளை எடுத்துரைக்க வேண்டும். வேகமாகப் பந்து வீசுவதில் பலர் ஆர்வம் காட்ட வேண்டும். இந்த வகை 'பௌலர்'கள் நம்மிடையே இல்லாதிருப்பது ஒரு குறை. அதற்கு ஆறடியோ அதிக உயரமோ தேவையில்லை. உலகத்திலேயே வேகமாகப் பந்து வீசுவதில் இணையற்று விளங்கிய லார்வுட் ஐந்தடி ஐந்து அங்குல உயரம்தான்!

''ஊக்கமும் உழைப்பும் இருக்குமானால், கிரிக்கெட் ஆட்டத்தில் இந்தியா வருங் காலத்தில் நிச்சயம் சிறப்பெய்தும்'' என்று நம்பிக்கை தெரிவித்தார் முன்னாள் விக்கெட் கீப்பர் எஸ். வி. டி. சாரி. **பேட்டி: பாணன்**

---

*** இந்த இதழ் அச்சாகிக் கொண்டிருக்கையில் பாரதம் முதல் முறையாகப் பிறநாட்டு மண்ணில் கிரிக்கெட்டில் வெற்றி பெற்ற செய்தி கிடைத்திருக்கிறது.**

# மக்கட் குலத்தில் மறைந்த மகாமகக் குளம்

[ நமது நிருபர் ]

ரயில் புறப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம், கண்டக்டர் வந்து, "விழுப்புரத்தில் சாப்பாடு வேண்டுமானால் செங்கற்பட்டுக்குள் சொல்லி விடுங்கள்!" என்றார்.

நண்பரை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து, "எத்தனை சாப்பாடுகள் சொல்ல?" என்று கேட்டேன்.

"பாவமூட்டையோடு சோற்று மூட்டையும் சற்றுப் பலமாகவே கொண்டு வந்திருக்கிறோம். மகாமகக் குளத்தில் பாவமூட்டையைக் கரைப்பதற்கு முன்னால், ரயிலிலேயே இதைக் கரைத்தாக வேண்டும். அதனால் இன்னும் சொல்லிச் சுமையை ஏற்றிவிடாதீர்கள் !" என்றார் நண்பர்.

ரயிலில் இருந்த மக்கள் அனைவரும் இரண்டுவித மூட்டைகளையும் சுமந்து வந்ததனால்தானோ என்னவோ, வண்டி இடைவிடையே பளு தாளாமல் நின்று சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்டு சென்றது. விழுப்புரத்தில் சோற்று மூட்டையைக் கரைத்த பின், வண்டியின் வேகம் சற்றுச் சூடு பிடித்தது. இருந்தாலும் கும்பகோணம் போகும் பொழுது ஒரு மணி நேரம் தாமதம்தான்.

கும்பகோணத்தை நெருங்க நெருங்க மக்கள் வண்டியில், அந்தரத்திலும் ஆகாசத்திலும் வாயு ஸ்தம்பம் செய்து கொண்டும் நிற்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அப்போது இருவர் ரஸமாக வாக்குவாதம் செய்து கொண்டனர். ஒருவர், தம்மை முழங்கையால் மற்றொருவர் இடிப்பதாகக் குற்றம் சாட்டி, "இவ்வளவு இடித்துப் புடைத்துக் கொண்டாவது கஷ்டப்பட்டு மகாமகத்துக்குப் போகத்தான் வேண்டுமா?" என்று கேட்டார். அதற்கு இரண்டாவது பேர்வழி, "இவ்வளவு இடிபட்டுக் கஷ்டப்பட்ட பிறகும் மகாமகத்திற்குப் போகாவிட்டால், அது நன்றாய் இருக்குமா?" என்று திருப்பிக் கேட்டார்.

ஃ ஃ ஃ

தமிழ் நாட்டில் எவ்வளவோ நகரங்கள் இருக்கலாம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் சிறப்படைந்திருக்கலாம். ஆனால் கும்பகோணத்தைப் போல் அதிருஷ்டத்துக்கு முதல் தாம்பூலம் பெறக்கூடிய நகரம் வேறு இருக்குமா என்பது சந்தேகமே. முதல் தாம்பூலம் பெறக்கூடிய நகரமாய் இருப்பதனால்தானோ என்னவோ, வெற்றிலைக்கும் சீவலுக்கும் குடந்தை பிரசித்தமாய் இருந்து வருகின்றது. ஆனால் தாம்பூல அதிர்ஷ்டத்தைப் பற்றி நான் குறிப்பிடவில்லை. இதை விடப் பெரிய அதிர்ஷ்டத்தை அது பெற்றிருக்கின்றது. அதுதான் மகாமக க்ஷேத்திரமாக விளங்கும் மகா அதிர்ஷ்டம்.

கங்கை, யமுனை, கோதாவரி, காவேரி, நர்மதை, சரஸ்வதி, குமரி, பயோஷ்ணி, சரயூ முதலிய ஒன்பது நதிகளும் கன்னி ரூபத்தில் ஒரு சமயம் சர்வேசுவரனை நாடிச் சென்றனர். ஈசுவரன் இந்த நவ கன்னிகைகளையும் ஆசீர்வதித்து, "என்ன குழந்தைகளே, என்ன விசேஷம்? எங்கே இப்படி ஒன்பது பேருமாகக் கிளம்பினீர்கள்?" என்று கேட்டார்.

அந்த மங்கைகள் நாணமும் பக்தியும் மேலிட்டுப் பகவானைப் பார்த்து, "பிரபுவே! தங்களுக்குத் தெரியாததல்ல. உலகில் பாவ கிருத்யங்கள் அதிகரித்து வருகின்றன. மக்கள் தங்களது பாவங்களைப் போக்கிக் கொள்வதற்காக எங்கள் நதிகளில் ஸ்நானம் செய்கின்றனர். இதனால் அவர்களது பாவங்களெல்லாம் எங்கள் மீது சுமந்து கொண்டே வருகிறது. இப்படி எங்கள் மீது சேரும்



1. கங்கா தீர்த்தப் படித்துறை.



2. எல்லாத் தேர்களும் அலங்காரத்தோடு காட்சி யளித்தன.

பாவச் சுமையை நாங்கள் எங்கே போய்ப் போக்கிக் கொள்வது?'' என்று கேட்டார்கள். அப்போது ஈசுவரன் அந்தக் கன்னிகைகளுக்குக் குடந்தை க்ஷேத்திரத்தைக் குறிப்பிட்டு, ''பன்னிரண்டு ஆண்டுகளுக்கொரு முறை சிம்ம ராசியில் குரு சேரும்போது, அங்கு கும்பலிங்கத்தினின்றும் தோன்றிய தடாகத்தில் ஸ்நானம் செய்யுங்கள். அதன் மூலம் உங்கள் பாவச் சுமைகளை நீங்களும் போக்கிக் கொள்ளலாம்'' என்று திருவுள்ளம் செய்தார். அதன்படி பன்னிரண்டு வருடங்களுக்கொரு முறை கங்கை, யமுனை, காவிரி முதலிய கன்னிகைகள் அங்கு வந்து நீராடிச் செல்வதாக ஐதீகம்.

ஃ ஃ ஃ

டவுனில் நுழைந்தவுடன் என்னை ஒரு காட்சி கவர்ந்தது. சைக்கிள்களில் கூட்டம் கூட்டமாக அநேகர் வந்தனர். ஒவ்வொரு சைக்கிளிலும் அநேகமாக ஒரு சிறு பெட்டியும் ஒரு படுக்கையும் கட்டப் பட்டிருக்கும். அவர்களில் சிலர் நூற்றி ஐம்பது மைல்களுக்கும் மேற்பட்ட தொலைவிலிருந்து வருபவர்கள் என்று தெரிந்தது.

மக்கள் இரவு ஒரு மணி முதற்கொண்டே நீராடத் தொடங்கி விட்டார்கள். இரண்டொரு மகாமகங்களைப் பார்த்து அநுபவப்பட்ட நண்பர் பலராம் அவர்கள் சொன்னார்கள்: ''நான்கு மணிக்கெல்லாம் நாம் ஸ்நானம் செய்துவிடுவோம். அப்புறமென்றால் கூட்டம் தாக்குப் பிடிக்க முடியாது.''



முகூர்த்த நேரம் நெருங்கிக்கொண்டிருக்கிறது ...

அவர் சொன்னதைக் கேட்டோமோ, பிழைத்தோமோ? ஒன்பது கிணறுகளிலும் நீராடி, மகாமகக் குளத்திலும் மூழ்கிக் காவேரிக்கும் சென்று நீராடிச் சௌகரியமாகத் திரும்பும் வாய்ப்புக் கிடைத்தது. அப்புறமோ மக்கள் வெள்ளம் கரைகொள்ளாமல் ஓடத் தொடங்கி விட்டது! அதில் நீந்திச் சுவாமி தீர்த்தவாரிக்கு வந்தபோது, குளத்தருகே வந்தால், மகாமகக் குளத்தைக் காணோம். யார் அத்தனை பெரிய குளத்தைத் தூக்கிக் கொண்டு போயிருப்பார்கள்? பக்கத்தில் இருந்த சாரணரை, ''எங்கே ஐயா மகாமகக் குளம்?'' என்று கேட்டேன்.

''அதோ!'' என்று சுட்டிக் காட்டினார் அவர்.

மக்கள் வெள்ளம் குளத்தையே நிறைத்திருந்ததை அப்புறம்தான் கண்டேன்.

''ஆயிரம் தலையைப் பார்த்தால் ஒருநாள் பாவம் போகும் என்பார்களே! இத்தனை தலைகளைப் பார்த்திருக்கிறோமே, எத்தனை நாள் பாவம் போகும்?'' என்று கேட்டார் பக்கத்தில் நின்ற ஒருவர்.

''மொத்தத் தலைகளைக் கணக்கெடுத்துத் தப்பாமல் கூறுங்கள். அப்புறம் வகுத்துச்சொல்லுகிறேன், கணக்காக!'' என்றார் மற்றொருவர்.

சாரணர்களின் சேவையை அளவிட்டுக் கூறுவதென்றால் அதற்குக் குடைகள்தான் வேண்டும். வாழைப் பழத் தோல்களைச் சேகரிப்பதுதான், இவர்களுடைய முக்கியமான ஊழியங்களில் ஒன்றாகும். ''எனக்கு நான்கு குடை கிடைத்தது. என் அதிர்ஷ்டம் ஐந்து குடை கிடைத்தது'' என்று இக்சச் சாரணர்களில் சிலர்,

முகூர்த்த நேரம் எதிர்பார்த்து நிற்கிறார்கள்





... குளமெல்லாம் ஜனமயம்!

குளத்துப் படிக்கட்டுகளில் பெருமையுடன் பேசிக் கொண்டிருந்தனர். இந்தச் சாரணர்கள் 158 காணாமற்போன குழந்தைகளைக் கண்டுபிடித்துத் தாய் தந்தையரிடம் சேர்த்ததாகச் சாரணத் தலைவரொருவர் என்னிடம் கூறினார். போலீஸ்காரர்களில் சிலர் மகாமகக் குளத்தில் இறங்க முடியாத மக்கள் மீது நீர் தெளித்து ஸ்நானம் செய்ய உதவினர்.

''ஏன் ஐயா, உம்மைப் பார்த்து ஒரு மாமாங்கம் ஆகியிருக்கும் போலிருக்கே? எங்கே தங்கியிருக்கிறீர்?'' என்ற குசலப் பிரச்னத்துக்குப் பதில் சொல்லுகிறார் ஒருவர் :

''கும்பகோணத்திலே, இந்த மாமாங்க டயத்திலே தங்கறதுக்கு ஓரிடம் தேவையா, ஐயா? சினிமாக் கொட்டகைகளை இராமுச்சூடும் திறந்து வைச்சிருக்காறுக. பொருட்காட்சி, சர்க்கஸ், கோயில், குளம் எல்லாமேதான் இரவு பகல் — இருபத்து நான்கு மணி நேரமும், 'வா, வா' என்று வருந்தி அழைக்கின்றனவே! 'சோழ நாடு சோறுடைத்து.' — இந்தப் பழமொழிக்கேற்ற வாசகங்களைப் பல வீட்டு வாசல்களிலும் தொங்கும் அட்டைகள் கூறுகின்றன. 'தயிர் சாதம் — புளி சாதம் இங்கே கிடைக்கும்!' என்று போட்டிருக்கு. போதாக் குறைக்கு ஒவ்வொரு வீடும் கல்யாணம் பட்டபாடு படுதையா 'ஜேஜேன்'னு! இந்தக் கும்பகோணத்திலே ஐம்பது பேருக்காவது சாப்பாடு போடாத வீடு விரலை மடக்கினாலும் கிடைக்காது. இதெல்லாம் தவிர, தர்மச் சோறு, சமாராதனைகள்னு இன்னும் எத்தனையோ ஏற்பாடு செய்திருக்காங்க!''

காவல் துறையினரும், சாரணர் படையினரும் கும்பகோணம் நகரத்தையே ஒரு வழிப் பாதையாக்கி, ஊர்வலம் வரச் செய்து, கால் கடுத்தாலும் மனம் கசங்காமல் விட்டுபெற வழி வகுத்திருந்தார்கள். ரயில்களும் தஞ்சாவூர், மாயூரம், விழுப்புரம் என்று போய்க் கொண்டும் வந்து கொண்டும், குடந்தையின் நெரிசலைக் குறைக்க உதவிக் கொண்டிருந்தன. ஆனால் ரயிலில் நெரிசல் இல்லையா என்று கேட்கிறீர்கள்? ரயில் நெரிசல்தான் பழகிப்போன விஷயமாயிற்றே!

பஸ் நிலையங்களிலோ பூமியில் வெய்யில் விழவில்லை. காரணம், மக்கள் தலைகளே வெய்யிலைத் தாங்கிக் கொண்டன. 'க்யூ'விலே நிற்கும் ஜனங்களை அவரவர்கள் ஊருக்கு ஏற்றிவிடப் போலீசார் பெரிதும் உதவினர். ஆயினும் தென்னங் கீற்றால் தட்டுப் பந்தலாவது போட்டு மக்களை வரிசையாக நிறுத்தி பஸ்களையும் 'க்யூ' முறைக்கு உட்படுத்தியிருந்தால் அவர்கள் சகித்திருக்கமாட்

முகூர்த்த நேரம் முடிந்துவிட்டது: ஸ்நானம் ஆகிவிட்டது.



டார்கள்; அதன் காரணமாக இறக்கிய பாவச் சுமையில் சிறிதளவைக் கையோடு எடுத்துக் கொண்டு போயிருக்க மாட்டார்கள் என்பதைச் சொல்லாமல் இருக்க முடியாது.

வெய்யிலையும் குளிரையும் பாராமல் 'அலர்ட்'டாகப் பணி புரிந்த காவற்படையினரை, ''ஐ.ஜி. வருகிறார். 'அலர்ட்'டாயிருங்கள்!'' என்று ஒலிபெருக்கி எச்சரித்ததும், காவற்படையைச் சேர்ந்த ஒரு சிலர் சட்டென விஷயம் புரியாமல் 'அட்டென்ஷ'னில் நின்றதும் ரசமாயிருந்தது.

''அட, குழந்தை காணுமற் போயிடுச்சா? இந்த மாமாங்கக் கூட்டத்திலே அதை எப்படி அம்மா கண்டு பிடிப்பே?'' என்று ஒலிபெருக்கியாளர், ஊர் அறிய ஒலிபெருக்கியை மூடாமல் விசாரணை செய்து கொண்டிருந்தது மக்கள் காதை நிரப்பியது.

''நீடாமங்கலம் பஸ்ஸிலே நீலம்மா ஏறியிருந்தா இறங்கிடட்டும். அவங்க இன்னிக்கு ஊருக்குப் போக வேண்டாம்! அவங்க மக—பேர் என்ன ஐயா?—சொல்லச் சொல்லிச்சு!''

ஒலிபெருக்கி இந்த அறிக்கையை விடுத்ததுதான் தாமதம்; வரிசையை மீறிப் பல உயிர்கள் அந்த ஓர் இடத்தைப் பிடிக்க நீடாமங்கலம் பஸ்ஸை முற்றுகையிட்டதும், 'அட,' கஷ்டமே! அடிச்சுப் பிடிச்சு ஏறினதும் இந்தக் கதியா? இறங்கிட்டா இனிமே பஸ் எப்படிக் கிடைக்கும்?' என்று ஆறு ஏழு மாமாங்கத்தைப் பார்த்த பாட்டி முணுமுணுத்துக் கொண்டே இறங்க முடியாமல் ஏறி ஏறி இறங்கியதும் காணமுடியாத அபூர்வக் காட்சிகளில் ஒன்று.

''இந்த மாமாங்கக் கூட்டத்திலே போய் மாட்டிக்க வேண்டாம்னு முட்டிண்டேனே, கேட்டியா? படு, அவதிப் படு — குஞ்சு குளுவான்களோடு!'' என்று கடிந்தாலும் பழம் ஒன்றுக்கு இருபது பைசாக் கொடுத்துக் கடுக்காயை விடச் சிறிய கமலாப் பழங்களை அன்போடு குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுத்த தந்தை, ''எந்த மாமாங்கத்திலே தான் கூட்டமில்லாமல் இருக்கப் போகிறது? ஏதோ பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒருமுறை வருகிற திருநாள். கொஞ்சம் கஷ்டப்பட்டு விட்டால் குறைஞ்சா போயிடும்?'' என்று சமாதானம் சொன்ன அம்மாள்—இப்படியாக எத்தனை எத்தனையோ

டாக்ஸிக்காரர்களுக்கு ஒரே யோகம். ''பன்னிரண்டு வருசத்துக்கு ஒரு முறை வரப்போறீங்க. இப்ப சம்பாதிச்சாத்தானே, சம்பாதிச்சது நாங்க!'' என்று ஆறுதல் சொல்லித் தலைக்கு அஞ்சு — பத்து என்று பேசி அழைத்துக் கொண்டு புறப்பட்டதைக் கண்டு யாரும் முகம் சுளிக்கவில்லை.

'சம் திங்' கொடுத்துப் பஸ்ஸில் இடம் பிடித்துக் கொண்டவர்களும் உண்டு. 'எதை எடுத்தாலும் நாலணா' என்று பொருள் விற்பது போல, 'எந்த ஊருக்குப் போனாலும் ஒரே கட்டணம்' என்று அடாவடித்தனம் செய்த சில பஸ்காரர்களும் உண்டு. அவர்களில் சிலரைச் சில இளவட்டங்கள் பெருத்த சோதனைக்குள்ளாக்கிச் சாதனை புரிந்தன.

''ரயில்வே நிர்வாகம் இன்னும் பல 'ஸ்பெஷல்'களை விட்டிருக்கலாம்!'' —கால் கடுக்கச் சென்னை வரை நின்று கொண்டே பிரயாணம் செய்த ஒருவர் குறைப்பட்டார்.

''இந்த ஸ்பெஷல்கள் விட்டதற்கே வண்டி ஆறரை மணி லேட்டு. இன்னும் ஸ்பெஷல்களை விட்டால்.......?''

அவர் வாயிலிருந்து வார்த்தைகள் வர வெகு 'லேட்' ஆயிற்று.

இருபது லட்சம் மக்கள் தொகை கொண்ட சென்னை மாநகரம், தமிழ் விழாவையொட்டியும் உலகத் தொழில் கண்காட்சியை ஒட்டியும் வந்து சேர்ந்த ஒரு சில லட்சம் மக்களை வரவேற்பதற்கு எத்தனை முன்னேற்பாடுகளைச் செய்து கொண்டது? அதோடு ஒப்பிடும் போது ஒரு லட்சம் மக்கட் தொகையே உள்ள கும்பகோணம் பல லட்சம் மக்களை வரவேற்றுச் சமாளித்த அழகை அற்புதம் என்றுதான் சொல்ல வேண்டும்.

மைசூர் மகாராஜா முதல் மல்லிக் குப்பத்தில் வாழும் முனியாண்டி வரை பாரத நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் வந்த லட்சோப லட்சம் மக்கள் மகாமகத்தன்று காலையில் பரம்பொருளைத் தியானித்தபடி மகாமகக் குளத்தில் மூழ்கினார்களென்றால் இன்னும் பல மாமாங்கங்களுக்கு இத்தேசத்தின் ஒருமைப்பாடு பற்றிக் கவலை இல்லை என்ற நம்பிக்கையைத்தான் அது ஊட்டியது. இறைவன் திருவுள்ளமும் அதுவாகவே இருக்கட்டும்.

கும்பகோணம் ஸ்ரீமடத்துக்கருகிலுள்ள காவேரியில் பகவத் படித்துறையில் நீராடிய பக்தர்கள்





ஆவலைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்பதற்காகவே, அது பிரயாணிகளுக்கான விமானத் தளம்தான் என்றபோதிலும் ஒருசில சிறிய போர் விமானங்கள் இருந்தன.

''மோஷே! மோஷே!'' என்றேன் நான்.

''அப்படியென்றால்?'' கேள்விக் குறியை முகத்தில் தேக்கிக் கொண்டு கேட்டாள் விமான உபசரணை நங்கை.

''வெல்டன், சபாஷ் என்று அர்த்தம்!''

''என்ன பாஷை அது?''

''யூதர்களின் ஹீப்ரு மொழி!'' என்று கூறி அவளைத் திகைக்க வைத்து விட்டுப் படிகளில் இறங்கி விமான நிலையக் கட்டிடத்தை நோக்கி நடந்தேன்.

மோஷே தயான் இஸ்ரேயில் — எகிப்திய யுத்தத்தில் சக்கைப் போடு போட்டாலும் போட்டார், சென்னை சங்கீத சீசனின் போதுகூட சபாஷ் போட மறந்து ''மோஷே மோஷே'' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

ஏதென்ஸ் நகரை விமானம் நெருங்குகையில் கீழே

# அனுபவம் புதுமை

## கி. ராஜேந்திரன்

கடலில் திட்டுத் திட்டாகப் பல தீவுகள் தெரிகின்றன. பலவற்றில் ஆள் நடமாட்டமே கிடையாது. எந்த விதமான உபயோகமும் இல்லாது போனாலும் விமானத்திலிருந்து பார்க்கையில் வெண் நுரையும் நீலக் கடலும் சுற்றிச் சூழக் காலைக் கதிரவனின் பொன்னொளியில் தகதகத்துக் கண்ணுக்கு இனிய விருந்தளிக்கின்றனவே, அந்த ஓர் உபயோகம் போதாதா?

ஏதென்ஸில் விமானமேறி என் அருகே அமர்ந்து கொண்டவர் ஓர் அமெரிக்கர். கிரேக்க நாட்டில் உள்ள அமெரிக்க விமானத் தளங்களில் விமானங்களை நன்கு பராமரிக்கும் பொறுப்பை மேற்கொண்டிருப்பவர். ஏதென்ஸிலும் அதைச் சுற்றிலுமுள்ள பிரதேசத்திலும் எந்த இடத்தைத் தோண்டினாலும் ஏதாவது பழங்காலத்திய கட்டிடப் பகுதிகளைச் சிதிலமடைந்த நிலையில் பார்க்கலாம் என்றார் அவர். நாளுக்கு நாள் ஆராய்ச்சியாளர்கள் புதிது புதிதாகப் புதை பொருள்களை வெளிப்படுத்திக் கொண்டே இருக்கிறார்களாம்!

''பண்டையக் கலாசாரத்தைச் சிலர் பெருமிதத்துடன் குழி தோண்டி வெளிப்படுத்திக் கொண்டிருக்கையிலேயே இன்றையச் சிறந்த பண்பாட்டைப் பலர் குழி தோண்டிப் புதைத்துக் கொண்டே இருக்கிறார்களே; அதற்கென்ன செய்ய?'' என்று கேட்டேன்.

சரியான எமகண்டத்தில் சென்னையை விட்டு நான் அயல்நாட்டுச் சுற்றுப் பயணத்துக்குக் கிளம்புவது 'இண்டியன் ஏர்லைன்ஸ்' விமான மெக்கானிக்குகளுக்குப் பிடிக்கவில்லை போலும்; வேலைநிறுத்தமே செய்துவிட்டனர்! அவர்களது அன்புள்ளம் வாழ்க!

ஆகஸ்ட் 19ந் தேதி மாலை 2–30 மணிக்குக் கிளம்ப வேண்டிய விமானம் மாலை ஏழரைக்குப் புறப்படும் என்று சொன்னார்கள். கடைசியில் இரவு 8–45க்கு பம்பாய் நோக்கிப் பறக்கத் தொடங்கியது.

பம்பாயிலிருந்து இரவு, இல்லை அதிகாலை 3–40க்கு டி. டபிள்யூ. ஏ. விமானத்தில் ஏறினேன். ஃப்ராங்க்பர்ட்டை அடைவதற்கு முன்னால் வழியில் இஸ்ரேயில் நாட்டின் பிரதான நகரான டெல் அவிவ் விமான நிலையத்தில் விமானம் தரை தட்டத் தொடங்கியபோதே மோஷே தயானின் போர் விமானங்கள் ஏதேனும் கண்களில் தென்படுகின்றனவா என்று பார்த்தேன். என்

நண்பர் சிரித்தார்.

என்னுடைய ஹாஸ்யத்தைக் கேட்டு வேகு நேரப்படாமல் சிரித்து விட்டால் பிறகு விடு வேனு அவரை! ஃப்பிராங்ஃப்பர்ட் சென்று அடையும்வரை பொழுது போனதே தெரியவில்லே.

ஃ ஃ ஃ

ஃப்பிராங்ஃப்பர்ட் விமான நிலையத்தில் இறங்கியதும் (பொதுவாக எல்லா மேனுட்டு விமான நிலையங்களிலும்தான்) முதன் முதலாக அங்கு நம் கவனத்தைக் கவருவது ஒரு துரித கதியில் எல்லாம் நடப்பதுதான். பாஸ்போர்ட்டை நீட்ட வேண்டியதுதான், அடுத்த விநாடி அது நம் கரத்தில் திருப்பித் தரப்படுகிறது. அப்பால் சென்ருல் சரியாக எட்டு நிமிஷங்களுக்குள் நமது பெட்டி விமானத்திலிருந்து இறக்கப்பட்டுச் சுழலும் உருளைகள் மீதாக நகர்ந்து நம்மை நோக்கி வருகிறது. அதைத் தூக்கிக் கொண்டு நடந்தால் சுங்க இலாகாவில் ''சிகரெட், மது'' ஏதாவது இருக்கிறதா என்று கேட்கிருர்கள். ''இல்லே'' என்றதும் ''பெட்டியைத் திற'' என்பதில்லே. நம்மை நம்புகிருர்கள். மேலே போய் விடுகிருேம்.

ஃ ஃ ஃ

காரிலே விமானத் தளத்திலிருந்து நகரை நோக்கிச் செல்கையில் உண்மையாக நாம் விமானத்தை விட்டு இறங்கி விட்டோமா என்ற சந்தேகம் ஏற்படுகிறது. அத்தனே வேகத்தில் கார் பறக்கிறது. ஜன்னல் வழியே நோக்குகையில் விரைந்தோடி மறையும் மரங்கள்தாம் நமக்குப் பூமியில்தான் இருக்கிருேம் என்பதை







உணர்த்துகின்றன. மணிக்கு 150 கிலோ மீட்டர் வேகத்தில் கார் ஓட்டுவது ஜெர்மனியில் சர்வ சகஜமாக இருப்பதற்குக் காரணம், 'ஆட்டோபான்கள்' எனப்படும் முதல்தரமான நெடுஞ்சாலேகள். 'கண்ணுடித் தரையில் வெண்ணெயைத் தடவி அதன் மேல் வழுக்கிக் கொண்டு செல்வது போல்' என்று அமெரிக்காவில் காரில் செல்வதை வர்ணித்து நண்பர் ஒருவர் எழுதிய கடிதம் எனக்கு நினைவு வந்தது.

ஏராளமான பொருட்செலவில் உறுதியாக அமைக்கப்பட்டவை இந்த 'ஆட்டோபான்'கள். காரில் ஏறிப் புறப்பட்டால் வழியில் தடங்கல், இடையூறின்றி வேகத்தைக் குறைக்காமல் செல்ல ஏற்பட்டவை. இடையில் ஒரு சாலே குறுக்கிடுகிறதென்ருல் அங்கு அந்தச் சாலேயைக் கடக்கப் பாலம் அமைக்கப்பட்டுள்ளது. ஆதலால் இடது வலது புறங்களிலிருந்து வரும் கார்களுக்காக நிற்க வேண்டியதில்லே. விபத்துக்களும் நிகழ்வ



தில்லை. மூன்று மூன்று சாரிகளாக எதிரும் புதிருமாகக் கார்கள் விரைகின்றன.

ஹிட்லர் காலத்தில் வேலை வாய்ப்புக்களை அதிகரிப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட திட்டம் இது. யுத்தத்தின்போது போக்குவரத்து வசதிகளின் முக்கியத்துவத்தையும் ஹிட்லர் மனத்தில் கொண்டிருக்கலாம். பிற்காலத்தில் இந்த ஆட்டோபான்கள் தொழில் — வியாபாரத் துறைகளில் போக்குவரத்து அதிகரிக்க வழி வகுத்து ஜெர்மனியின் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பெரிதும் உதவியுள்ளன.

ஃ ஃ ஃ

உழைப்புக்கு அஞ்சாத மக்கள் ஜெர்மானியர் என்பதை நான் ஜெர்மனியில் காலடி எடுத்து வைத்த சில நிமிஷங்









படங்கள்: மேற்கு ஜெர்மானிய நகரங்களான ஃபிராங்க்பர்ட், மியூனிக், ஹாம்பர்க் ஆகியவற்றின் சில தோற்றங்கள். மியூனிக்கில் உள்ள கலைக்கூடத்தை அலங்கரிக்கும் சில அழகிகளையும் வலப்புறம் காண்கிறீர்கள்.

---

களுக்குள்ளேயே உணர்ந்து கொண்டேன். என்னை விமான நிலையத்தில் சந்தித்து அழைத்துப் போக ஜெர்மன் பத்திரிகை — தகவல் இலாகாவிலிருந்து இளைஞர் ஒருவர் வந்திருந்தார். விமானத்திலிருந்து எனது பெட்டி இறக்கப்பட்டு வந்ததும் என்னை முந்திக்கொண்டு அதைச் 'சடக்'கென்று தூக்கியபடி, ''போவோமா?'' என்றார். இருபது கிலோ எடையைத் தூக்குவது ஒருபுறம் இருக்கட்டும்; போர்ட்டர் உத்தியோகம் என்று அதைக் கருதவில்லையல்லவா? இப்படி உடலால் உழைப்பதாலும் அறிவால் இயங்குவதாலும் முழு மனத்துடனும் முழு மூச்சுடனும் செயல்படுவதாலும்தானே இரண்டாவது உலக யுத்தத்தின் முடிவில் தரை மட்டமாகி விட்ட ஜெர்மனியைச் செல்வம் கொழிக்கும் நாடாக அவர்களால் மீண்டும் உயர்த்த முடிந்திருக்கிறது? அத்துடன் தொழில் வர்த்தகத் துறைகளில்



தனி மனிதர்கள் சுதந்திரமாக ஈடுபட அனிக்கப்பட்ட ஆக்கமும் ஊக்கமும் சேர்ந்து கொண்டது.

ஃ ஃ ஃ

ஃபிராங்ஃபர்ட் நகரிலிருந்து க்ரான்பர்க் சற்றுத் தொலைவில் இருக்கிறது. பிரும் மாண்டமான ஃபிராங்ஃபர்ட் ரயில் நிலையத்தில் டிக்கட் வாங்கிக் கொண்டு மின்சார ரயிலில் சென்றேன். வழியெல்லாம் மாறி மாறி வயல்களும் தொழிலகமும், தோப்பும் தொழிலகமுமாகத் தென்பட்டன. தொழில் வளம் எழில் வளத்தினூடே தெரிந்தது.

ஜெர்மனி இரண்டாகப் பிரிந்த பின்னர் நல்ல விவசாய நிலங்களெல்லாம் கிழக்கு ஜெர்மனிக்குப் போய்விட்டன. ஆகவே, இன்று மேற்கு ஜெர்மனி பெருமளவுக்கு உணவு இறக்குமதி செய்கிறது. இருப்பினும் துண்டு நிலமும் வீணாகாமல் பயிரிட்டுப் பயனடைகிறார்கள்.

க்ரான்பர்க்கில் மிக அழகிய ஒரு பூங்கா வனத்தினூடே நடந்து சென்று ஒரு நண்பரின் இல்லத்தை அடைந்தேன். "இங்கு மட்டுமல்ல; ஃபிராங்ஃபர்ட், பெர்லின், மியூனிக் போன்ற பெரிய நகரங்களிலும் பெரிய பெரிய பூங்காக்களுக்குக் குறைவே யில்லை" என்றார் நண்பர். "தொழில் வளம் பெருகப் பெருகக் காற்று அசுத்தமடையும் என்பதால் இந்தப் பூங்காக்களை அமைப்பதிலும் பாது காப்பதிலும் அதிக சிரத்தை காட்டு கிறார்கள்."

ஃ ஃ ஃ

ஃபிராங்ஃபர்ட்டில் மிக உயரமான ஸ்தம்பம் ஒன்றிருக்கிறது. இதற்கு மேலே உச்சியில் உணவு விடுதியும் உண்டு. விசேஷம் என்ன வென்றால் அந்த உணவு விடுதி உள்ள தளம் மட்டும் மெல்லச் சுழன்று வரும். ஆக, ஸ்தூபியின் உயரே போய் உணவு விடுதியில் சாப்பாட்டுக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு உட்கார்ந்தால் உணவருந்தி முடிப்பதற்குள் நாலு முறை ஃபிராங்ஃபர்ட் நகரைச் சுற்றிப் பார்த்திருப்போம்.

இந்த உயரமான ஸ்தூபியைக் கட்டிய வர்கள் ஹெனிங்கர் பீர் உற்பத்தி ஸ்தாபனத்தினர். ஹெனிங்கர் டவர் என்பது ஸ்தூபியின் பெயர். ஸ்தூபியினுள்ளே இருக்கும் இடத்தைப் பீர் தயாரிப்புக்கான தானியங்களைச் சேகரித்து வைக்கப் பயன்படுத்து கிறார்கள்.

பக்கத்திலேயே பிண்டிங் பீர் ஸ்தாபனம் இருக்கிறது. ஸ்தூபி அமைத்ததால் ஹெனிங்கர் பீருக்குக் கிடைத்துள்ள பிராபல்யத்தை எண்ணி பிண்டிங் பீர் ஸ்தாபனத்தார் ஏங்கினார்கள். சட்டென்று அவர்களுக்கு ஒரு யோசனை உதித்தது. தாழ்வான தங்கள் கட்டிடத்தின் மொட்டை மாடியில் பெரிய பெரிய கொட்டை எழுத்துக்களில் "பிண்டிங் பீர்" என்று எழுதி வைத்தார்கள். இப்போது ஹெனிங்கர் டவரில் அமர்ந்து சுற்று முற்றும் பார்ப்பவர்கள் கண்களில் முதலில் பளிச்சென்று தென்படுவது "பிண்டிங் பீர்" விளம்பரம்தான். தாங்கள் ஹெனிங்கர் டவரில் அமர்ந்திருக்கிறோம் என்பதையும் மறந்து அங்கேயே பிண்டிங் பீருக்கு 'ஆர்டர்' கொடுக்கிறார்கள்!

ஃ ஃ ஃ

ஜெர்மனியில் ஹாம்பர்க், மியூனிக் ஆகிய நகரங்களுக்கும் போயிருந்தேன் நான். ஜெர்மனியின் தெற்குப் பாகத்தில் மியூனிக் அமைந்துள்ள பவேரியா பகுதி இன்றும் 'சுதந்திர பவேரியா நாடு' என்றே அழைக் கப்படுகிறது — ஜெர்மனியின் ஓர் அங்கமாக இருந்தபோதிலும் கூட. ஜெர்மனியிலிருந்து பிரிந்து சுதந்திர நாடாகத் திகழ வேண்டும் என்று நினைக்கும் பவேரிய மக்களும் பலர் இருக்கிறார்கள். இதே போலத்தான் பிரிட்டனிலும் வேல்ஸ் தனியாகப் பிரிந்து நிற்க வேண்டும் என்று விரும்பும் பலர் உண்டு. உலகமெங்கணுமே பல நாடுகளிலும் வடக்குக்கும் தெற்குக்கும் இடையே ஒரு போராட்டம் நடப்பது இயல்பாக இருக்கும்போலும்! அமெரிக்காவிலும் கூட உள்நாட்டு யுத்தம் வடக்கு — தெற்கு என்ற அடிப்படையில் தானே நடந்தது!

ஃ ஃ ஃ

பவேரியாவில் ஆல்ப்ஸ் மலைத் தொடரின் முகட்டினைப் பார்த்த நான் அந்நாளைய மன்னர்கள் வாழ்ந்த அரண்மனைகளையும் கண்டேன். வளமான பூமியில் விவசாயம் செழிப்பதையும் வண்ணப் பூஞ்சோலைகளில் எழில் கொழிப்பதையும் ரசித்தேன். மியூஸியங்களுக்குப் போனேன். மாதா கோயில்களுள் நுழைந்தேன். அங்கேயெல்லாம் உள்ள கலை அழகுகளை அள்ளிப் பருகினேன்.

கலை உணர்ச்சியோடு கலை வளர்ச்சிக்காக ஒரு சட்டமே இயற்றி யிருக்கிறார்கள் ஹாம்பர்க் நகரிலே. பெரிதாக எந்தப் புதிய கட்டடம் எழுப்பப்பட்டாலும் மொத்தச் செலவில் இரண்டு சதவிதம் கலை உணர்வுடன் சுற்றுப்புறத்தை அழகுபடுத்துவதற்காக உபயோகப்படுத்த வேண்டும். ஆகவே இன்ஷியூரன்ஸ் காரியாலயமானாலும் சரி, பல்கலைக்கழக மண்டபமானாலும் சரி, பல குடும்பங்கள் வசிக்கும் அடுக்கு மாடிக் கட்டிடமாயினும் சரி, அதனதன் எதிரே ஓர் அழகிய சிற்பம் அல்லது ஒரு பொங்கு புனல் இப்படி ஏதேனும் இருந்து இதயத்தைக் குளிர்விக்கிறது.

ஃ ஃ ஃ

நான் ஏறியிருந்த விமானம் கிளம்பி பெர்லின் நோக்கிப் பறந்தது. கீழே பார்த்தேன். விமானங்கள் போடும் சத்தத்தைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் 'ரன் அவே'க்கு மிக அருகிலேயே பசுமையான பரந்த புல்வெளியில் ஆடுகளும் மாடுகளும் அமைதியாகப் புல் மேய்ந்து கொண்டிருந்தன. "போட்டியும் பொறாமையும் யுத்தமும் கொடுமையும் மனிதர்களிடையேதான்" என்று கொழு கொழுவென்று வளர்ந்திருந்த அந்தக் கால்நடைகள் சொல்வது போல் எனக்குத் தோன்றியது.

(அடுத்த இதழில் பெர்லின் சுவர் பற்றிய கட்டுரை இடம் பெறுகிறது)

# ஹாக்கியில் ஒரு முத்து





விளையாட்டில் வீராங்கனை

**ஹா**க்கி விளையாட்டில் இந்திய கோஷ்டியினர் உலகில் முடிசூடா மன்னர்களாகத் திகழ்கின்றனர். 'நாங்களும் சளைத்தவர்களில்லை' என்று சொல்லிக் கொண்டு பெண்களும் ஹாக்கியில் முன்னேறி வருகின்றனர். புதுதில்லியில் நடந்த ஆசிய ஹாக்கிப் போட்டியில் இந்தியப் பெண்மணிகள் கோஷ்டியினர் கென்யா நாட்டினரையும் இலங்கைக் குழுவினரையும் நிறைய 'கோல்'கள் போட்டுத் தோற்கடித்தனர். செமிபைனல் ஆட்டங்களில் இந்திய நீல கோஷ்டியினர் ஜப்பானிடமும் இந்திய வெள்ளைக் குழுவினர் உகாண்டாவிடமும் தோல்வியடைந்தனர். இவ்வாண்டு புதுதில்லியில் நிகழ்ந்த ஆசிய ஹாக்கி விளையாட்டுப் போட்டிக்குத் தென்னிந்தியாவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு ஆடிய ஒரே பெண்மணி மிஸ் பேர்ள்! (Miss Pearl)

பெண்கள் ஹாக்கி சென்னையில் பிரபலமானது. பெரும்பாலும் ஆங்கிலோ இந்திய சமூகத்தினரே பெண்கள் ஹாக்கி விளையாட்டில் ஈடுபட்டுள்ளனர். பெங்களூரில் பிறந்த மிஸ் பேர்ள் கல்வி கற்றது வேப்பேரியிலுள்ள செயின்ட் அலோஷியஸ் உயர்நிலைப் பள்ளியில். எழும்பூர் ஷாம்ராக் கிளப்பில் பன்னிரண்டாம் வயதிலிருந்தே மிஸ் பேர்ள் ஹாக்கி விளையாடத் தொடங்கினாள். அவளது திறமைக்குப் பரிசாகப் பெரம்பூர் ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலையில் குமாஸ்தா உத்தியோகம் கிடைத்தது.

மிஸ் பேர்ள் பற்றி ஹாக்கியில் தலைசிறந்த ஆட்டக்காரரான ஜாபர் சொல்கிறார்: ''ஹாக்கி மைதானத்தில் துருதுருவென்று ஓடியாடி நன்றாகப் பந்தை அடிக்கும் திறமை மிக்கவள் மிஸ் பேர்ள். ஆண்களான எங்களோடு கூடப் பயமில்லாமல் போட்டி போட்டுக் கொண்டு ஆட வந்து ஆட்டத் திறமையை வளர்த்துக் கொண்டவள்! இந்தியாவுக்கு அகில உலகப் போட்டிகளில் நிச்சயம் புகழ் தேடித் தருவாள்.''

''மிஸ் பேர்ள்! நீங்கள் ஆடிய ஹாக்கிப் பந்தயங்களில் எந்தப் போட்டியை மிகவும் விரும்புகிறீர்கள்?''

''சென்னைக் கோஷ்டிக்கும் ஜப்பான் குழுவுக்கும் நடந்த ஹாக்கிப் பந்தயம் நான் விரும்பிய ஆட்டமாகும். நாங்கள் திறமை மிக்க ஜப்பானிய ஆட்டக்காரிகளை 'கோல்' போட விடாமல் தடுத்து நிறுத்தியதே பெரிய காரியம். அன்று ஆட்டம் வெற்றி தோல்வியின்றி முடிந்தபோது நாங்கள் வெற்றி பெற்றதாகவே எண்ணிக் குதூகலித்தோம்!'' என்று உணர்ச்சியால் குரல் தழுதழுக்கக் கூறினாள் மிஸ் பேர்ள்.

''ஜப்பானிய ஆட்டக்காரிகள் நம் சென்னைக் கோஷ்டியை விட எந்த விதத்தில் உயர்ந்தவர்கள்?''

''நம் சென்னைக் கோஷ்டிக்கு நல்ல ஆட்டத் திறன் இருக்கிறது. ஆனால் ஆட்ட முழுமையும் சளைக்காமல் ஓடியாடும் திடகாத்திரம் போதவில்லை. அதுவே நம்மிடமுள்ள குறை'' என்று விளக்கினாள் மிஸ் பேர்ள். தொடர்ந்து தன் காப்டனைப் பற்றிக் கூறினாள்:

''பின்னிக் கம்பெனியில் பணியாற்றும் எங்கள் காப்டன் பில்லிஸ் ஹிக்கின்ஸ் எங்கள் ஆட்டம் சிறக்க அரும்பாடு படுகிறாள். அவள் நல்ல சென்டர் பார்வர்டு ஆட்டக்காரி. 'கோல்' அடிப்பதில் சாமர்த்தியசாலி. நான் 'லெப்ட் ஹாப்' ஆடுகிறேன்.''

மிஸ் பேர்ளின் அண்ணன் டி. பேர்ள் இந்திய கால்பந்தாட்டப் புலி. மிஸ் பேர்ளின் தந்தை ஒரு டாக்டர். ஓட்டப் பந்தயத்திலும் மிஸ் பேர்ளுக்குப் பயிற்சி இருப்பதால் அவள் ஹாக்கியில் சோபிக்க முடிகிறது.

''சென்னை ஹாக்கி குழுவினராகிய நாங்கள் 1962ம் வருடத்திலிருந்து தேசிய ஹாக்கிப் போட்டியில் கலந்து கொள்ளுகிறோம். ஜெய்ப்பூர், ஜபல்பூர், புனா ஆகிய இடங்களில் நடந்த தேசியப் போட்டிகளில், நாங்கள் 'ரன்னர்கள்'. இன்னும் தேசிய வீராங்கனைப் பட்டத்தைப் பிடிக்க ஓடிக் கொண்டிருக்கிறோம்'' என்றாள் மிஸ் பேர்ள் சிலேடையுடன்.

விரைவில் மலேசியாவிலிருந்து பெண்கள் ஹாக்கிக் குழுவினர் வந்து சென்னையில் ஆடவிருக்கிறார்கள். அந்தக் குழுவினருக்கு எதிராக நன்கு ஆடவேண்டும் என்ற ஆசையில் பயிற்சிக்குப் புறப்பட்டு விட்டாள் மிஸ் பேர்ள். அவள் ஆசை நிறைவேற நாம் குறுக்கே நிற்பானேன் என்று விடை பெற்றுக் கிளம்பினேன்.

— குண்டுமணி

# தமிழ் வலம் வந்த தூதுவர்கள்

## ஆர். ரமணி

சிங்கப்பூரிலிருந்து மாநாட்டுக் கருத்தரங்குக்குப் பிரதிநிதிகளில் ஒருவராக வந்திருந்தவர் இளைஞர் ரமணி. மூன்று தலைமுறைக்கு முன்பே மலேஷியாவில் குடியேறிய தமிழர் குடும்பத்தைச் சேர்ந்தவர். இருபது ஆண்டுகள் கழித்து மீண்டும் தமிழகத்துக்கு வந்திருக்கும் இவர், சூழ்நிலைகளில் எத்தனையோ மாறுதல்களைக் கண்டார். இதேபோல் முதல் அனைத்துலகத் தமிழ் மாநாட்டுக்கும், இந்த இரண்டாவது மாநாட்டுக்கும் இடையே கூட எத்தனையோ மாறுதல்கள் இருப்பதாகச் சொன்னார். 'கோலாலம்பூரில் நடந்த முதல் மாநாட்டிலும் கலந்து கொண்டவர் இவர். 'முந்திய மாநாடு முழுக்க முழுக்க ஆராய்ச்சி மணத்தில் மூழ்கி யிருந்தது. பிந்தியதில் முத்தால்வாசி இடத்தைக் கலை மணம் சூழ்ந்து கொண்டுவிட்டது' என்றார். 'ஏற்பாடுகள் எல்லாம் வெகு பிரமாதம். இப்படி உபசரிப்பார்கள் என்று எதிர்பார்க்கவில்லை' என்றும் சொன்னார்.

சிங்கப்பூரிலுள்ள வானொலி — டெலிவிஷன் நிலையத்தில் இந்தியர்களுக்கான ஒலிபரப்புப் பகுதியில் செயலாற்றும் இவர், அந்த நிலையம் தமிழுக்காக வாரத்துக்குத் தொண்ணூற்றெண்பது மணி அவகாசம் ஒதுக்குகிறது என்பதைத் தெரிவித்தார். சாதாரண மனிதர்கூட டெலிவிஷன் பெட்டி வைத்துக்கொள்ள முடிகிறது. மலிவான டெலிவிஷன் செட் சுமார் ஆயிரத்து முந்நூறு ரூபாய்தானும். இருபது லட்சம் கொண்ட ஜனத்தொகையில் எழுபதினாயிரம் பேருக்கும் மேலாக டெலிவிஷன் பெட்டி வைத்திருப்பவர்களாம்!

மாநாட்டுக் கருத்தரங்கில் 'ஆதிநாள் தமிழ் நகரம்' என்ற தலைப்பில் ரமணி ஒரு கட்டுரை சமர்ப்பித்தார்.

## அருணாசலம் புஷ்பரதம்

நாள் முழுதும் வானொலியில் நேயர் விருப்ப நிகழ்ச்சி மூலம் தமிழ்த் திரைப்படங்களின் இசையில் லயித்து நிற்போர் மொரீஷியஸ் தீவுக்குப் போய்ச் சேர்ந்தால் என்ன செய்வார்கள்? தவித்துப் போவார்கள், தவித்து! ஏன் தெரியுமா? அங்கே உள்ள வானொலி நிலையம் மூலம் வாரம் ஒன்றுக்கு ஒன்றரை மணி நேரம் அதாவது தொண்ணூறு நிமிட அவகாசத்துக்குத்தான் தமிழ் நிகழ்ச்சிகளை ஒலிபரப்புகிறார்கள். அதையும் பங்கு போட்டுச் செவ்வாயன்று ஒரு மணி நேரத்துக்கும் ஞாயிற்றுக்கிழமை யன்று அரை மணி நேரத்துக்கும் ஒலிபரப்புகிறார்கள். இது எந்தக் கர்மத்தில் சேர்ந்தது என்று வியப்படைகிறீர்களா? ஏறத்தாழத் தொண்ணூறு ஆயிரம் தமிழர்கள் வாழும் இந்தத் தீவில், வயது முதிர்ந்த சுமார் நானூறு பாட்டனார் பாட்டிமார்கள் தான் இன்னும் மறந்துவிடாமல் தமிழ் பேசுகிறார்கள். புதிய பரம்பரையைச் சேர்ந்தவர்களெல்லாம் மேலை நாட்டு மொழிகளைத்தான் நடைமுறையில் கையாண்டு வருகிறார்கள்.

1958லிருந்து, கடந்த பத்து வருடங்களாகத்தான் தமிழ் மொழி பற்றிய புதிய விழிப்புத் தோன்றி யிருக்கிறது. பள்ளிக்கூடங்களில் தமிழ் கற்க வகை செய்திருக்கிறார்கள். இருபத்திநாலு பள்ளிகளும் முப்பத்திரண்டு தமிழாசிரியர்களும் இந்தப் பணியில் இணைந்து நிற்கிறார்கள். 'தமிழ் மகா சங்கம்' என்ற சங்கம் ஒன்றையும் தொடங்கி இருக்கிறார்கள். தமிழில் ஆரம்ப பாட புத்தகங்கள் இங்குள்ளவர்களுக்கு எளிதில் கிடைப்பதில்லை.

இந்த விஷயங்களை யெல்லாம் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்குக்கு மொரீஷியஸ் தீவுப் பிரதிநிதியாக வந்திருந்த அருணாசலம் புஷ்பரதம்

திரு ஆர். ரமணி



திரு அருணாசலம் புஷ்பரதம்



விவரமாக எடுத்துரைத்தார். அவர் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றுவதோடு வானொலியில் தமிழ் அறிவிப்பாளராகவும் இருக்கிறார்.

லண்டன் சர்வகலாசாலையில் பி.ஏ. பட்டம் பெற்றிருக்கும் இந்த முப்பது வயது இளைஞர், மொரீஷியஸ் தீவில் தமிழ்க் கல்வித் துறை இயக்குநராகவும், ஆசிரியர் பயிற்சி வகுப்பு போதகராகவும், தமிழ் மகாசங்கத்தின் உதவி காரியதரிசியாகவும், பல பணிகளை மேற்கொண்டிருக்கிறார்.

ஊர் திரும்புமுன் தென்னகத்தில் சில மாத காலம் தங்கியிருந்து மேலும் பயிற்சி பெறத் திட்டமிட்டிருக்கிறார்.

## இந்தோனேஷியப் பிரதிநிதிகள்

“நாங்கள்தான் இந்தோனேஷியாவிலிருந்து மாநாட்டுக் கருத்தரங்குக்குப் பார்வையாளர்களாக வந்திருப்பவர்கள்” என்று மூன்று நபர்கள் தங்களை ஏககாலத்தில் ஒரே குரலாக அறிமுகப்படுத்திக் கொண்டார்கள். எல்லோருமே தமிழகத்திலிருந்து இந்தோனேஷியா போய், அங்கு வடசுமத்திரா பகுதியிலுள்ள 'மெடான்' என்னும் நகரத்தில் குடியேறியிருப்பவர்கள். செட்டிநாட்டுப் பகுதியைச் சேர்ந்த சீனிவாசன் அங்கு சொந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார். சிதம்பரம் பகுதியைச் சேர்ந்த கல்தான் மரைக்காயர் அங்குள்ள சர்வகலாசாலையில் ஆசிரியராக இருக்கிறார். வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த முனியாண்டி அங்கு ஒரு வியாபாரியாக இருக்கிறார். இந்த மூவரில் முனியாண்டி ஒருவர்தான் முதல் தடவையாகப் பாரதத்தின் மண்ணை மிதிப்பவர். அவருடைய முன்னோர்கள் வெகு நாட்களுக்கு முன்பே இந்தோனேஷியவாசிகளாகி விட்டார்கள்.

“தமிழகப் பத்திரிகைகள், செய்தித்தாள்கள் எல்லாம் எங்களுக்குச் சுலபமாகக் கிடைப்பதில்லை. காரணம் நாணயமாற்றுச் சிக்கல்கள்தான்! இந்தியா கௌன்சில் அலுவலகத்தின் மூலம் ஐந்து ஐந்து பிரதிகள் சாவகாசமாக வருகின்றன. அவைகளைத்தான் நாங்கள் எங்களுள் பரிமாறிக் கொண்டு படிக்கிறோம்! தமிழ்ப் புத்தகங்களுக்கும் இந்த நிலைதான்” என்றார் சீனிவாசன். அவர் அங்குள்ள பல ஹிந்துமத ஆலயங்களுடன் தொடர்பு உள்ளவர். மாரியம்மன் கோவில், காளியம்மன் கோவில், சுப்பிரமணியர் கோயில், தண்டாயுதபாணி கோயில் போன்ற பல ஆலயங்கள் அங்கு உள்ளன. தண்டாயுதபாணி கோயிலின் வாகனங்கள் அனைத்துமே தங்க வாகனங்கள்.

முனியாண்டி மாரியம்மன் கோயில் செயலாளராகவும் பணியாற்றுகிறார். சொந்த முறையில் திருவள்ளுவர் தமிழ்ப் பள்ளி என்ற பாடசாலையையும் நடத்தி வருகிறார். இந்தோனேஷியாவில் மொழிக்கு முக்கியத்துவம் கிடையாது. மதத்துக்குத்தான் முக்கியத்துவம். ஹிந்து மதத்துக்கு, இஸ்லாமிய மதத்துக்கான அத்தனை சலுகைகளும் உண்டு. மாரியம்மன் கோயில் நிர்வாகத்துக்குச் சில புத்தகங்கள் உடனடியாக வேண்டுமென்றால் அரசாங்கம் அதற்கு ஆவன செய்யும். ஆனால் தமிழ் வளர்க்கச் சில புத்தகங்கள் தேவை என்றால் அரிச்சுவடிப் புத்தகத்தை வரவழைக்கக்கூடப் பல சிக்கல்கள் உண்டு.



திரு டி. சீனிவாசன்

ஜனாப் கல்தான் மரைக்காயர்

திரு ஆர். முனியாண்டி

தென் பாரத முஸ்லீம்கள் அங்கு இரண்டு பள்ளி வாசல்கள் நடத்துகிறார்கள். அதன் நிர்வாகத்தில் கல்தான் மரைக்காயருக்கு நிறைய பங்கு உண்டு.

பாஸா (Bahasa) என்னும் மொழிதான் இந்தோனேஷியாவின் தேசிய பாஷை. கல்வி அறிவு இல்லாதவர்கள் அங்கு வெகு குறைவு. தமிழர்கள், ஏறத்தாழ எட்டாயிரம் பேர் சுமத்திரா பகுதியில் வாழ்கிறார்கள். புத்தகங்கள் பற்றாக்குறையினால் பேச்சு வழியாகவே குழந்தைகளுக்குத் தாய் மொழிப் போதனை நடத்துகிறார்கள்.

இந்தோனேசிய மொழியில் 'குயில்' என்றால் கோவில் என்றுதான் பொருள். 'நெகரா' என்றால் நகரம் என்றுதான் பொருள்.

தமிழும் வடமொழியும் அந்தக் காலத்திலேயே நிறைய இந்தோனேசிய மொழியில் இடம் பிடித்திருக்கின்றன போலும்!

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்!

பரிசுத்தந்தரும், வாயில் நறுமணம்கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல்துலக்குங்கள்

நீங்கள் பற்பொடியை விரும்பினால் இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம்.
ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.







DC. G. 35 TAM

...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் கிரீமையே வாங்குகிறார்கள்.



# பொன்னிவனத்துப் பூங்குயில்

## கொத்தமங்கலம் சுப்பு

### அத்தியாயம் 8

### "மாதேவன் பெரிய கோவில்"

**போ**ரிலும் ஐம்பெரும் பூதங்கள் உண்டு. நிலம், நீர், தீ, வான், காற்று ஆகிய ஐந்தையும் பெரிய பூதங்களாகவே போரில் காணலாம். மாட மாளிகைகளை இடித்து நிலமாக்குதல், தோற்றவர்களின் தலைகளைக் கொய்து, தரையெங்கும் செந்நீர் ஓடச் செய்தல், கொள்ளையடித்து நகரங்களையே தீயிட்டுக் கொளுத்துதல், அந்தப்புரப் பெண்களைச் சிறைப் பிடித்து அவர்கள் அழுகுரல் வானமெங்கும் பரவச் செய்தல், காற்றிலே பிண நாற்றம் நாறச் செய்தல் ஆகியவைதான் அவை. இந்தப் பழங்காலக் கொடுமைகளை இப்போது நாம் செய்வோமா? நாம் நாகரிகம் மிகுந்தவர்கள் அல்லவா! ஒரே அணுகுண்டினால் அத்தனையும் செய்து விடுகிறோம். முன்சொல்லிய போருக்கு, 'ஹரஹர மஹாதேவ்' என்பதைப் போர்க் கோஷமாகக் கொண்டிருந்தார்கள் மராட்டியர்கள். உப்பரிகையின் மேல் நின்ற ஏகோஜியின் வாயிலிருந்து அந்தக் கோஷம் முழங்கியவுடன், அத்தனை வீரர்களும் போருக்கு ஆயத்தமாயினர். உருவிய வாள்களின் ஒளியில் ஆதவ

னுக்கே கண்கள் கூசின. அண்டங்கள் நடுங்கின. அத்தனை பேரும் ஏகோஜியின் உத்தரவுக்காக அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் அவரோ தென்மேற்கையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் ஆவேசத்துக்குப் பதிலாக, பரவசம் இருந்தது. அவர் கரங்கள் தாமே உயர்ந்து வணங்கின. மறுமுறையும் 'ஹரஹர மஹாதேவ்' என்றார். நேற்று வரை இன்னல்களுக்கே காரணமாக இருந்த அந்தப் புனிதச் சொல் இன்று இறைவன் பெயராகவே மாறியது. போர்க் குரல் புனிதமாகியது. அந்த மாற்றத்தைச் செய்தது எது? அதுதான் தஞ்சைப் பெரிய கோயில்.



''ரகுநாத். அதோ தெரிகிறதே அது என்ன?'' என்று மகாராஷ்டிர மொழியில் தம் பக்கத்தில் நிற்கும் துவிபாஷிடம் வினவினார்.

''அது பெரிய கோயில்'' என்றார் ரகுநாத். உலகத்திலேயே இதுதான் பெரிய கோவில் என்று ஏகோஜி அப்பொழுது நினைத்தார். பிரம்மாண்டமானதும் பிறமொழியினர் கற்பனைக்குக்கூட எட்டாததும் ஆகிய தஞ்சைப் பெரிய கோயிலைக் கண் முழுவதிலும் நிரப்பிக்கொண்டார் ஏகோஜி.

கடலையும், கங்கையையும் பிரதட்சணம் செய்ய முடியுமா? அது முடியாது என்பதற்காகத் தான் தம்மைத் தாமே வலம் வரும் வழக்கத்தை நாம் கையாளுகிறோம். ஏகோஜி பெரிய கோயிலை வலம் வர எண்ணினார். உப்பரிகையிலிருந்தே வலம் வர முடியுமா?

பிரதட்சணமாகத் தம்மைத் தாமே ஒருமுறை சுற்றிக் கொள்ளத் திரும்பினார். அங்கொரு கோபுரம்; மேலும் சுற்றத் திரும்பினார்.

அங்கும் ஒரு நான்மாடக் கோயில். வடக்கே திரும்பினர். அங்கும் ஒரு கோபுரம் தரிசனம் அளித்தது. கிழக்கே திரும்பினர். அங்கும் ஒரு கோயில். நாம் எங்கே இருக்கிறோம்? இது பூலோகமா, கைலாசமா என்று அவர் எண்ணியபோது அவர் கண்களிலிருந்து ஆனந்தவெள்ளம் அருவிபோல் கொட்டியது. துகாராமும் ஏகநாதரும் நாமதேவரும் அவர் கண்களில் மாறி மாறி வந்து காட்சி யளித்தனர். ஆஜானுபாகுவான அவர் உடல் துடித்தது. பாதங்கள் நர்த்தனம் செய்தன. தூக்கிய கரங்கள் தாளமிட்டன. ஏகோஜி ஒருவனாக நின்றார். இறைவனோடு ஒன்று கலந்தார். அவரது பகைவரவு பக்த விஜயமாக மாறியது. அப்போது ராஜராஜ சோழ மன்னர் பெருமானே வான வீதியில் நின்று ஏகோஜியை ஆசிர்வாதம் செய்தது போல் 'டாண் டாண்' என்று பெரிய கோவிலின் கண்டாமணி ஓசை முழங்கியது.

மஹாதேவன் என்றால் பேரருளாளன் என்று பொருள். தஞ்சைப் பெருவுடையாருக்கு மூன்று முழமும் ஒரு சுற்று; முப்பது முழமும் ஒரு சுற்று என்று சொல்வார்கள். அந்தப் பெருவுடையாரின் திருவுள்ளம் ஏகோஜியை ஆட்கொண்டு விட்டது. தஞ்சையைக் காப்பாற்றியது.

கீழே இறங்கி வந்த ஏகோஜி முதலில் போட்ட உத்தரவு என்ன? ''அந்தப்புரத்தைச் சிறைப்பிடிக்க வேண்டாம். அரசனே புதிது. அந்தப்புரம் கிடையாது. கஜானாவைக் கொள்ளையிட வேண்டாம். பழைய பண்பாடுகள் எதையும் அழிக்க வேண்டாம்'' என்பதுதான்.

சில நாட்கள் அங்கு தங்கிப் புதிய அரசன் செங்கமலதாஸிடமிருந்து விஜயபுரி சுல்தானுக்குச் சேர வேண்டிய கப்பத்தை வசூலிப்பதற்காகக் காதர், அகமது அலி என்ற மந்திரிமார்கள் இருவரையும் பொறுப்பேற்கும்படி செய்தார். இந்தச் சமயத்தில் ஏகோஜியின் மனைவி தீபாபாய் கருவுற்றிருந்தாள். கணவனும் மனைவியும் ஒவ்வொரு இடத்தையும் சுற்றிப் பார்ப்பார்கள். அது என்ன, இது என்ன என்று அக்கறையுடன் கேட்பார்கள். ஒருநாள் அரண்மனைக்குள்



ஒரு பகுதியில் கலைவாணியின் கொடி ஒன்று பறப்பதைக் கண்டார். ஒரே அரண்மனைக்குள் வெவ்வேறு மாதிரியான இரு கொடிகள் பறப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தார். பிறகு விசாரித்தார். இந்த இடத்தின் பெயர் ''சரஸ்வதி மஹால்'' என்றும், நாயக அரசர்கள் அருங்கலை நூல்களை அங்கு சேகரித்து வைத்துள்ளார்கள் என்றும் அறிந்தார். ''அவை பாதுகாக்கப்பட வேண்டும்'' என்று உத்தரவிட்டார்.

ஒரு நாள் ஓர் இடிந்த பகுதியின் பக்கத்தில் அவர் நடந்து கொண்டு இருக்கும்பொழுது ஏதோ ஒரு மரத்தின் வேர் காலில் தட்டியது போலிருந்தது. குனிந்து பார்த்தார். அது வேரல்ல. ஏதோ ஓர் உலோகம் உருகித் தரையில் ஓடியிருந்தது. தம் ஆட்களை விட்டு அதைப் பெயர்த்தெடுக்கச் சொன்னார். அத்தனையும் தங்கப் பாளங்கள். இந்த மண்ணில் தங்கம் இருக்கிறதோ என்ற ஆசை வந்தது. ஆட்களை விட்டு இடிபாடுகளை அகற்றச் சொன்னார். அங்கு அவர் கண்டது என்ன? வெடித்துச் சிதறிக் கிடந்த மரகதக் கற்களும், தீயினாலும் சுட முடியாத சில மாணிக்கங்களும் கிடைத்தன. மேலும் ஆராய்ந்தார். அங்கு உடையாத சில கைவளையல்களும், நடுவில் பொட்டுடன் கூடிய கருகமணி வடமும் கிடைத்தன. ஏகோஜியின் உடல் முழுதும் வியர்த்தது. அங்கு மேலும் பல தாலிகள் அகப்படவே இது ஏதோ புனித இடம் என்று எண்ணி விசாரித்தார். முந்நூறுக்கு மேற்பட்ட கற்பரசிகள் கனலில் குளித்த இடம் என்று அறிந்தவுடனே அந்த மாவீரரும் அவர் மனைவியும் அந்த இடத்தை வணங்கினார்கள். அங்கு ஒரு பிருந்தாவனத்தை அமைக்கச் செய்து, அந்த இடத்தின் அருகில் யாரும் காலணி அணிந்து வரக் கூடாது என்று உத்தரவிட்டார்.

அன்றிரவு வெகு நேரம்வரை அவரும் அவர் மனைவியும் உறங்கவே இல்லை. சீதை முதல் இந்தப் பெண்மணிகள் வரை பாரத நாட்டின் ஸ்திரீ தருமம் வளர்ந்து வரும் பண்பை எண்ணி எண்ணிப் பூரித்தார். பொழுது விடிய ஒரு ஜாமம் இருக்கும். திடீரென்று ஒரு பூவாடை அவர்கள் முகத்தில் வந்து மோதியது. அப்போதே அலர்ந்த மலரின் மணம். அந்த வாசனையில் அவர் மனைவி தீபாபாய் மருண்டாள். இது பத்தினிப் பெண்கள் மடியிலே கட்டிக் கொண்டு தீக்குளித்த மலர்களின் மணம்தான் என்று எண்ணினாள். ஏதோ கால் சலங்கைகள் சப்தப்படுத்துவது போலவும், மெட்டி குலுங்குவது போலவும், பெண்கள் பெருமூச்சு விடுவது போலவும், சிறுசிறு ஒலிகள் கேட்டுக் கொண்டு இருந்தன. ''ஹே ராம்'' என்று பயந்து அலறினாள். உடனே தன் கணவனிடம், ''இனி இங்கு ஒரு கணமும் இருக்கக் கூடாது! எனக்கு பயமாக இருக்கிறது'' என்று கெஞ்சினாள்.

இரக்கமின்றிப் படைக்களத்தில் எத்தனையோ தலைகளைக் கொய்த அந்த வீரன் தம் மனைவியின் சொல்லைக் கேட்டு, தாமும் பயந்தார். இந்தப் பயத்தால் அவளுடைய கரு சிதைந்து விடுமோ, நிறை கர்ப்பிணி ஆயிற்றே என்று கலங்கினார். இதைப் பார்த்துக் கொண்டே அதிகாலையில், கோடிக்கணக்கான மலர்களை மலர்வித்த ஒரு பன்னீர் மரம் கலகலவென்று சிரித்தது. மறு நாள் காலை பீஜப்பூர் சுல்தானின் மந்திரிகள் இருவரையும் தஞ்சையில் வைத்து விட்டு, ஏகோஜி தமக்கு அளிக்கப்பட்ட கும்பகோணம் ஜாகிரை நோக்கிப் புறப்பட்டார்.

அவர் மதவெறி பிடித்தவர் அல்ல. தாம் இந்துவாயினும் முஸ்லீம்களை மதிப்பவர். முஸ்லீம் துறவி ஒருவரின் அருளாசியால்தான் அவருடைய தந்தை பிறந்தார். அந்தத் துறவியின் நினைவாகவே அவருக்கு 'ஷாஜி' என்று பெயர் சூட்டினார்கள் என்பதையும் அறிந்தவர். ஆதலால் தாம் இங்கு இல்லாத நேரத்தில் விஜயபுரி மந்திரிகள் கோட்டைக்குள் தங்கினால் அவர்கள் தொழுகை நேரமும், பூஜை மணியும் மோதிக் கொள்ளும் என்ற கருத்தில் கோட்டைக்கு வெளியே அவர்களைத் தக்க வசதியுடன் தங்கச் செய்து விட்டுப் பல்லக்கில் புறப்பட்டார்.

கூடவே பல்லக்கில் வந்த மனைவி படாத பாடு பட்டாள். பயம் அவளை ஆட்டிக் கொண்டிருந்தது. ''நான் பிழைத்து ஊருக்குப் போவேனா?'' என்று கேட்டாள். அதற்கு மேல் பல்லக்கில் உட்கார்ந்திருப்பதற்கு ஏகோஜிக்கு மனம் வரவில்லை. ''இங்கேயே தண்டு இறங்குங்கள்'' என்று உத்தரவிட்டார். இதற்குள் எட்டு நாழிகை தொலைவு வழி வந்துவிட்டார்கள். அவர்கள் தண்டு இறங்கிய இடம் கொள்ளிடக் கரையில் உள்ள திருமழபாடி.

பல்லக்கை விட்டுக் கீழே இறங்கிய ஏகோஜி தெற்கே திரும்பினார். நெடுந் தூரத்துக்குக் கடல்போல் கொள்ளிடம் தெரிந்தது. தம் கூட வந்த மருத்துவரிடம் தம் மனைவியை நன்கு கவனிக்க உத்தரவிட்டுவிட்டு நிம்மதியைத் தேடித் தெற்கு நோக்கி நடந்தார். அவர் மனத்தில் பின்வருமாறு எண்ணங்கள்

ஓடின. 'நதியைத் தாண்டலாம். விதியைத் தாண்ட முடியுமா? எதிரி களை வெல்லலாம். எமனை வெல்ல முடியுமா? நூறு காதங்கள் தாண்டி வந்தேன். வேறு நாட்டில் புகுந்தேன். வெற்றி கிடைத்தது என்று மகிழ்ந் தேன். இத்தனை வெற்றியும் எதற்கு? என் மனைவியின் கண்ணீர் என்னை என் னென்னமோ செய்கிறதே. அவள் துணையைப் போல அரசன் துணை யாகுமா?' என்று எண்ணிக் கொண்டே நடக்கும்போது அங்கே ஒரு போர்க் கோலத்தைக் கண்டு திரும்பினார். திடீ ரென்று யானையின் மணிகள் அடித் தன. யானையின்மேல் அரசர்கள்தான் போருக்கு வருவார்கள். இங்கு எந்த அரசன் போருக்கு வருகிறான்? என்று அவர் திரும்பியபோது யானையின் மேல் ஒரு வெண் கொற்றக்குடை தெரிந்தது. குடை நிழலில் யாரோ ஓர் அரசன் அமர்ந்திருக்கிறான் என்ற எண்ணத்தில் அந்த யானையை ஏறிட்டுப் பார்த்தார். அங்கு அரசன் இல்லை. ஒரு நிறைகுடம் நன்றாகத் தேய்க்கப்பட்டு அதில் நீரை எடுத்து வைத்துக் கொண்டு ஓர் ஆதி சைவர் அமர்ந்திருந்தார். பக்கத்தி லிருந்த நான்கு நாதஸ்வரக்காரர்கள் ஓர் அருமையான பாடலை வாசித்தார்கள்.

**பொன்னார் மேனியனே**
**புலித்தோலை அரைக்கசைத்து**
**மின்னார் செஞ்சடை மேல்**
**மிளிர் கொன்றை அணிந்தவனே**
**மன்னே, மாமணியே**
**மழபாடியுள் மாணிக்கமே**
**அன்னே உன்னையல்லால்**
**இனி யாரை நினைக்கேனே**

என்ற பாடல் கேட்டது.

''இறைவா! எனக்கும் ஒரு மாணிக் கம் இங்கே கிடைக்க வேண்டும்'' என்று எண்ணினார். எண்ணிக் கொண்டே தம் குதிரை மீதேறி எங்கே செல்லலாம் என்று யோசித்தார். அப்போது அவர் கண்களுக்கு ஒரு பெரிய கோயில் தெரிந்தது.

''இது இந்த ஊருக்குப் பெரிய கோயிலா ?'' என்று கேட்டார்.

''ஆம். சோழ மன்னர் இராஜ இராஜ சோழரின் மனைவி திருலோக மாதேவியார் கட்டிய கோயில் இது'' என்ற பதில் கிடைத்தது.

''கணவன் ஒரு கோயில் கட்டினான். அதற்குப் போட்டி போட்டுக் கொண்டு மனைவி ஒரு கோயிலைக் கட்டி இருக்கிறாள்'' என்று வியந்தார். அப் போது பரிசல் ஓட்டிகளின் இனிய பாட லொன்று கேட்டது.

**ஆறிரண்டு காவேரி**
**அதன் நடுவே சீரங்கம்**
**ஐயாறு மாலையிடும்**
**அதன் நடுவே கைலாசம்**

**பூலோக கைலாசத்துக்குப்**
**போவோம் வாங்க ஐலேசா**

**பொன்னியாறு கடக்கும் ஓடம்**
**போவோம் வாங்க ஐலேசா**

**பூப்போலே மிதந்து போகும்**
**புதுப் பரிசல் ஏலேலோ ?**

**புண்ணியந்தான் கூலி வேண்டாம்**
**போவோம் வாங்க ஏலேலோ**

**இந்திரனின் ஐந்தருவே எங்கள் திருவையாறு**
**இளமதனின் மலர்க்கணையே எங்கள்**
**திருவையாறு**
**ஐவிரலாலும் அன்னை அள்ளியூட்டும் சோறு**
**ஐம்பெரும் காப்பியத்தின் ஆத்தா**
**திருவையாறு**

**பஞ்சநடை தானமிடும் பஞ்சநதம் பாரும்-பூசப்**
**படித்துறையில் நீராடிப் பழவினையைத் தீரும்**
**அஞ்சலதே இல்லையென்ற அப்பருக்கும் அப்பம்**
**தன்னை ஆட்கொண்ட**
**அய்யாரப்பன் வாசலிலே அடிபணிவோம்**
**வாரும்.**

உடனே அவர் திருவையாற்றை நோக்கி மருவூர் வழியாகச் சென்றார்.

அவர் கோயிலில் நுழையும் போது எங்கிருந்தோ குங்கிலிக மணம் கமழ்ந்தது.

ஓடிப் போய்ப் பார்த்தார். அங்கு ஒரு வட்டக் கிணறு. அந்த வட்டக் கிணற்றிலே சாம்பிராணியும் குங்கிலி யமும் எரிந்து கொண்டே இருப்பதைக் கண்டார். 'ஒவ்வொரு மனிதனும் தன் னுடைய அரிய சம்பாத்தியத்தில் ஒரு பணத்தையும் அரைப் பணத்தையும் இப்படி இறைவன் முன் கொளுத்து கிறார்களே !' என்று எண்ணினார். ஆம், இவர்கள் பழங்குடி மக்கள். வேற்று நாகரிகம் கலவாதவர்கள். பண்பு நிறைந்தவர்கள். இவர்கள் பணத்தைத் துச்சமாக மதிப்பதற்குப் பிறவியிலிருந்தே இவ்வாறு கற்றுக் கொள்கிறார்கள். அதனால்தான் தாங்கள் சம்பாதித்த பணத்தை இறைவன் முன்னே எரித்து மனமுடையவர்க ளாக ஆகிறார்கள்.

கோயிலுக்குள் அவர் சென்றுகொண் டிருக்கும்போது நெற்றியில் திருநீறு தவழ, மேலே உள்ள அங்கவஸ்திரத்தை இடுப்பில் கட்டிக் கொண்டு பல ஆண் களும், நெற்றியில் குங்குமத் திலகம் தவழ ஆசாரசீலர்களாகப் பல பெண்க

ளும் ஐயாரப்பனை வலம் வந்து கொண்டிருப்பதைக் கண்டார். ''அடேயப்பா! இந்த மக்கள்தான் எத்தனை நிம்மதியோடு வாழுகிறார்கள். பார்வைக்கு ஏழைகளைப் போலத் தோன்றினாலும் பக்திச் செல்வம் உடையவர்களாக இருக்கிறார்களே!'' என்று ஆச்சரியப்பட்டார். அங்கிருந்த சிற்பங்கள் முதலில் அவரைக் கவர்ந்தன. ''இந்தச் சிற்பங்கள் செய்து எத்தனை ஆண்டுகள் இருக்கும்?'' என்று கேட்டார்.

''கிட்டத்தட்ட அறுநூறு ஆண்டுகள் ஆயின!'' என்றார் அங்கிருந்தவர்.

அறுநூறு ஆண்டுகளாக அன்று செய்த பேணி அழியாமல், உருக் குலையாமல் இருக்கும் சிற்பங்களைப் பார்த்து அவர் சிரித்தார். இதைப் போன்ற சிற்பங்கள் அவரது நாட்டிலும் இருந்தன. சோமநாதபுரத்திலும் காசியிலும் திகழ்ந்த கோயில்களும் சிற்பங்களும் முகலாயர்களின் படையெடுப்புக்களின் காரணமாகச் சிதைந்து அலங்கோலமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தன. இந்த எண்ணம் அவருக்குத் திருவையாற்றுக் கோயிலில் வந்தவுடனே அவர் சிரித்துக் கொண்டார். சந்நிதிக்குச் சென்றார்.

''இது யாருடைய லிங்கம்?'' என்று கேட்டார்.

''சிவ்ஜி'' என்றார்கள் அவர்கள்.

''சிவ்ஜி'' என்று சொன்ன மாத்திரத்தில் அவருக்குத் திரியம்பகத்தின் ஞாபகம் வந்தது. திரியம்பகேசுவரரின் கோயிலுக்குச் சென்று விட்டார் அவர். அங்கே இருக்கின்ற புலித் தோலை அரைக்கசைத்த சிவபெருமானது திரு உருவம் அவருக்குக் காட்சியளித்தது. நாமம் வேறாயினும் நாடு ஒன்றாகவே இருப்பதைக் கண்டார். உள்ளங்கால் முதல் உச்சந் தலை வரையில் அவர் பக்திப் பரவசமாக நின்றார். நின்று கொண்டே, ''இறைவா! எங்கள் நாடு கோயில்களுக்கும் நதிகளுக்கும் பெயர் பெற்றது. அங்கு ஓடுகின்ற சந்திரபாகா நதியின் கரையில் நிற்கின்றான் பாண்டுரங்கன். பாண்டுரங்கனைத் தரிசித்திருக்கின்றேன். அங்கே துளஜாபவானி துளாஜாப்பூரில் அமர்ந்திருக்கிறாள். அவளையும் கும்பிட்டிருக்கிறேன். ஆனால் இங்கு அத்தனை தெய்வங்களையும் ஒன்றாக அமைத்து, அரண்மனையைக் காட்டிலும் பெரியதாகக் கோயில்களைக் கட்டி அரண்மனை விழுந்துவிடும், ஆனால் ஆலயங்கள் என்றைக்கும் நிற்கும் என்ற உண்மையை உலகுக்குக் காட்டிய மன்னர்கள் இருந்திருக்கிறார்கள்'' என்று இறைவனிடத்திலே தம்முடைய மனத் திருப்தியைத் தெரிவித்துக் கொண்டார். இந்தியாவின் பிற பகுதிகளில் உள்ள ஆலயங்களைக் காட்டிலும் தமிழ் நாட்டில்தான் கோயில்கள் அதிகம், என்று அவருக்குத் தெரியாது. அம்பிகையின் கோயிலுக்குள்ளே நுழைந்தார். அழகுத் திருஉருவில் அறம் வளர்த்த நாயகி நிற்பதைக் கண்டார். மண்டியிட்டு வணங்கினார். பக்கத்திலிருந்தவர்கள் நகைத்தார்கள்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''மண்டியிட்டு வணங்குவது இந்நாட்டு வழக்கமல்ல. சாஷ்டாங்கமாக விழுந்து வணங்க வேண்டும்'' என்றார்கள்.

அவர் தாம் மன்னர் என்பதையும் மறந்து நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார். வணங்கி அம்பிகையின் முன் நின்று கொண்டே யிருந்தார்.

*The following particulars regarding the ownership of the 'KALKI', the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.*

FORM IV

1. *Place of Publication:* Madras
2. *Periodicity of its Publication:* Weekly
3. *Name of Printer and Publisher:* R. Ananthanarayanan
   *Nationality:* Indian
   *Address:* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10
4. *Name of Editor:* T. Sadasivam
   *Nationality:* Indian
   *Address:* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10
5. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital.*

Sri T. Sadasivam, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Srimathi M. S. Subbulakshmi, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri R. Ananthanarayanan, 20, Dr.Guruswami Mudaliar Road,Madras-10. Sri K. Rajendran, 1, Fifth St., New Colony, Lake Area, Madras-34. Sri V.Vaidyanathan, 3, Varadarajalu Naidu Road, Egmore, Madras-8. Sri K. R. Athmanathan, 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10. Sri V. Murali, 275-D, Brock Road, Ayanavaram, Madras-23.

1-3-68 R. Ananthanarayanan,
*Publisher*

''அம்பிகையின் பெயர்?''

''அறம் வளர்த்த நாயகி!''

''அப்படியானால் நாட்டில் வளர்க்க வேண்டியது தர்மம் ஒன்றுதான் என்று இந்நாட்டு மன்னர்கள் கருதி யிருக்கிறார்கள்'' என்று எண்ணினார் ஏகோஜி.

அங்கிருந்து திரும்பினார். கோயிலைச் சுற்றிப் பிராகாரமாக வந்தார். வரும் போது அந்தக் கோயில் கற்களில் ஏதோ எழுதப்பட்டிருப்பதைக் கண்டார். ''இது என்ன எழுத்து?'' என்றார்.

''கல்வெட்டுக்கள்.''

''அப்படி யென்றால்?''

''எழுபது அரசர்கள் இங்கே தர்மம் செய்திருக்கிறார்கள். அவர்கள் தங்கள் தர்மத்தைக் காப்பாற்ற வேண்டும் என்று இங்கே எழுதியிருக்கிறார்கள்.''

''கல்லும் காவிரியும் புல்லும், பூமியும் உள்ள வரையில் இந்தத் தர்மங்கள் காப்பாற்றப்பட வேண்டும். சூரியன் கிழக்கே உதித்து மேற்கே அஸ்தமனம் ஆகும் வரையில் இந்தத் தர்மங்கள் காப்பாற்றப்பட வேண்டும்'' என்று எழுதியிருக்கிறார்கள்.

''வேறு ஏதேனும் எழுதியிருக்கிறார்களா தங்கள் குலத்தைப் பற்றி?''

''குலத்தைப் பற்றி எல்லாம் முன்னால் எழுதுவார்கள். கடைசியில் இந்தத் தர்மத்தைக் காப்பாற்றுபவர்களுக்கு நான் தலை வணங்குவேன் என்று எழுதுவார்கள்.''

ஏகோஜி என்னமோ எண்ணினார்.

ஆம். அவருடைய நாட்டிலே கற்கோயில்கள் கிடையாது. நமது நாட்டிலோ கற் கோயில்கள் உண்டு. இந்தக் கற்றளிகளை முதலில் கண்டவன் மகேந்திர பல்லவன். மாமல்லபுரத்திலே குடைவரை கோயில்களுக்கு ஒத்திகை பார்த்தான். பிறகு பல கற்றளிகளை உண்டாக்கினான். இந்த நாட்டின் சரித்திரத்தையும் கற்கோயில்களைக் கட்டிய தன் மூலம் அவன் வளர்த்திருக்கிறான். கற்கோயில்கள் இல்லை யென்றால் கல்வெட்டுக்களுக்கு எங்கே போவது ?

இந்த நாட்டின் முதல் கல்வெட்டை உண்டாக்கியவர் ஒரு பெரும் தமிழ்ப் புலவர். ஒரு பெரும் அடியார். அவர் தான் வணக்கத்துக்குரிய திருநாவுக்கரசர் என்கின்ற அப்பர் சுவாமிகள். மகேந்திரபல்லவர் அவரை ஒரு கற்றூணில் கட்டிக் கடலில் தள்ளச் சொன்னார். அவர் அந்தக் கற்றூணிலே நமச்சிவாய மந்திரத்தை வெட்டினார்.

**''கற்றுணைப் பூட்டி ஓர்கடலில் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே''**

என்று பாடினார். அந்தப் பாடலைக் கேட்ட மாத்திரத்தில் அந்தக் கல் மிதந்தது. இதற்கு முன்னும் ஒரு கல் மிதந்தது உண்டு. அது நளன் என்பவன் வெட்டிய கல்வெட்டு. இராமாயணத்திலே கடலைக் கடப்பதற்காக இராமபிரானுக்குச் சேது அமைத்துக் கொடுக்க நளன் என்ற சிற்பி எண்ணினான். எண்ணியவுடனே இரு கற்களை எடுத்தான். 'மரா' 'மரா' என்றுவெட்டினான். இந்த இரண்டு கற்களையும் கடலில் தூக்கிப் போட்டான். இரண்டும் ஒன்றாகச் சேர்ந்து மிதந்தன. இவ்வாறு அணை கட்டினான் என்பார்கள். ராமா என்ற நாமத்தை யார் யார் சொல்லுகிறார்களோ, அவர்கள் என்றைக்கும் ஒன்றாகச் சேர்ந்திருப்பார்கள் என்ற பேருண்மையைக் காட்டுவதற்காக மகான்கள் கையாண்ட கற்பனை இது. முதல் கல்வெட்டு ராமநாமம். இரண்டாவது கல்வெட்டு ஐந்தெழுத்து.

ஐந்தெழுத்தை ஓதியவுடன் கல் மிதந்ததைக் கண்டான். 'நமச்சிவாய' என்ற மந்திரத்தின் பெருமையை உணர்ந்தான் மகேந்திர பல்லவன். இதன் பிறகுதான் கற்கோயில்களுக்கு வழி வகுத்தான், நம்முடைய நற்காலத்தின் பயனாக. அதுவே நம்முடைய சரித்திரத்துக்கும் வழியாக மாறி விட்டது.

இந்தக் கல்வெட்டு ஆராய்ச்சியாளர்களை வணங்க வேண்டாமா? எத்தனை சரித்திர ஆசிரியர்கள் தங்களது கைகளால் அந்தக் கற்களைத் தோண்டி, கை விரல்கள் புண்ணானவர்கள்? தங்கள் கண்களை அகல விரித்து விரித்துப் பார்த்து அதில் உள்ள ஒவ்வொரு எழுத்தையும் தடமெடுத்துக்கொண்டு, இவை என்ன எழுத்து என்று ஆராய்ந்து அந்த எழுத்துக்களுக்கு வரலாற்று வரிசையையும், ஆயிரம் வருடங்களுக்குமுன் தமிழ் எப்படி இருந்தது, பிறகு எப்படி மாறி யிருக்கிறது என்ற தமிழ் வரலாற்றையும் தந்து நாட்டின் சரித்திரத்தையும் தந்தார்களே, அந்தப் புண்ணியவான்களை என் போன்றவர்கள் எப்போதும் கும்பிட்டுக் கொண்டே இருக்கிறோம். அவர்கள் சரித்திரத்தைத் தரவில்லை என்றால் நாங்கள் எப்படி அதில் எங்கள் கற்பனையைச் செய்வது?

ஏகோஜி மன்னன் காவிரிக் கரைக்கு வந்து சேர்ந்தார். காவிரிக் கரையிலே நின்றார். மனம் ஏதோ செய்தது. மனைவி தீபா பாயைப் பற்றி எண்ணியவர் கண்ணீர் விட்டார். காவேரி மணலில் அவர் கண்ணீர் சிந்தியது. நல்ல காற்று. அந்தக் காற்றிலே கவலை மிகுதியாகிச் சற்று மயக்கம் வந்தது. **(தொடரும்)**

# ஓநாய்க் கோட்டை

கதை: வாண்டு மாமா
சித்திரம்: ரமணி..

8

அருமைத் தோழனை ஆபத்தில் சிக்க விட்டுத்தான் உயிர் பிழைக்க விரும்பவில்லை ஆனந்தன்...

உன்னைப் பிரிந்து செல்ல விரும்பவில்லை கந்தா.

கோட்டைக் கதவுகளை மூட வேண்டும்



















நண்பர்களின் வாள் விரோதிகளைத் திணற வைத்தது..


கந்தா! உன் குதிரை மீது பாய்ந்து ஏறு. சண்டையிட்டு நம் வலிமையையும் நேரத்தையும் வீணாக்க வேண்டாம். வந்தவர்களில் பாதிப்பேரைத் தரையில் சாய்த்து விட்டோமே, அது போதும்.


ஆனந்தா, அந்தக் கொடியவர்களில் யாரையுமே உயிரோடு விட்டிருக்கக் கூடாது. ஒருவன் உயிர் பிழைத்தாலும் கூட நமக்கு அவர்களால் இன்னல்கள் தொடரும்..
கவலைப் படாதே கந்தா. நீ இருக்கும் வரை நான் எந்த இன்னலையும் எதிர்த்து நிற்பேன்.


இதோ இந்தக் குன்றைக் கடந்து மறுபக்கம் போய் விட்டால் துரத்தி வரும் துரோகிகளிடமிருந்து தப்பி விடலாம்.
இது வலுவான பாறைக் குன்றில்லை போலிருக்கிறதே. நாம் ஏறும் போது குதிரைகளின் கனத்தைத் தாங்குமா?


உறுதியற்ற அந்தக் குன்றின் மீது குதிரைகளை விரட்டிக் கொண்டு ஏறுவது கடினமாக இருந்தது. கரடுமுரடான பாதையிலே கற்கள் உருண்டன...
ஆனந்தா! இதன் மீது ஏறச் சொன்ன காரணம் இன்னமும் புரியவில்லையா?
அவர்களும் வந்து விட்டார்கள்.


இத்தனை சிரமப் பட்டு இதன் மீது ஏறி என்ன பலன்? நம்மைத் தொடர்ந்து அவர்களும் வரத்தானே போகிறார்கள்?
வரமுடியாது. இந்தக் குன்றின் பாறைக் கற்களை நம் குதிரைகள் கலகலக்க வைத்து விட்டன. அதோ பார்..


இனி நம்மை அவர்களால் தொடர முடியாது. அந்தப் பக்கத்துப் பாறைக் கற்கள் அத்தனையும் இடம் பெயர்ந்து விட்டன. அவர்களை மூடிச் சமாதியாக்கிய பிறகுதான் அவை சமாதானமடையும்.

தொடரும்..

இப்பொழுது நடைபெறுகிறது

சென்னை
மிட்லண்ட்
(ஏர் கண்டிஷன்ட்)
பிராட்வே
ராக்ஸி
ராம் மற்றும்
தென்னாடெங்கும்



ரவி
புரொடக்ஷன்ஸ்

# பணமா பாசமா

திரைக்கதை, வசனம், டைரக்ஷன் :
K.S. கோபாலகிருஷ்ணன்

தயாரிப்பு : பாலு

இசை : K.V. மஹாதேவன்

G.H.RAO

ELEGANT

**"வா**டா, வா! ஏண்டா இத்தனை நேரம்?"

"என்னடா செய்யச் சொல்லறே! வழியிலே உன்னைப் போல் ஒரு நண்பன்..."

"பேசப் பிடிச்சுண்டுட்டானோ?"

"இல்லேடா! அவன் தம்பி மச்சினிக்கும் இன்னிக்கே கல்யாணம். வராமல் ஏமாத்தி விடக் கூடாதுன்னு கண்டிச்சு நாலு நாளைக்கு மூன்னாடியே சொல்லிட்டான். அதனாலே..."

"...இங்கே உனக்கு டிபன் கிடையாது."

"என்னடா அப்படிச் சொல்லிட்டே?"

"பின்னே எப்படிச் சொல்றது? டிபன் கடையை இங்கே கட்டியாச்சே!"

"அவ்வளவுதானே? நான் பார்த்தே போயிட்டேன். என்னிடம் நீ ரொம்பவும் கோவிச்சுண்டுட்டியோன்னு! கவலைப்படாதே, சாப்பாட்டை ஒரு கை பார்த்துடறேன்!..."

"சரி, உட்கார்ந்து பாட்டுக் கச்சேரியைக் கேட்டிண்டு இரு. இலை போட்டதும் சாப்பிடக் கூப்பிடறேன்!"

பட்டுசாமி மற்றவர்களைக் கவனிக்கப் போய்விட்டான்.

மூன்றாவது நாற்காலியில் உட்கார்ந்திருந்த சங்கரன் எழுந்து வந்து அப்பாசாமியின் அருகில் உட்கார்ந்தான். "ஏண்டா, அவங்க வீட்டிலே டிபன் பலமோ?" என்றும் கேட்டு வைத்தான்.

"என்னடா கேள்வி கேட்கிறே 'பிஸ்து' மாதிரி? கல்யாண வீட்டிலே டிபன் பலமா இல்லாமல் வேறு எப்படிடா இருக்கும்? அதுவும் அந்தக் கல்யாணம் சாதாரணக் கல்யாணமா? ஏக 'பர்பராட்டு'டா!"

"அப்படியா? இங்கே பட்டுசாமி டிபன்லே 'கஞ்சம்' பிடிச்சுட்டாண்டா! ஆனால் இலை போட்ட சாப்பாட்டுக்கு ஏற்பாடு பண்ணியிருக்கான். அதாவது - 'ஜட்டம்' ஜாஸ்தி! — ஆமாம் அங்கே என்னடா டிபன்?"

"ரோஸ் ஜாங்கிரி பலே ஜோர்டா! தேனையும் பன்னீரையும் அதுக்குள்ளே 'இன்ஜெக்ஷ'னே பண்ணிப்பிட்டாண்டான்னா!"

சங்கரனுக்கு நாக்கிலே நீர் ஊறிற்று!

"பெருமூச்சு விடாதே! ஸ்வீட்டுக்கு ஜாங்கிரின்னு காரத்துக்குத் திரிகோணம். திரிலோகத்திலேயும் நீ அதுமாதிரிச் சாப்பிட்டிருக்க முடியாதுடா!"

"அப்படியா?"

"அப்புறம் கம்முன்னு வாசனை வீசுகிற புத்துருக்கு நெய்யிலே பொன் வறுவலா வறுத்திருந்தான் பாரு..."

"எதையடா?"

"முந்திரிப் பருப்பை! ஆறு எண்ணி எட்டுத் தாண்டா வச்சிருந்தான் அற்பப்பயல்! — அப்புறம் தஞ்சாவூர் பாணியிலே டிகிரி காப்பி. அது இன்னும் நாக்கிலே சுத்திண்டிருக்குடா!"

"பேஷ்! ஐஸ்கிரீம், ஃப்ரூட் ஸலாத் ஏதாவது உண்டா?"

"என்னடா அப்படிக் கேட்டுட்டே! அந்தக் காலத்திலே பருப்பில்லாத கல்யாணம் கிடையாதுன்னு. இந்தக் காலத்திலே ஐஸ்கிரீம் இல்லாத கல்யாணம் கிடையாதுடா!"

அப்பொழுது அங்கே வந்த பட்டுசாமி "சங்கரா, எழுந்திருடா! இலை போட்டாச்சு. சாப்பிடப் போ!" என்றான்.

கற்பனை டிபன் செய்திருந்த அப்பாசாமியும் எழுந்திருந்தான். "ஏண்டா, நீ இப்பத்தானே வந்தே? உனக்கென்ன அவசரம்? உட்காரு. அடுத்த பந்தியிலே உட்காரலாம். எல்லாரும் போனா இங்கே யாரு பாட்டுக் கேட்கிறது?" என்று அவனை அமர்த்திவிட்டான் பட்டுசாமி.

முதல் பந்தி முடிந்து இரண்டாம் பந்தி தொடங்கியது. அப்பாசாமியைக் கூப்பிடப் பட்டுசாமி வரவில்லை. வாசனைப் பாக்கும் வெற்றிலையும் வாய் மணக்க வந்த சங்கரனிடம், "இரண்டாம் பந்திக்குக் கூப்பிடறேன்னான். கூப்பிடலையேடா!" என்றான்.

"அர்ஜண்டாப் போகிறவர்களை அனுப்பிவிட்டு மூன்றும் பந்திக்குக் கூப்பிடுவாண்டா."

ஐந்தாம் பந்தியை முடித்துக் கொண்டு அந்தப் பக்கம் வந்த பட்டுசாமி, "அப்பாசாமி! நீதான் ஒரு நல்ல டிபன் அடிச்சிட்டு வந்திருக்கே; பசிக்காது. அதனாலே சித்தே உட்கார்ந்திரு. இந்தக் கனேபரம் அடங்கியதும் நிம்மதியா உட்கார்ந்து சாப்பிடலாம்!" என்று கூறிச் சென்றான்.



எட்டாவது பந்தியிலே எண்ணி மூணு பேர். அதிலே ஒருவன் அப்பாசாமி. ஆறி அவலாய்ப் போன அன்னம்; தண்ணியா ரசமான்னு பிரித்து உணர முடியாத ரசம்; மோர் என்னும் பெயரில் எலுமிச்சம் பழம் பிழிந்த கழுநீர் — இவை தான் சாப்பிட முடியாமல் அவன் சாப்பிட்ட விருந்து. அதுவும் பாத்திரத்தில் உள்ளதைப் பார்த்து, 'போதும், போதும்' என்று கூறிச் சாப்பிட்ட விருந்து.

"பட்டுசாமி! நீ உட்காரலையா?" என்றான் அப்பாசாமி.

"நானா? சாப்பிட்டாச்சு! ஒவ்வொரு பந்தியிலும் உட்கார்ந்து சாப்பிட நான் என்ன பகாசுரனா, பீமனா? காலம்பறலேருந்து பசி தாகம் பார்க்காமே ஓடி ஆடி வேலை செய்தது, வயத்தைக் கபகபன்னுது. தம்பிகிட்டே வரவாளைக் கவனிச்சுக்கோடா'ன்னு சொல்லிட்டு முதல் பந்தியிலேயே உட்கார்ந்து ஒரு கை பார்த்துட்டேன். சமையல் தேவலையா?"

"பேஷா இருக்கு" என்று ஆமோதித்தான் அப்பாசாமி.

## அல்டாப் அப்பாசாமி



# சந்தேகம் செழிக்கட்டும்!

காந்தன்

"டைரக்டர் ஸார்! படத்திலே பல முக்கியமான மாறுதல்கள் செய்ய வேண்டி யிருக்கிறது. நீங்க ஊருக்குப் போனதுக்கு அப்புறம் ஒரு டிஸ்டிட்ரிப்யூட்டர் வந்திருந்தார். அவர் பெரிய புள்ளி. அவர் நாம் இது வரையில் எடுத்திருக்கும் பத்தாயிரம் அடிகளையும் பார்த்தார். அவர் சில 'ஸஜஷன்ஸ்' கொடுத்திருக்கிறார். முதலாளி ஸார் உங்க கிட்டே சொல்லுவார். அவர் ரொம்ப 'வொர்ரி'டாக இருக்கிறார்......." என்றான் வெங்கு.

"அந்த 'டிஸ்ட்ரிப்யூட்டர்' அநுபவம் இல்லாதவரென்று நினைக்கிறேன். நம்ம படத்திலே காதல், பயம், வீரம், வெறுப்பு எல்லாம் இடம் பெறும்படியாக ஏற்பாடு பண்ணியிருக்கிறோமே. எவ்வளவு 'திங்க்' பண்ணிச் செய்திருக்கிறோம்!"

"வாஸ்தவம்தான். ஆனால் 'டிஸ்ரிப்யூட்டர்' சொல்லுவதிலேயும் உண்மை இருக்கிறது. அவர் ஸீன் ஸீனக எடுத்துக் கொண்டு விளக்கிச் சொன்னரு."

"அப்படி என்னத்தைப் பிரமாதமாக விளக்கி விட்டார்?" டைரக்டர் குரலில் கொஞ்சம் ஆத்திரம் கலந்திருந்தது.

"மூணு விஷயம் குறையுதுன்னு பிட்டு வைச்சுட்டாரு! அதாவது, செக்ஸ் அப்பீல் சேர்க்கணும், காமெடி கம்மியா இருக்கு, சஸ்பென்ஸ் போதாது!"

"நம் முதலாளி ஸார், அதற்கு என்ன சொன்னர்?"

"அதையெல்லாம் கவனிக்க நீங்க ஊரிலே யிருந்து வந்ததும் உங்களோடு கலந்து கொண்டு சரி பண்ணிடறேன்னு 'டிஸ்ட்ரிப்யூட்ட'ரிடம் உறுதியாகச் சொன்னரு."

"என்னை யாரென்று நினைத்துக் கொண்டார் அந்த 'டிஸ்ட்ரிப்யூட்டர்'? ஒரு படத்துக்கு யார் அதாரிட்டி? டைரக்டரா, டிஸ்ட்ரிப்யூட்டரா? படத்தை வாங்கி விநியோகம் பண்ணும் உரிமைதான் அவருக்கு உண்டே தவிர எப்படிப் படத்தை எடுக்கணும் என்கிறதுக்கு யோசனைகளை விநியோகம் பண்ணுகிற உரிமை கிடையாது" என்ற டைரக்டரின் முகம் கோபத்தில் சிவந்தது.

அவர் மேலும் பேசு வதற்குள் படாதிபதி அங்கு வந்து "டைரக்டர் ஸார்! நாம் கோபப் படறதிலே பிரயோஜனம் இல்லே. 'டிஸ்ட்ரிப்யூட்டரை' வைத்துத்தான் நாம் படத்தை ஓட்ட வேண்டியிருக்கிறது. அதனுலே அவங்க தயவு நமக்கு ரொம்ப ரொம்ப முக்கியம். மேலும் இந்தப் படத்தின் விநியோக உரிமையைச் சில ஜில்லாக்களுக்குக் கொடுத்து விடலாம் என்றிருக்கிறேன். அதனுலே நாம் அந்த 'டிஸ்ட்ரிப்யூட்டர்' சொல்லுகிறபடி மாறுதல்களைச் செய்து விடுவதுதான் நல்லது!" என்றார்.

டைரக்டரின் முகம் அவ்வளவு சுரத்தாயில்லை. "படத்தின் விநியோக உரிமையை நாமே வைத்துக் கொண்டால் என்ன?" என்று கேட்டார்.

"அது சரிப்பட்டு வராது. படத்தில் நஷ்டமும் வரலாம்; லாபமும் வரலாம். ஆகவே நாம் விஷப் பரீட்சையில் இறங்கக் கூடாது. அதோடு படத்தை முடிக்கிறதற்குப் பணம் தேவைப்படுகிறது. அதற்கு இதுதான் நல்ல 'ஆப்பர்ச்சுனிடி'. புதுப் படம் வேண்டுமென்று கையில் பணத்தோடு 'டிஸ்ட்ரிப்யூட்டர்' நம் வாசலில் வந்து காத்துக் கொண்டிருக்கும்போது அதை நாம் பயன்படுத்திக் கொள்ளாவிட்டால் அது பெரிய மூடத்தனம் என்றுதான் சொல்ல வேண்டும்!"

ஏக்கம் தொனிக்கும் குரலில் டைரக்டர், "இந்தப் படத்தை நான் ஓர் இலட்சிய நோக்கோடு தயாரிக்க வேண்டும் என்று திட்டம் போட்டிருந்தேன். இப்போ என்னடாவென்றால் செக்ஸ் அப்பீல் என்று சொல்லிக்கொண்டு சில விரசமான காட்சிகளையும், காமெடி என்ற பெயரில் ஏதோ கேலிக்கூத்தையும் சேர்த்தாக வேண்டும் போலிருக்கிறது" என்றார்.

"அதற்குள்ளே மூன்றாவது பாயிண்டை மறந்துட்டீங்களே, ஸார்! ஸஸ்பென்ஸ் ரொம்ப முக்கியம்னு 'டிஸ்ட்ரிபியூட்டர்' சொல்லி விட்டுப் போயிருக்கிறார். டைரக்டர் ஸார்! படத் தொழிலிலே லட்சியம் அது இது என்று வைத்துக் கொண்டால், 'கோவிந்தா'வாக வேண்டியதுதான்!" என்றான் வெங்கு.

"பணத்தை மொத்தமாக லட்சக்கணக்கிலே கொட்டி, படம் எடுத்துப் பிறகு தியேட்டர் வாசலிலே எண்பத்து நாலு பைசாவிலிருந்து, ரூபாய் இரண்டரை வரையில் டிக்கெட்டுக்களை விற்றுச் சில்லறையாகவே போட்ட பணத்தை எடுத்தாக வேண்டும். உங்கள் லட்சியத்தைப் பாராட்டுகிறவர்கள் பெரிய மனிதர்கள் என்று சொல்லப்படும் 'ஓசிப் பாஸிலே' படம் பார்ப்பவர்கள். பணம் கொடுத்துப் படம் பார்ப்பவர்களுக்காகத்தான் படம் தயாரிக்

கிறோமே தவிர 'ஓசி'யில் பார்க்கும் 'பெரிய மனிதர்'களுக்காக அல்ல'' என்று படாதிபதி கொஞ்சம் வேகமாகவே பேசிவிட்டார்.

''மாஸ் ஸைகாலஜியை' நம்ப 'பாஸ்' என்னமாப் புரிந்து வைத்திருக்கிறார்! நம் படத் தொழிலின் அந்தரங்கத்தையே அப்படியே அவர் பிட்டு வைத்து விட்டாரே!'' என்றான் வெங்கு.

டைரக்டரும் பிழைக்கத் தெரிந்தவராதலால், சமாளித்துக்கொண்டு ''அதற்கென்ன! யோசித்துச் செய்வோம். இலட்சியத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டு அதற்குப் பங்கம் வராமல் படத்திலே மாறுதல்களைப் புகுத்த வேண்டும். கவர்ச்சி வேண்டியது தான். ஆனால் அது மிதமிஞ்சிப் போய்விடக் கூடாது. நாம் இதையெல்லாம் மனத்தில் வைத்துக் கொண்டு மிகவும் நிதானமாக மாறுதல்களைச் செய்வோம்'' என்றார்.

''அப்படிச் சொல்லுங்க'' என்று அவர் கையைப் பிடித்துக் குலுக்கிய படாதிபதி ''உங்களுக்குச் சிரமமே இல்லை. டிஸ்ட்ரிப்யூட்டரே சில ப்யூட்டிபுல் 'ஸஜெஷன்ஸ்' கொடுத்திருக்கிறார். அதாவது கதாநாயகியை ஒரு கயவன் கடத்திக் கொண்டு போய்விடுகிறான். அப்பொழுது கதாநாயகனுக்கும் கயவனுக்கும் நடந்த கைகலப்பில் கதாநாயகியின் மண்டையில் பலத்த அடிபட்டு விடுகிறது. அதன் காரணமாக அவளுக்கு 'அம்னீஷியா'— அதாவது நடந்ததையெல்லாம் மறந்துவிடும் நோய் — வந்து விடுகிறது. கதாநாயகனையே யார் என்று கேட்டு விடுகிறாள். இதனால் கதாநாயகன் அவளைத் தவறாக நினைத்து அவள் நடத்தையில் சந்தேகப்படுகிறான். அந்தச் சந்தேகம் வலுப்படும் விதத்தில் நினைவு மாறிய கதாநாயகி கயவனிடம் கொஞ்சிப் பேசிக் கொம்மாளம் அடிக்கிறாள். கதாநாயகன் இது கண்டு மனம் உடைந்து வீட்டை விட்டு வெளியேறி ரஸ்தாவில் வெகு வேகமாக நடக்கிறான். அப்பொழுது ஒரு கார் ஆக்ஸிடெண்ட்: கதாநாயகன் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்படுகிறான். அங்கு ஒரு நர்ஸிடம் அன்பாய்ப் பழகுகிறான். அதே ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கும் கதாநாயகி கீழே விழுந்து அடிபட்டுச் சுய நினைவை அடைகிறாள். கதாநாயகனும் நர்ஸும் அன்பாய்ப் பழகுவதைக் கண்டதும் அவள் மனத்திலும் சந்தேகப் பேய் புகுந்து கொள்ளுகிறது...!''

''இதென்ன எல்லாம் ஒரே சந்தேகமாக இருக்கிறதே!'' என்றார் டைரக்டர்.

''எக்ஸாக்ட்லி! ஒரு படம் வெற்றியடைய வேண்டுமென்றால் அதில் பல சந்தேகங்கள் வந்தாக வேண்டும். இதைத்தான் டிஸ்ட்ரிப்யூட்டர் அழுத்தமாகச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார். அவர் ரொம்பவும் கெட்டிக்காரரர். ஒரே நிமிஷத்திலே இந்த 'சஸ்பென்ஸை'ச் சொல்லி விட்டார். மேலும் அவர் இந்தப் படப்பிடிப்புத் தொழிலிலே ரொம்ப விஷயங்கள் தெரிந்து வைத்திருக்கிறார். செக்ஸ் அப்பீலைக் கொஞ்சமும் விரஸத்துக்கு இடமில்லாமல் சேர்ப்பதற்கு ஒரு யோசனை சொன்னார். அதாவது ஆஸ்பத்திரி நர்ஸிடம் ஆசை கொண்ட ஹீரோ கனவில் அவளைக் காண்கிறான். 'சிக்' உடையில் மிகவும் கவர்ச்சியாக அவன் கனவில் தோன்றும் நர்ஸ்-'ஷேக்', 'ட்விஸ்ட்' எல்லாம் ஆடுகிறாள். நினைவுலகத்தில் நாம் செய்யும் காரியத்தில்தான் சந்தேகமும், சங்கடமும் ஏற்படும். ஆனால் கனவுலகில் அதெல்லாம் கிடையாதே! ஒருத்தி அங்கு என்ன வேண்டுமானாலும் செய்யலாமே! இதில் 'சென்ஸார்' கூட அதிகமாகக் குறுக்கிட முடியாது என்று தைரியமும் சொன்னார்'' என்றார் படாதிபதி.

''இந்த ரீதியில் படமெடுத்தால் மூலக் கதை என்பது சந்தேகத்துக்குக்கூட அதில் லவலேசமும் இராது!'' என்றார் டைரக்டர்.

''இந்தச் சினிமாத் தொழிலிலேயே சந்தேகத்துக்கு இடமில்லாத விஷயம் ஒண்ணே ஒண்ணுதான் ஸார்!'' என்றான் வெங்கு.

''என்ன அது?'' என்று ஏககாலத்தில் மற்ற இருவரும் கேட்டார்கள்.

''இந்தத் தொழிலில் சந்தேகத்துக்கே இடமில்லாத விஷயம் என்று எதுவுமே கிடையாது என்பதில் சந்தேகத்துக்கிடமே இல்லை'' என்றான் வெள்ளிக்கிழமை வெங்கு.

---

''பூனை உபத்திரவம் அதிகமாப் போச்சு. பிடித்துக்கொண்டு போய்க் கண்காணாத இடத்தில் கொண்டு போய் விட்டு விட்டு வந்து விடுங்கள் என்று மனைவி சொன்னாள். 'சரி' என்று பூனையை ஒரு பையில் பிடித்துப் போட்டுக் கொண்டு எட்டு மைல் நடந்தேன்.''

''பூனையை விட்டு விட்டு வந்து விட்டாயா?''




''விட்டு விட்டு வந்தேனா? திரும்பி வீட்டுக்கு வர வழி காட்டியதே அந்தப் பூனை தானே!''

''இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்?''

''வீட்டைக் காலி செய்து கொண்டு எட்டு மைல் தொலைவில் உள்ள ஒரு வீட்டில் குடியேறப் போகிறேன்.''

தகவல்: மு. க. தியாகராசன்

ஆதாரம்: ''நியூஸ் வீக்''



# பேனா நண்பர்

ராமப்ரியா

உடுப்பி மருத்துவக் கல்லூரியில் நான்காவது ஆண்டு படித்துக் கொண்டிருக்கும் உஷாவும், அவள் அண்ணன் சேகர், காரைக்குடி பொறி இயல் கல்லூரியில் இறுதி ஆண்டு படிப்பவனும் சேர்ந்தாற்போல் செப்டம்பர் லீவுக்குப் பெற்றோரிடம் வந்த பொழுது வீடே கலகலவென்றிருந்தது.

தனக்குத் தெரிந்த சிற்றுண்டிகளையும் சமையல் தினுசுகளையும் விதம் விதமாகச் செய்து போட்டுத் தன் செல்வங்களைப் பெருக்க வைக்கப் பெருமுயற்சி செய்து கொண்டிருந்தாள் ராஜம்மாள்.

இன்ஜினீயர் பிள்ளையையும் டாக்டர் பெண்ணையும் பார்த்தே மகிழ்ந்துகொண்டிருந்தார் தந்தை கோபாலன்.

அண்ணனும் தங்கையும் தத்தம் கல்லூரியைப் பற்றி வாய் ஓயாது பேசிக் கொண்டிருந்தனர்.

அவர்கள் இருவரும் வந்த தினத்திலிருந்து தபால்காரர் வரும் வேளையில் வாசலில் நின்று விடுவார்கள்.

''யாரிடமிருந்து அண்ணா தபால் எதிர் பார்க்கிறாய்?'' என்று சேகரைக் கேட்டாள் உஷா.

''என் நண்பர் இந்த விலாசத்துக்கு எழுதுகிறேன் என்றார்'' என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு, ''நீ யாரிடமிருந்து எதிர் பார்க்கிறாய்?'' என்று தங்கையைப் பதில் கேட்டான். ''நானும் என் நண்பரிடமிருந்துதான்!'' என்று மிடுக்காகப் பதில் சொன்னாள் உஷா.

அண்ணனும் தங்கையும் வந்து ஒரு வாரம் வரை அவர்கள் இருவருக்கும் அந்த நண்பர் கடிதம் எழுதவில்லை போலும்! தபால்காரர் போனவுடன் இருவர் முகமும் ஏமாற்ற மிகுதியால் சிறுத்துப் போய் விடும்.

உஷா சற்று வெகுளியான சுபாவமுள்ளவள். சேகர் சற்று அழுத்தமானவன். உஷாவாகச் சேகரிடம் சென்றாள். ''அண்ணா! இன்னும் ஒரு வாரம்தான் இருக்கிறது, நமக்குக் கல்லூரி திறக்க. வேலூர் போரடிக்கிறதே! எங்கேயாவது இரண்டு நாட்கள் ஜாலியாகப் போய்விட்டு வந்தால் என்ன?'' என்றாள்.

சேகர் தங்கையை ஒரு நிமிஷம் உற்றுப் பார்த்தான். ''எங்கே போகலாமென்று சொல்கிறாய்? அம்மாவும் அப்பாவும் அப்படி இலேசில் நம்மைப் போக விடுவார்களா?'' என்றான்.

''நாமென்ன, பச்சைப் பாப்பாக்களா, விடாமல் பிடித்து வைத்துக்கொள்வதற்கு? தசரா சமயம் பெங்களூர் நன்றாக இருக்கும். அங்கே போனால் என்ன?'' என்று கேட்டுவிட்டுக் குழந்தைமாதிரி வாயில் விரலை வைத்துக்கொண்டு நின்றாள்.

ஒரு துள்ளுத் துள்ளினான் சேகர். ''ஐடியா, ஐடியா!'' என்று கை தட்டினான். ''உனக்கெப்படி பெங்களூர் போக வேண்டுமென்று ஐடியா தோன்றியது?'' என்று தங்கையைக் குஷியுடன் கேட்டான் சேகர்.

உஷாவுக்குச் சந்தோஷ மிகுதியால் என்ன சொல்கிறோமென்று தெரியாமல், ''இதற்கு என்ன பெரிய ஐடியா தோன்றணும்? என் பேனா நண்பர் அங்கே இருப்பதால் அங்கே போக நினைத்தேன்!'' என்று சொல்லி விட்டு மீண்டும் திருதிருவென்று விழித்தாள்.

''உனக்குப் பேனா நண்பரா? ஆணா பெண்ணா?'' என்று இடக்காகக் கேட்டான் சேகர். உஷாவுக்குக் கோபம் மூக்குக்கு மேல் வந்துவிட்டது. ''ரொம்பவும் விளையாடாதே அண்ணா! எனக்கு ஆணா, பெண்ணா என்பதைப் பற்றிக் கவலை இல்லை. ஐ வாண்ட் டு மீட் மை பென் பிரண்டு! தட்ஸ் ஆல்!'' என்று படபடவென்று பொரிந்தாள்.

''கோவிச்சுக்காதே உஷா! என் பேனா நண்பரும் பெங்களூரில்தான் இருக்கிறான். அதனால்தான் கேட்டேன்!'' என்றான் சேகர் சர்வ சாதாரணமாக.

''என்ன இருக்கிறானா? அத்தனை தூரத்துக்கு வந்து விட்டதா? இரு இரு. அப்பாவிடம் சொல்கிறேன்!'' என்று பயமுறுத்தினாள் உஷா.

சேகர் அலட்சியமாக இரு கைகளையும் விரித்தான். வாயைச் சுழித்துக் கொண்டான். ''சொல்லிக் கொள்ளேன். எனக்கென்ன பயமா? நீ மட்டும் உன் நண்பர் யார் என்று சொல்ல மறைக்கிறாய். நான் பிளெயினாகச் சொல்லி விட்டேன்'' என்றான்.

உஷா சற்று பயத்துடன் பின்வாங்கினாள். ''அண்ணா! கோபிச்சுக்காதே! இந்த விஷயம் நம்ம இரண்டு பேருடன் இருக்கட்டும். அம்மாவுக்குத் தெரிந்தால் 'லபோ லபோ' என்பாள். இரு, என் பேனா நண்பர் கடிதமெல்லாம் உன்னிடம் காட்டுகிறேன். உன்



— அட்டைப்படக் கதை —

நண்பர் கடிதத்தை என்னிடம் காட்டு வாயா?'' என்று சமாதானமாகச் சொன்னாள்.

''அப்படி வா வழிக்கு! டாக்டருக்குப் படிச்சாப் போதுமா? பெண் ஜன்மம் என்பதைக் காட்டி விட்டாயே!'' என்று அவளைக் கேலி செய்தான். உஷா உள்ளே ஓடிப்போய் ஒரு கட்டுக் கவர்களையும் ஒரு போட்டோவையும் கொண்டு வந்தாள். எல்லாவற்றையும் பின்புறமாக மறைத்துக் கொண்டு, ''உன் கடிதங்களையும் கொண்டு வா. அப்பொழுதுதான் தருவேன்!'' என்றாள்.

சேகரும் தன் தோல் பெட்டியிலிருந்து ஒரு கட்டைக் கொண்டு வந்து தங்கையிடம் கொடுத்தான். இருவரும் கடிதங்களை மாற்றிக் கொண்டு அவரவர் உள்ளுக்குள் சென்று கதவைத் தாழ்ப்பாள் போட்டு விட்டுச் சுவாரசியமாகப் படிக்கத் தொடங்கினார்கள்.

வெளியே வரும்பொழுது இருவர் முகமும் ஆச்சரியத்தினால் விக்கித்துப் போயிருந்தன. ''அண்ணா!

நம் இரண்டு பேர் நண்பர்களும் ஒரே அட்ரஸில் இருந்தல்லவா எழுதுகிறார்கள்?'' என்று வியப்புடன் கேட்டாள் உஷா.

''அதுதான் உஷா, எனக்கும் ஆச்சரியமாக இருக்கிறது. நானும் இப்பொழுதுதான் அதைக் கண்டுபிடித்தேன்!'' என்று சொன்னான் சேகர்.

''அவர்கள் இருவரும்கூட நம்மைப் போல் அண்ணன் தங்கையாக இருப்பார்களோ?'' என்றாள் உஷா.

''தெரியவில்லையே! என் சிநேகிதி கௌரி அவள் குடும்பத்தைப் பற்றி ஒன்றுமே எழுதுவதில்லை. அதனால் நானும் நம் குடும்ப விவரத்தைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லை!'' என்று யோசனை செய்தபடியே சொன்னான் சேகர்.

''என் சிநேகிதர் சங்கரும் நமக்கு ஒரு சகோதரி இருப்பதாக எழுதவில்லை. என்னவோ, அண்ணா! ஒரு நடை பெங்களூர் போய் வந்தால் என்ன?'' என்று ஆவலுடன் கேட்டாள் உஷா.

''நீ அம்மாவைக் கெஞ்சிக் கூத்தாடி அனுமதி வாங்கு. நானும் அதையே அப்பாவிடம் செய்கிறேன். பார்ப்போம்!'' என்றான் சேகர்.

இருவருக்கும் அனுமதி கிடைத்து விட்டது. ''பாவம்! குழந்தைகள் வருஷம் முழுதும் படிப்பு படிப்பு என்று உயிரை விடுகிறார்கள். கொஞ்சம் மாறுதலுக்காக நாலு இடங்கள் போனால்தான் அவர்களுக்குச் சற்றுச் சந்தோஷமாக இருக்கும்!'' என்று அம்மா, அப்பாவிடம் சிபாரிசு செய்ய இரு குழந்தைகளும், ''பிருந்தாவன் எக்ஸ்பிரஸில்'' பெங்களூர் கிளம்பினார்கள்.

ரயில் வண்டியில் இருந்த நாலு மணி நேரமும் உஷாவும் சேகரும் அவர்களுடைய பேனா நண்பர்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டு வந்தார்கள்.

''கௌரி தன்னுடைய ஒவ்வொரு கடிதத்திலும் கம்பரைப் பற்றியும் வள்ளுவரைப் பற்றியும் மேற்கோள்கள் காட்டாமல் கடிதம் எழுத மாட்டாள். அவள் அவ்வளவு அருமையான ரசிகை!'' என்றான் சேகர்.

''சங்கர் மட்டும் குறைந்தவரில்லை, அண்ணா! மில்டனைப் பற்றியும் ஷேக்ஸ்பியரைப் பற்றியும் எழுதினால் படிக்க அலுக்கவே அலுக்காது. அவர்கள் இருவரும் பண்பட்ட குடும்பத்திலிருந்து வந்த அறிவுக் களஞ்சியம் என்றுதான் சொல்வேன்!'' என்றாள் உஷா.

''உஷா! நான் ஒன்று சொல்கிறேன். தப்பாக நினைக்காதே!'' என்று கீழ் ஸ்தாயியில் மெல்லக் கேட்டான் சேகர்.

''சொல்லு, அண்ணா!'' என்று தைரியமூட்டினாள் டாக்டர் தங்கை.

''நாமிருவரும் ஒரே விலாசத்தில் இருக்கும் நம் பேனா நண்பர்களைப் பார்க்கப் போகிறோம், இல்லையா?'' என்றான் சேகர்.

''ஆமாம்!'' என்று தலையை அசைத்து ஆமோதித்தாள் உஷா.

''அவர்கள் இருவரும் சகோதரர்களாகவும் இருந்து, கௌரியைப் பார்த்துப் பழகினவுடன் என் மனதில் அவளைத் தவிர வேறொருத்திக்கு இடமில்லை என்று உறுதி வந்து, அதே எண்ணம் சங்கரைப் பார்த்துப் பழகியபின் உனக்கும் ஏற்பட்டால் என்ன செய்வது?'' என்று கவலையுடன் கேட்டான். உஷா தலையைக் குனிந்து கொண்டு விரல்களால் ரயில் பெட்டியின் ஜன்னலில் தாளம் போட்டாள். பிறகு ஒருவித தீர்மானத்துடன், ''ஏன், அண்ணா! நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ள வேண்டும்? இப்போதே கடந்த மூன்று மாத கடிதத் தொடர்பில் நம்மிடம் இந்த எண்ணம் ஏற்பட்டிருக்கிறதால்தானே நேரில் சந்திக்க ஓடுகிறோம்?'' என்று பட்டென்று உடைத்தாள்.

''நாமெங்கே உஷா ஓடுகிறோம்? நம்மைச் சுமந்து கொண்டு ரயில் அல்லவா துரித நடையில் ஓடுகிறது?'' என்றான் சேகர் சிரிக்காமல்.

''விளையாட்டைப் பிறகு வைத்துக் கொள்வோம், அண்ணா! இப்போது விஷயத்துக்கு வா! நேரில் பார்த்தபின் நம் மனத்தைப் பெங்களூரிலேயே பறி கொடுத்து விட்டால் என் சார்பாக நீயும் உன் சார்பில் நானும் அப்பா அம்மாவிடம் வாதாடுவோம். வெற்றி கண்டால் வாழ்வு, இல்லாவிட்டால்....?'' சொல்லும்போது உதடுகள் துடித்துக் கண்கள் பனித்தன.

''அவ்வளவு தூரத்துக்குப் போய்விடாதே, டாக்டர், அம்மா! தைரியமாகப் போராடி வெற்றி காண்போம்!'' என்றான் சேகர். உஷாவும் ஒப்புக் கொண்டாள். ரயிலும் பெங்களூரில் பெருமூச்சு விட்டு நின்றது.

டாக்ஸியை அமர்த்திக் கொண்டு சந்தோஷ மிகுதியால் மனம் படபடக்கத் தம் மனத்துக்கினிய நண்பர்களைக் காண விரைந்தனர் இருவரும்.

''மல்லேசுவரம், மகாராணி காலனி மூன்றாவது கிராஸ் ரோடுதானே, உஷா!'' என்று எட்டாம் முறையாகத் தன் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளப் பார்த்தான் சேகர்.

''நம்பர் முப்பத்திரண்டு அண்ணா!'' என்று மனப்பாடம் செய்தவளைப் போல் ஒப்புவித்தாள் உஷா.

டாக்ஸி அழகானதொரு சிறிய பங்களாவின் முன் நின்றது. டாக்ஸிக்குப் பணம் கொடுத்தனுப்பிவிட்டு இருவரும் படபடக்கும் இதயத்துடன் உள்ளே நுழைந்தார்கள். திறந்திருந்த கதவை நாசூக்காக விரல்களால் தட்டினாள் உஷா. முதலில் வருவது தன் இனிய நண்பன் சங்கராக இருக்க வேண்டும் என்று மனத்துக்குள் பிரார்த்தித்தாள் உஷா.

தன் அருமை சிநேகிதி கலாரசிகை ஜல் ஜல் என்று சதங்கை குலுங்க அழகாகக் கைகூப்பி வரவேற்கக் கௌரி வரமாட்டாளா என்று ஏங்கிக் கொண்டிருந்தான் சேகர்.

ஐம்பது வயதை எட்டிப் பிடித்துக் கொண்டிருக்கும் ஒல்லியான உயரமான மனிதர் அவர்களிடம் வந்து, ''யார் நீங்கள்?'' என்று கேட்டு இளம் மனங்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டார்.

இருவரும் பேச்சையும் எச்சிலையும் மாற்றி மாற்றி விழுங்கினார்கள். என்ன சொல்வது, எப்படி அறிமுகப்படுத்திக் கொள்வது என்று

தெரியாமல் சில விநாடிகளுக்குத் தவித்துப் போயினர்.

உஷா தன்னைச் சற்று சுதாரித்துக்கொண்டு, "என் பெயர் உஷா! நான் மணிப்பால் மெடிகல் காலேஜில் நான்காவது வருடம் படிக்கிறேன். இவர் எனது சகோதரர்!" என்று மென்று விழுங்கியவாறு சொன்னாள்.

சேகருக்கு இப்பொழுது தைரியம் வந்து விட்டது. "என் பெயர் சேகர்! காரைக்குடியில் என்ஜினீயரிங் பைனல் வருஷம் செய்கிறேன். தசரா பார்க்க இங்கு வந்தோம். இங்கே என் பேனா நண்பர் சங்கரைப் பார்த்துவிட்டுப் போக வந்தேன்!" என்று முதலில் தன்னைப் பற்றிக் கூறிவிட்டுப் பின் பகுதியில் கதையையே மாற்றி விட்டான்.

அவனுடன் பிறந்தவன் அவனுக்குச் சளைத்தவளா? "ஆமாம், சார்! என் தோழி கௌரியைப் பார்க்கத்தான் நானும் வந்தேன். அவர்களின் தந்தையா சார், நீங்கள்?" என்று உஷாவும் அண்ணன் வழியே போய் அவரையே கேள்வி கேட்கவும் செய்தாள்.

அந்த மனிதர் இவர்கள் இருவரையும் ஒரு விநாடி மிகுந்த ஆச்சரியத்துடன் பார்த்தார். அடுத்தகணமே சிரித்தபடி, "ஓஹோ! நீங்களா? என் குழந்தைகளின் நண்பர்களா? வெகு சந்தோஷம், வாருங்கள். மாடியில் உங்களுக்குத் தனி அறை தருகிறேன். இங்கேயே எங்களுடனேயே இருக்க வேண்டும்!" என்று பலவாறு உபசரித்து இருவருக்கும் தனித் தனி அறைகளைக் கொடுத்துக் காப்பி பலகாரம் எல்லாம் கொடுத்தார். மிகுந்த வசதியுள்ளவர் என்று தோன்றியது. கலாரசனை மிக்கவர் என்று வீட்டின் அமைப்பைப் பார்த்தே கூறும்படி இருந்தது.

இரவுச் சாப்பாடும் ஆயிற்று. கௌரியோ, சங்கரோ என்ன, அவர்களின் நிழல்கூடத் தென்படவில்லை. மொட்டை மாடியில் போட்டிருந்த நாற்காலிகளில் மூவரும் உட்கார்ந்தனர். அந்த வீட்டில் பெண்கள் இருக்கும் மாதிரியாகவே தோன்றவில்லை.

அந்த மனிதர் பெயர் டாக்டர் பரமேசுவரன் என்று தெரிந்து கொண்டனர்.

மூவரும் உட்கார்ந்தவுடன் சில விநாடிகள் பேசாமலே கழிந்தது. டாக்டர்தாம் முதலில் பேச்சைத் தொடங்கினார். "குழந்தைகளே!" என்று ஆரம்பித்தார். சேகர் தன்னையறியாமல் நிமிர்ந்து உட்கார்ந்தான். உஷா தலைப்பைச் சரி பண்ணிக் கொண்டு அவரை உன்னிப்பாகக் கவனித்தாள்.

"முதலில் நீங்கள் இருவரும் என்னை மன்னிக்க வேண்டும்!" என்றார் தழுதழுத்த படியே. இருவரும் பதறிப் போய், "என்ன, என்ன ஆயிற்று!" என்று பதற்றத்துடன் கேட்டார்கள்.

"என் வாழ்க்கை ரொம்பச் சோகமயமானது. இங்கே வாருங்கள்! என் மனைவியை முதலில் பார்த்துவிட்டுப் பின் என் கதையைச் சொல்கிறேன்!" என்று இருவரையும் மாடியிலேயே தனியாக இருந்த ஓர் அறைக்கு அழைத்துச் சென்றார். நாற்பத்தைந்து வயது மதிக்கத் தகுந்த ஓர் அம்மாள் படுக்கையில் சாய்ந்து கிடந்தாள். அவளைப் பார்த்தால் பல வருஷங்களாக இதே மாதிரி இருக்கிறாள் என்று தெரியவரும். பக்கத்தில் ஒரு நர்ஸ் நின்று கொண்டிருந்தாள். அருகில் இருந்த பீரோவில் பலவித மருந்துகளும் பழங்களும் இருந்தன. அவை அந்த அம்மாள் வெகு நாளைய நோயாளி என் பதைப் பறைசாற்றின.

"யார் இவர்கள்?" என்று அந்த அம்மாள் கணவரைக் கேட்க, "நமக்கு மிகவும் வேண்டியவர்கள்" என்று சொல்லி உஷாவையும் சேகரையும் மீண்டும் பழைய இடத்துக்கு அழைத்து வந்தார்.

"என் மனைவிக்கு முதலில் இரட்டைக் குழந்தைகள் பிறந்து இறந்து விட்டன. அதிலிருந்தே அவள் உடல் நிலை பாதிக்கப் பட்டுவிட்டது. கடந்த இருபது வருடங்களாக இதே படுக்கைதான். அவளும் நானும் இணை பிரியாமல் இருந்தோம். இன்றும் மனத்தளவில் இருக்கிறோம். அதனால்தான் நான் நடமாடிக் கொண்டிருக்கிறேன்....." முடிப்பதற்குள் சேகர் குறுக்கிட்டான்: "அப்பொழுது, கௌரியும் சங்கரும் உங்கள் குழந்தைகள் இல்லையா?" என்று அவசரமாகக் கேட்டான். உஷாவும் அவர் என்ன சொல்லப் போகிறார் என்று ஆவலுடன் நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

"குழந்தைகளா, அவசரப்படாதீர்கள்! எனக்குக் கொஞ்ச நாட்களாகவே வாழ்க்கை மிகவும் அலுத்து ஒரே சீரான இந்த வாழ்வு கசக்க ஆரம்பித்தது. எப்பொழுதுமே எனக்கு என் வைத்தியப் புத்தகங்கள் மட்டுமின்றி இலக்கியப் புத்தகங்களும் உற்ற தோழர்கள். இறந்துபோன என் குழந்தைகளைப் பற்றி நினைத்துக் கொள்வேன். அவர்கள் சில மணி நேரம்கூட உயிர் வாழ

## மகன் தந்த பாடம்

ஒரு தந்தை தம் சிறிய மகனைக் கூப்பிட்டு ஒன்று முதல் நூறு வரையில் எண்ணைச் சொன்னார். பையன் ஆரம்பித்தான்: "1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, ஜாக்கி, குயீன், கிங்..."

திகைத்த தந்தை சீட்டாடும் பழக்கத்தைக் கைவிட்டார்.

தகவல்: "எம்.எஸ்.டி."
ஆதாரம்: "ரம்பா"

கல்கி

சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா | 20-00 | 10-00 |
| பர்மா, மலேயா இதர நாடுகள் | 40-00 | 20-00 |
| | இலங்கை நாணய மதிப்புப்படி | |
| இலங்கை | 21-00 | 10-50 |

சந்தா தொகை முன்னதாக அனுப்பப் பட வேண்டும். வி. பி. பி. கிடையாது

மானேஜர்:

கல்கி காரியாலயம் :: சென்னை -10

வில்லை. எனினும், அவர்கள் இன்று இருந்தால் என்று கற்பனை செய்தே என்னை நானே சந்தோஷப்படுத்திக் கொண்டு வந்தேன். அவர்களுக்கு நானே கௌரி, சங்கர் என்று பெயரையும் கொடுத்தேன்.

"கௌரி இருந்திருந்தால், அவள் அம்மாவைப் போல் இருப்பாள். சங்கர் என்னைப் போல் இருப்பான் என்ற தீர்மானத்துக்கும் நானாக வந்தேன். மூன்று மாதங்களுக்குமுன் என் குழந்தைகள் பேனா நண்பர்களுடன் உறவாட ஆசைப்படுவதாக ஓர் எண்ணம் தோன்றியது. உடனே முதலில் சங்கர் பெயரைப் போட்டு ஒரு பேனா நண்பர் வேண்டும் என்று பத்திரிகையில் விளம்பரம் கொடுத்தேன். எனக்கு இந்த உஷாக் குழந்தையின் கடிதமும் போட்டோவும்தான் மனத்துக்குப் பிடித்திருந்தன. என் கௌரிக்கு ஒரு நண்பன் என்று ஒரு வாரம் சென்றபின் மீண்டும் தினசரியில் மனுக் கொடுத்தேன். சேகர் நண்பனாக வந்தான். கடிதத் தொடர்பு தொடர்ந்தது. எத்தனையோ நண்பர்கள் என் குழந்தைகளுக்குத் தோழர்களாக வர ஆவல் காட்டிய போதிலும் உங்கள் இருவரைத் தான் அவர்கள் தேர்ந்தெடுப்பார்கள் என்று என்மனம் சொல்லியது. வெவ்வேறு ஊர்களில் வெவ்வேறு கல்லூரிகளிலிருந்து கடிதங்கள் வந்ததால் நானும் உற்சாகத்துடன் என் இல்லாத குழந்தைகளின் சார்பில் கடிதங்கள் எழுதினேன். விடுமுறை விலாசம் இருவரின் விலாசமும் ஒன்றாக இருந்ததால் முதலில் திடுக்கிட்டேன். பிறகு இருவருக்கும் ஒன்றாக ஒரே விலாசத்திலிருந்து கடிதம் எழுதினால் குழப்பம் விளையும் என்று நினைத்துத் தாற்காலிகமாகக் கடிதத் தொடர்பை நிறுத்தி வைத்தேன். ஆனால் நீங்கள் இருவரும் இப்படி நேரில் வருவீர்கள் என்று மட்டும் நான் நினைக்கவில்லை. என்னை இருவருமே மன்னிக்க வேண்டும்!'' என்று கெஞ்சினார்.

சிறிது நேரம் மயான அமைதி அவ்விடத்தில் குடிகொண்டது.

"உங்கள் நிலைக்கு நாங்கள் ரொம்பவும் வருந்துகிறோம், சார்!'' என்று தன் கண்களைத் துடைத்துக் கொண்டாள் உஷா.

"எங்களுக்கு இந்த ஏமாற்றம் இலேசில் போகாது!'' என்று சொன்னான் சேகர்.

மீண்டும் மீண்டும் மன்னிப்புக் கேட்டார் டாக்டர்.

அவர் என்ன வற்புறுத்தியும்கூட உஷாவும் சேகரும் இரவு வண்டிக்கே கிளம்பி விட்டார்கள்.

"என்னை ஒரு பெரியப்பா, சிற்றப்பாவாக நினைத்துக் கொண்டு இங்கே இரண்டு நாள் தங்கக் கூடாதா?'' என்று கெஞ்சினார்.

"சார்! நீங்கள் உங்கள் கற்பனைக் குழந்தைகளை மறந்தாலும் நாங்கள் எங்கள் நண்பர்களைக் கற்பனை என்று நினைக்க முடியாத அளவு எங்கள் நெஞ்சில் பதிய வைத்து விட்டீர்கள். இந்த ஏமாற்றம் மறைய நாட்கள் நிறையச் செல்லும். பரவாயில்லை. இருவரும் ஒருவரையொருவர் மன்னித்து அவரவர் வழியே செல்ல முயலுவோம்!'' என்று விரக்தியுடன் சொல்லிவிட்டு விடை பெற்றனர் உஷாவும் சேகரும்.

ரயில் வண்டியில் இருவரும் முகத்தைத் தொங்க விட்டுக்கொண்டு ஒருவரையொருவர் பார்க்கவே அஞ்சி உட்கார்ந்திருந்தனர்.

"அண்ணா! அந்த மனிதர் விசித்திரமானவர் இல்லையா?'' என்றாள் உஷா. 'உம்' என்று சொல்லி விட்டுப் பேசாமல் இருந்தான் சேகர்.

"அவருக்குத்தான் எத்தனை கற்பனை! இல்லாத குழந்தைகளுக்குப் பெயர் வைத்து இருபது இருபத்திரண்டு வயதாக்கி.... அப்பப்பா! நினைக்கவே முடியவில்லை!'' என்றாள் உஷா.

"ஏன்? கற்பனையில் நாம் சளைத்தோமா? நாம் இருவரும் வாழ்க்கைத் துணைக்குக்கூட அந்த இல்லாத மனிதர்களைத் தேர்ந்தெடுத்தோமே!'' என்று சலிப்புடன் கூறினான் சேகர்.

வெட்கத்துடன் பேசாமல் இருந்தாள் உஷா. "என் கோர்ஸ் முடிந்தவுடன் அம்மா அப்பா சொல்கிறவருக்குப் பேசாமல்.....'' அதற்கு மேல் வெட்கத்தினால் பேச முடியவில்லை.

"நான் மட்டும் என்ன? நம்மைப் பெற்றவர்கள் நமக்குக் கெடுதலா செய்யப் போகிறார்கள்?'' என்று சேகரும் உஷாவுடன் ஒத்துப் பாடினான்.

"இனிமேல் இந்தப் பேனா நண்பர்கள் விஷயமே வேண்டாம்!'' என்றனர் இருவரும் ஏகோபித்தவண்ணம்.

"ஊருக்குப் போனவுடன் முதலில் அந்தக் கடிதங்களைக் கிழித்துவிட வேண்டும்!'' என்றான் சேகர்.

"ஆமாம், அண்ணா!'' என்று ஆமோதித்தாள் உஷா. ரயில் வெகு வேகமாகக் காட்பாடியை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது.

# தொழில் மந்த தொழில் நிலையை சமாளிக்க தொழில் நுட்பம் தேவைப்படுகிறது தொழில்

எமது தொழிலிலும் மந்த நிலை கடுமையாகத்தான் இருக்கிறது. நாங்களும் மந்த நிலையை எப்படி சமாளித்து நிலைபெறச் செய்கிறது என்று கவலைப்படலாம். ஆனால் இண்டியன் ஆக்ஸிஜன் ஸ்தாபனத்தில் அப்படி ஓய்ந்துவிடுவது பழக்கமில்லை. தொழிலில் மந்த நிலை என்றாலே அதை ஒரு சவாலாக ஏற்றுக்கொண்டு விடுவோம். நாங்கள் இந்நிலையை சமாளிக்கும் முறைகள் சிலவற்றைக் குறிப்பிடுவோம்.

உதாரணமாக எமது மார்கெடிங் பிரிவில் தென் கிழக்கு மற்றும் மேற்கு ஆசிய நாடுகளிலும் ஆப்ரிக்காவிலும் ஏற்றுமதி செய்வதை மேன்மேலும் அதிகரிக்க ஆராய்ச்சியை தொடர்ந்து நடத்தி வருகிறோம்.

எமது என்ஜினியர்களும் விஞ்ஞானிகளும் விரிவான ஆராய்ச்சியின் மூலம் சிறப்பு மிக்க அநேக புதிய தயாரிப்புகளை உருவாக்கி அந்நிய செலாவணியை நிறைய சேமிக்க முயற்சித்து வருகிறார்கள். சென்ற ஆண்டில் மட்டுமே இறக்குமதி செய்யப்படவேண்டிய அநேக பொருள்களை இங்கேயே உற்பத்தி செய்து ரூ. 36 லட்சத்திற்கு அதிகமான அந்நிய செலாவணியை மிச்சமாக்கியிருக்கிறோம். தொழில் துறைகளுக்காக இந்நாட்டு மூலப் பொருள்களைக் கொண்டே இண்டியன் ஆக்ஸிஜன் முதன் முறையாகத் தயாரித்து வழங்கிய புத்தம் புதிய தயாரிப்பு வெல்டிங் வேலைக்காகவுள்ள இண்டாரக் ஜாம்ஆர் 300 ஸெலேனியம் ரெக்டிபையர் செட், இண்டாரக் ஸப்மர்ஜ்ட் ஆர்க் வெல்டிங் வயர் மற்றும் ப்லூஸார்க்/ஸிஓ2 ஆடோமாடிக் ஆர்க் வெல்டிங் வேலைக்கான தொடர்பான கவசமுள்ள எலக்டிரோடு முதலியவை.

இந்தியத் தொழில்களில் உற்பத்தியை அதிகரிக்கவும், தயாரிப்பு நுட்பங்களை அபிவிருத்தி செய்யவும் சிறப்பாக உதவும் வகையில் ஆக்ஸிஜன், நைட்ரோஜன் மற்றும் இதர வாயுக்களுக்கு புதிய உபயோக முறைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

இன்னும் அநேக துறைகளில் புதிய சிருஷ்டிகள் தொழில் திறமையை விருத்தி செய்து, தொழில் மந்தத்தின் விளைவுகளை நீக்க உதவுகின்றன.

இந்தியப் பொருளாதாரத்திற்கு சேவை புரிவதில் அநேக மார்க்கங்கள் தொடர்ந்து கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. இண்டியன் ஆக்ஸிஜன் தன்னுடைய எதிர்கால வளர்ச்சியில் மட்டுமின்றி நாட்டின் எதிர்கால மேன்மையிலும் நம்பிக்கை வைத்திருக்கின்றது.



இண்டியன் ஆக்ஸிஜன் லிமிடெட்

DC-148 TAM

(ராமானந்த சாட்டர்ஜியின் ஜாகையைச் சேர்ந்த முன் வராந்தா. பேராசிரியர் நீலகண்டன் அவசரமாக வந்து கழுத்தை வளைத்து உட்பக்கமாக எட்டிப் பார்க்கிறார்.)

நீலகண்டன்: மிஸ்டர் சாட்டர்ஜி!.... சாட்டர்ஜி!.... 'ஒன் மினிட்'. இப்படி வருகிறீர்களா ?

சாட்டர்ஜி (உள்ளிருந்தே): 'ஒன்மினிட்' என்ன? 'ஒன் அவர்' வேண்டுமானாலும் நான் வருகிறேன்!

நீலகண்டன் (சரியாகக் காதில் போட்டுக் கொள்ளாமல்): இன்னும் ஒரு மணி நேரம் ஆகுமா? அப்படியானால் நான் போயிட்டு அப்புறம் வருகிறேன்.

சாட்டர்ஜி (வந்து கொண்டே): நோ நோ! நான் அப்படிச் சொல்லவில்லை. நீங்கள் 'ஒன்



மினிட்' என்று குறிப்பிட்ட அவகாசத்தை நான் 'ஒன் அவரா'க விரிவுபடுத்தத் தயாராக இருந்தேன். அவ்வளவுதான்....

நீலகண்டன்: நல்ல வேளையாக நம் காதுகள் சுமாராக நல்ல நிலையில் இருக்கின்றன! இல்லாத போனால் கோயிலுக்குப் போன கிழவனார் கதையாக நம்மில் ஒருவர் வளைத்து வளைத்து......

சாட்டர்ஜி: வாட்? வாட்?.... கிழவனார் கோயிலுக்குப் போன கதையா?

நீலகண்டன்: அது ஒரு பழைய ஜோக்கு ஸ்வாமி!.... இரண்டு கிழவனார்கள் ஒருநாள் தெருவிலே சந்தித்துக் கொண்டார்கள். முதல் ஆசாமி சமிக்ஞையாலே இரண்டாவது ஆசாமியை 'எங்கே போகிறீர்?' என்று கேட்டு வைத்தார். கோயிலுக்குப் போறேன் னார் இரண்டாவது கிழவர். 'ஓஹோ! கோவிலுக்குப் போகிறீராக்கும் என்று கேட்டேன்' என்றார் முதல் ஆசாமி. 'நான் கோவிலுக் குன்னு போறேன்' என்று சொல்லி விட்டு நடந்தார் மற்றொருவர்.

சாட்டர்ஜி: புரியுது, புரியுது!

நீலகண்டன்: என்னத்தைப் புரிஞ்சுக்கிட்டீங்க? அந்த இரண்டு பேருக்குமே காது செவிடு!

சாட்டர்ஜி: ஓ! அப்படியா?....

நீலகண்டன்: போச்சு! போச்சு! இவ்வளவு 'லேட்டா' சிரிக்க ஒரு நல்ல ஜோக்கைப் பாழடிச்சுட்டீங்க! உங்களோட நல்ல சட்டையைப் பாழடிச்சு வைக்கிற மாதிரி! உங்க சட்டையில் முதுகுப் பக்கத்திலே இரண்டு துவாரம் இருக்கே, என்ன சங்கதி ?

சாட்டர்ஜி: ஓ! அதுவா? செகண்ட் ஹாண்ட் டிரபிள்.

நீலகண்டன்: வாட்....? சட்டையைக்கூட செகண்ட்ஹாண்டிலே வாங்க ஆரம்பிச்சுட்டீரா ? மூர்மார்க்கெட்டா ?

சாட்டர்ஜி: நோ ! நோ ! செகண்ட் ஹாண்ட் ஐயர்ன் பாக்ஸ்! இஸ்திரிப் பெட்டி!.... மலிவா வந்ததுன்னு வாங்கிப் போட்டேன்! ஆட்டோ மாடிக்னு பேரு ! திடீர் திடீர்னு கரண்ட் வேகம் அதிகமாகித் துணி பொசுங்கி விடுகிறது.

நீலகண்டன் (தமிழில்): ஆட்டோ மாட்டோ கடிச்சுக் கொதறின மாதிரிதான் இருக்கு சட்டை ! ஆட்டோமாடிக் இல்லையா ?

சாட்டர்ஜி : என்ன சொல்றீங்க?

நீலகண்டன்: ஒண்ணுமில்லே! ஒண்ணுமில்லே! இந்த மாதிரி செகண்ட் ஹாண்ட் சாமான்கள் வாங்குகிற மோகம் உங்ககிட்டே ஜாஸ்தியாக இருக்கு. கூடக் கொஞ்சம் ரூபாய் போட்டுப் புதுசாகவே வாங்கிடறது நல்லது. என் பிரின்ஸிபிள் அதுதான் !

சாட்டர்ஜி: நீங்க உட்கார்ந்திருக்கிறீர்களே மோடா ! எவ்வளவு புதிசாக இருக்கிறது?... இரண்டு இரண்டு ரூபாய்னு சீப்பா செகண்ட் ஹாண்டாகத்தான் வாங்கினேன்!....

நீலகண்டன்: அதோடு இலவசமாகவே எடுத்துக் கொண்டு போகச் சொல்லிக் கூடை மூட்டைப் பூச்சியையும் கொடுத்திருக்கிறான். வந்து உட்கார்ந்ததிலே இருந்து என்னைப் பிடுங்கி எடுக்கிறது.

(திடீரென்று நேராக மாடியிலுள்ள கன்யாலாலின் ஜாகையிலிருந்து, அலறல் ஒலி இரட்டைக் குரலாக எழுந்து ஓய்கிறது.)

சாட்டர்ஜி (தலையை நிமிர்ந்து பார்த்து): வாட்?.... ஏதும் சண்டையா?

நீலகண்டன்: கன்யாலால் தங்கமான மனிதராயிற்றே! கலபமாகக் கோபமடைய மாட்டாரே!

சாட்டர்ஜி: அவர் சம்சாரம் எந்தவிதத்திலே அவருடைய ஆத்திரத்தைக் கிளப்பி விட்டாளோ?

(மீண்டும் முன்போல இரட்டைக் குரல் அலறல் ஒலி கிளம்பி ஓய்கிறது.)

நீலகண்டன்: நிச்சயமாக இது ஏதோ டொமொஸ்டிக் கலாட்டாதான்! சாட்டர்ஜி, இந்த விஷயத்திலே நாம் குறுக்கிட்டு மத்தியஸ்தம் பண்றது உசிதமா? ஒதுங்கியிருந்து வேடிக்கை பார்ப்பது தேவலையா?

சாட்டர்ஜி: இரண்டுமே தப்பிதம்! இந்த மாதிரி கட்டத்திலே, உங்க ஜோக்கிலே வந்த கிழவர்களாக இருந்து விடுவது ரொம்பப் பொருத்தம்......

நீலகண்டன்: நல்ல ஆளையா நீங்க! நாம் இருவரும் இப்போ ரொம்ப வாலிபமாக இருக்கோமா?

(கன்யாலால் வேகமாக வருகிறார்.)

கன்யாலால்: சாட்டர்ஜி! உங்ககிட்டே ஸ்க்ரு டிரைவர் இருக்கா?

நீலகண்டன்: கன்யாலால்ஜி!.... உட்காருங்கோ! இப்படிப் பதற்றப்படப்படாது! குடும்பம்னு நாலும் இருக்கும்! கலபமா அட்ஜஸ்ட் பண்ணிண்டு போகணும்! கத்தி கபடா ஸ்க்ரு டிரைவர்னு கையிலே எடுத்து... ஒரு சமயம் போல் ஒரு சமயம் இருக்காது.

(சாட்டர்ஜியை 'இல்லை' என்று சொல்லும்படி கண் ஜாடை காட்டுகிறார்.)



கன்யாலால்: நீலகண்டஜி! எனக்கு இனி மேல் பொறுமை கிடையாது. இப்படியோ அப்படியோ ஒரு விதமா முடிவு பண்ணியாகணும் இன்னைக்கு! தொலையட்டும் சனியன்!

நீலகண்டன்: அப்புறம் மாமியார் 'மர்டர் கேஸ்னு' பேப்பரிலே கொட்டை கொட்டையாகப் போட்டு மானத்தை வாங்குவான். உங்களைக் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்துவான்! எங்களைச் சாட்சிக் கூண்டிலே



# ஒருமைப்பாடு ஓடு

நிறுத்துவான்! நமக்கு இந்தக் கூண்டு வாசம் அவசியமா?

கன்யாலால்: மாமியாரா? மர்டரா?.... என்ன சொல்றீங்க?

சாட்டர்ஜி: பிறகு எதற்கு ஸ்க்ரு டிரைவர் கேட்கிறீங்க?

கன்யாலால்: ஹரே பகவான்! என் மாமியார் போன வாரமே க்ஷேத்திராடனம் செய்யறேன்னு போயிட்டாளே!....

நீலகண்டன்: அப்படீன்னு இத்தனை நேரம் மேலே யாரோடே சண்டை போட்டீங்க?

கோமதிசுவாமிநாதன்

கன்யாலால் : என்ன நீலகண்டன்ஜீ ! என்னைப் பார்த்தால் சண்டை போடறவன் மாதிரியா இருக்கு? நான் இன்னும் அந்தக் கலையைக் கற்றுக் கொள்ளலியே !

சாட்டர்ஜி: உங்க போர்ஷனிலிருந்து ஏதோ கூக்குரல் கேட்டது. அதை வைத்துத் தான்..... இரட்டைக் குரல் அலறல்.....

கன்யாலால் (மடமடவென்று சிரித்து விட்டு): நல்ல வேளை! புரொபசர்ஜீ போலீசுக்குப் போன் பண்ணுமல் இருந்தாரே !.... அந்தக் கூக்குரல் என்னுடைய புது ரேடியோவுக்குச் சொந்தம். அந்த ரேடியோ தொண்டையை ஆபரேஷன் பண்ணிப் பார்க்கத்தான் ஸ்க்ரூ டிரைவர் தேவை !

நீலகண்டன்: வாங்கின கம்பெனியிலேயே கொண்டு போய்க் கொடுங்களேன் !.... 'காரண்டி' கொடுத்திருப்பானே !

கன்யாலால்: கம்பெனியா?.... செகண்ட் ஹாண்ட் செட் புரொபசர்ஜீ! ஐம்பது ரூபாய்க்கு வாங்கிப் போட்டேன்! இப்போத் தான் தெரிகிறது லாபம் பணத்திலே மாத் திரம் இல்லே ! ஸ்டேஷனில்கூடத்தான். எப் போது ஸ்விச்சைப் போட்டாலும் ஒரு ஸ்டேஷனுக்கு இரண்டு ஸ்டேஷனுகக் கேட் கிறது !

சாட்டர்ஜி: செகண்ட் ஹாண்ட் செட் அல்லவா? செகண்ட் ஸ்டேஷனும் கேட் கிறது.

நீலகண்டன்: அப்படியானுல் கன்யாலால அதிருஷ்டசாலி ! இரண்டு செட்டுகளின் உப யோகத்தை ஒரே செட்டில் அநுபவிக்கிறார் ! சாட்டர்ஜீ ! பார்த்துக் கொள்ளும்! உம் முடைய செகண்ட் ஹாண்ட் இஸ்திரிப் பெட்டி சட்டையில் இரண்டு பொத்தல்கள் போட்டிருக்கின்றன! கன்யாலால் இரட்டை சங்கீதம் அநுபவிக்கிறார். யோகசாலிகள் !

(சாட்டர்ஜி உள்ளே ஸ்க்ரூ டிரைவருடன் வந்து அதைக் கன்யாலாலிடம் கொடுக்கிறார்.)

கன்யாலால்: தாங்ஸ்! தாங்ஸ்! ரிப்பேர் செய்துட்டுத் தரேன்.

நீலகண்டன்: செய்யுங்க, செய்யுங்க ! உங்க அதிருஷ்டம் நீங்க கை வைத்த வேளை ஏககாலத்திலே மூனு ஸ்டேஷன்கள்கூட அலறலாம் !

கன்யாலால்: ரொம்ப நல்ல செட் புரொபசர்ஜீ! ஸ்டாண்டர்ட் செட்!

நீலகண்டன்: இருக்கலாம்! மேலே இருக் கிற காபினெட் பெட்டி ஸ்டாண்டர்டாக இருக்கலாம்! உள்ளே இருக்கிற 'பார்ட்ஸ்' மாறிக் கொண்டே இருக்கலாம்! ஹோட்டல் களிலே நேரம் ஆக ஆகச் சாம்பாரிலும் ரசத்திலும் வெந்நீரைக் கொட்டி விளாவுவது போல் ரேடியோப் பெட்டிகளுக்கும், வயசாக வயசாக சீப் பார்ட்ஸ் சேர்த்து கொண்டே வரும் !

கன்யாலால்: பார்ப்போம்! பார்ப்போம்! சரியாக வரவில்லே என்றால் நானும் இதை செகண்ட் ஹாண்டிலே தள்ளிவிட்டுப் போகிறேன்.

(போகிறார்)

சாட்டர்ஜி : உலகமே செகண்ட் ஹாண்ட் மோகத்திலேதான் இருக்கு! நீங்கதான் விதி விலக்காக.......

நீலகண்டன்: பேஷ்! பேஷ்!.... உங்க வார்த்தைகளிலே நான் வேறே தத்துவத் தையே பார்க்கிறேன். செகண்ட் ஹாண்ட் மோகம்னும் சொல்லலாம்; வேகம்னும் சொல்லலாம். நம்முடைய மூதாதையர் காலத்தில் 'அவர் ஹாண்டு' — மணி காட்டும் முள் வேகத்தில்தான் இயங்கிக் கொண்டிருந் தார்கள். நிதானம் அமைதி இருந்தது. நம்முடைய தந்தைமார் காலத்தில் மினிட் ஹாண்ட் வேகத்துக்கே வந்து விட்டோம்! ஒரே ஓட்டம்! அது மாத்திரமல்ல, சிலேடை யாகச் சொன்னால் வாழ்க்கையே இரண்டாம் தரமாக ஆகிவிட்டது!....

(நீலகண்டன் ஜாகையிலிருந்து படார் என்று ஏதோ வெடிக்கும் சத்தம் கேட்கிறது. நீலகண்டன் திடுக்கிட்டு எழுந்து நிற்கிறார். நீலா வருகிறாள்.)

நீலகண்டன் (பதற்றத்துடன்): என்ன நீலா ? என்ன விழுந்தது ?

நீலா: நாசமாப் போற ஸ்டவ் ! நீங்க வாங்கிண்டு வந்ததுதான்! செகண்ட் ஹாண்டாக வாங்கிண்டு வந்திங்களே!.... நல்ல வேளை ஒருத்தரும் பக்கத்திலே இல்லே...

சாட்டர்ஜி: செகண்ட் ஹாண்ட்? புரொப சர் சார்......

நீலகண்டன்: நான் செகண்ட் ஹாண்ட் இல்லே, ஐயா! ஃபஸ்ட் ஹாண்ட்தான் ! ஸ்டவ்வைச் சொல்றுள் நீலா.....

சாட்டர்ஜி: நீங்கதான் அப்படிச் சாமான் வாங்கற பிரின்சிபிளே நினைக்கிறதே இல் லேன்னு.......

நீலகண்டன்: அது உண்மையிலே செகண்ட் ஹாண்ட் இல்லே ! ஒரு சிநேகிதன் வாங்கி உபயோகப்படுத்தாமல் வைத்திருந்தான்! அதை ஐந்து ரூபாய் குறைத்து நான் வாங்கினேன்.....

சாட்டர்ஜி: இருக்கலாம் ! ஆனால் நீங்க செகண்ட் ஹாண்டாகத்தான் வாங்கியிருக் கிங்க...... பிரின்சிபிள் அதுதானே.... சீக் கிரம் போங்கோ! அது இரண்டாவது தடவை வெடிக்கப் போகிறது.....

(நீலகண்டனும் நீலாவும் கிளம்புகிறார்கள்.)

நீலகண்டன்: நான் வரேன் சாட்டர்ஜீ....

சாட்டர்ஜி: ஏதோ கேட்க வந்தீர்களே....

நீலகண்டன்: எஸ்! எஸ்! ஸ்க்ரூடிரைவருக் குத்தான் வந்தேன். அந்த ஸ்டவ்வைக் கழற்றி ரிப்பேர் செய்ய!... இப்போது அதற்கு அவசியமில்லாமல் போய்விட்டது!

(போகிறார்கள்)

காட்சி முடிவு

நள்ளிரவின் நிசப்தத்தைக் கலைத்துக்கொண்டு எழுந்தது அந்த மணியோசை. அது கடிகார மணியோ, இயக்கிச் செல்லும் வண்டியின் மணியோ அல்ல; 'உலகில் ஒரு புதிய மனிதஜீவன் உதிக்க வருகிறது. உஷார்!' என்று அறிவிக்க எழுந்த மணி ஒலி.

அந்த மணியை ஒலித்துக்கொண்டே கதவைத் திறந்து விட்டான் மகப்பேறு மருத்துவ மனையொன்றின் வாயிற் காப்போன்.

"போப்பா, உள்ளே போ!"

பிரேக் கயிற்றை இழுத்துப் பிடித்தபடி வாயிலில் தயங்கி நின்ற சைக்கிள் ரிக்ஷாக்காரன் சட்டென்று கீழே குதித்து வண்டியை முன்னோக்கித் தள்ளினான். உட்பாதை கொஞ்சம் மேடாக இருந்ததால் வண்டி ஏறிச் செல்லச் சிரமப்பட்டது.

"சார், வண்டி மேலே ஒரு கை போட்டுத் தள்றியா?"

வேர்க்க விறுவிறுக்க, ஓட்டமும் நடையுமாகச் சற்றுத் தொலைவில் வந்து கொண்டிருந்த சாமிநாதன் மேலும் விரைந்து வந்து ரிக்ஷாவின் முதுகைப் பிடித்துத் தள்ளினான். அது ஆடி அசைந்து முன்னேறியது. வண்டியின் பின்னால் நடந்தபடி அதன் படுதாவை விலக்கிப் பிடித்துக்



# கமலியின் குழந்தை

ஜெகசிற்பியன்

கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தான்.

ஒருக்களித்து உட்கார்ந்திருந்த வயதான பெண்மணி ஒருத்தியின் அணைப்பில் துவண்டு சாய்ந்திருந்த ஓர் இளம் பெண், நோய் உபாதையைத் தாளமாட்டாமல் மெல்ல முனகிக் கொண்டிருந்தாள்.

''கொஞ்சம் பொறுத்துக்கம்மா, கமலி! இதோ ஆஸ்பத்



திரி வந்துடுத்து'' — முதியவளின் கனிவு நிறைந்த ஆறுதல் மொழி.

மருத்துவ மனையின் போர்ட்டிகோவில் வண்டியைக் கொண்டு போய் நிறுத்தி விட்டு வராந்தாத் தூண் ஓரம் ஒதுங்கி நின்று கொண்டான் ரிக்ஷாக்காரன். மணியோசை கேட்டு ஏற்கனவே அங்கு வந்து தயாராகக் காத்து நின்ற ஆயாக்கள் இருவர், ரிக்ஷாவிலிருந்த அந்தப் பெண்ணைப் பக்குவமாகக் கீழே இறக்கிக் கைத்தாங்கலாக உள்ளே அழைத்துச் சென்றனர். அந்த முதியவளும் அவர்களைப் பின் தொடர்ந்தாள்.

போர்ட்டிகோவுக்கு வெளியே பிரமை பிடித்தவனைப் போல் நின்று கொண்டிருந்த சாமிநாதனைப் பார்த்து, ''போசார், போய் டாக்டரம்மாகிட்ட உன் பேரு, ஊரு, வீட்டு அட்ரஸ் எல்லாத்தையும் சொல்லி ரீஸ்தர் பண்ணிக்க. இல்லேன்னு நாளைக்கு உள்ளே வர ரொம்பப் பேஜாராப்பூடும்'' என்று சொன்ன ரிக்ஷாக்காரன், ''சாரு புச்சாங்காட்டியும்; அதான் தெகைச்சு நிக்கிறூரு!'' என்றான் அநுதாபப் புன்முறுவலுடன்.

அநுபவப் புதுமையால் ஏற்பட்ட அச்சக் குறுகுறுப்போடு தயங்கி நின்ற சாமிநாதன் வராந்தாவுக்குப் பக்கவாட்டிலிருந்த தலைமை டாக்டரம்மாவின் அறைக்குச் சென்றான். அப்போது அங்கே 'சின்ன' டாக்டரம்மாதான் டியூட்டியில் இருந்தாள். அவளிடம் விவரங்களைச் சொல்லிப் பேரேட்டில் பதியச் செய்தான்.

அந்த டாக்டரம்மா அவனைப் பார்த்து என்ன நினைத்தாளோ, தெரியவில்லை ''நீங்கள் ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம். எல்லாம் நல்லபடியாக நடக்கும். நாங்கள் நன்கு கவனித்துக் கொள்வோம்'' என்றாள் கனிவுடன்.

இந்தச் சமயம் ஒரு நர்ஸ் வந்து, கமலியின் உடைகள், நகைகள் முதலியவற்றை அவனிடம் ஒப்படைத்து விட்டுப்போனாள். டாக்டரம்மாவுக்கு வந்தனம் சொல்லி விட்டுப் பாஸும் வாங்கிக் கொண்டு வெளியே வந்தான் சாமிநாதன்.

''வாங்க தம்பி போகலாம்! நான் எவ்வளவோ கேட்டுப் பார்த்துட்டேன்; வார்டிலே தங்கியிருக்க என்னை விடமாட்டேங்கறாங்க; நாளைக் காலம்பறத்தான் வந்து பார்க்கணுமாம்'' என்றவாறு அந்த முதியவள் வராந்தாவுக்கு வந்தாள்.

''கமலி என்ன சொன்னாம்மா?'' என்று ஆவலுடன் வினவினான் சாமிநாதன்.

''அவள் வருகிறவரையில் உங்களை நான் கவனிச்சுப் பார்த்துக்கணுமாம். அந்த அவஸ்தையிலும் இதைத்தான் சொன்னாள்.''

இருவரும் மெல்லச் சிரித்துக் கொண்டனர். சாமிநாதனுக்கு அவ்விடத்தை விட்டுச் செல்லக் கால் வரவில்லை. பின்னால் திரும்பிப் பார்த்தபடியே வந்தான்.

''இந்த ரிக்ஷாவிலேயே வீட்டுக்குப் போய் விடுங்கம்மா!''

''நீங்க தம்பி?''

''தபாலாபீஸுக்குப் போய் மாயவரத்துக்கு ஒரு தந்தி கொடுக்கலாம்னு நினைக்கிறேன்.''

''கமலியோட அம்மாவுக்கா? இப்ப எதுக்கு? நாளை தகவல் தெரிஞ்சுக்கிட்டுத் தந்தி கொடுக்கலாமே!''

''அப்படிங்களா?... சரி...'' என்று தயக்கத்துடன் இழுத்தான் சாமிநாதன்.

''ஆமாம், தம்பி! ஒரு நல்ல சமாசாரத்தைக் குறிப்பிட்டுத் தந்தி கொடுத்தால், அவங்களும் என்னமோ ஏதோ'ன்னு பயந்துடாம சந்தோஷமாக் கிளம்பி வருவாங்க. இப்ப இருக்கிற நிலவரத்தைத் தெரிவிச்சு அவுங்களை ஏன் வீண் காபுரா படுத்தனும்?''

''அதுவும் சரிதான்.''

''கமலிக்கு எல்லாம் நல்லபடியாவே நடந்துடும். நேரே வீட்டுக்குப் போய்க் கொஞ்ச நேரம் படுத்துக் காலம்பற சீக்கிரமா எழுந்து இங்கே வரப் பாருங்க. இப்பவே மணி ரெண்டுக்கு மேல் ஆயிடுத்து.''

''உங்களுக்கு ரொம்பவும் சிரமம் கொடுத்துட்டேன்...'' என்று நன்றிப் பெருக்குடன் சொன்ன சாமிநாதன் சற்றுக் கோபம் செறிந்த குரலில், ''பாருங்கம்மா, அந்த வேலைக்காரப் பொம்பிளைக்கு நான் எவ்வளவோ சொல்லி வச்சிருந்தும் இந்தக் கடைசி நேரத்திலே இப்படி மோசம் செய்துட்டாள் பார்த்தீங்களா?'' என்றான்.

''கமலியும் சாயந்திரமே தன் உடம்பு என்னமோ பண்ணுதுன்னு அவள் கிட்டே சொன்னாளாம். வேலையெல்லாம் முடிஞ்சதும் ராத்திரி ஒன்பது மணிக்கு வீட்டுக்குப் போய் உடனே திரும்பிடறதாகச் சொல்லிட்டுப் போனவள் வரவேயில்லே. அதனால்தான் உங்களுக்கு இவ்வளவு சிரமம் கொடுக்கும்படியாகிடுச்சு. இந்த மாதிரிப் பொறுப்பில்லாத ஜன்மங்களையெல்லாம் நம்பி வீட்டிலே வேலைக்குச் சேர்க்கிறது எவ்வளவு பெரிய தப்புன்னு இப்பத்தான் எனக்குத் தெரியுது.''

''நானும் அதை நினைச்சு வருத்தப்பட்டேன் தம்பி! அந்த வேலம்மாவா இப்படி நடந்துகிட்டாள்னு என்னால் நம்பவே முடியலே. ஆச்சரியமாயிருக்குது. ஒருவேளை அவளுக்குத் திடீர்னு உடம்பு முடியாமல் ஆயிடுத்தோ, இல்லே வேறே எதனாச்சும் தள்ள முடியாத அவசர காரியம் குறுக்கிட்டு அவளை வரவிடாம பண்ணிடுத்தோ; எதுக்கும் விடிஞ்சப்புறம்தான் விஷயத்தைத் தீர்மானிக்கணும். ஏன்னா அவள் அந்த மாதிரி மனுஷி இல்லே.''

சாமிநாதனால் இந்தச் சமாதானத்தை ஏற்க முடியவில்லை. ''சரியம்மா! நீங்க புறப்படுங்க!'' என்றான் உள்ளார்ந்த விரக்தியுடன்.

அந்த முதியவள் ரிக்ஷாவில் ஏறி அமர்ந்து புறப்பட்டாள். ரிக்ஷாக்காரன் ஏற்கனவே அவர்களுக்குப் பழக்கமானவன்.

கமலிக்கு இது முதல் பிரசவம். கல்யாணமாகி ஐந்து வருடங்களாகி விட்டன. முதலிரண்டு வருடங்களில் சாமிநாதன், 'இப்போது குழந்தை வேண்டாமே' என்றுதான் எண்ணினான். புதுமண இன்பத் தடாகத்தில் ஆசை தீர நீந்திக் களிப்பதற்குக் குழந்தை ஒரு தடைக் கல்லாயிருக்கும் என்பதால் அவன் அவ்வாறு எண்ணவில்லை. அதற்கு வேறொரு முக்கிய காரணம் இருந்தது.

எளிய குடும்பத்தில் பிறந்த சாமிநாதன் பத்து வயதிலேயே தாயை இழந்தான். பிறகு பதினாறும் வயதில் தந்தையையும் பறிகொடுத்தான். அநாதையாகிவிட்ட அவனுக்குக் கல்விச் செல்வத்தை அளிக்க முன் வந்தார் அவனது தந்தையின் முதலாளி. ஆனால் அவன் கல்லூரிக்குள் புகு முன்பாக அவரும் காலனுக்கு விருந்தாகி விட்டார். ஆகவே சாமிநாதன் வயிற்றுப்பாட்டுக்கு மட்டுமில்லாமல் அதுவரை அப்படி இப்படி என்று கொஞ்சம் கொஞ்சமாக ஏறிக்கொண்டு வரும் கடனை அடைக்கவும்கூட அவன் வேலை தேடித்தான் ஆகவேண்டும் என்ற கட்டாயத்தில் இருந்தான். கடவுள் கிருபையால் மாதம் இருநூற்றைம்பது ரூபாய் சம்பளத்தில் ஒரு வேலையும் கிடைத்தது. அந்தச் சமயத்தில் கடனும் நாலாயிரம் ரூபாயாகி விட்டிருந்தது. ஹோட்டல் சாப்பாட்டு வாசியாக உடலையும் பணத்தையும் கெடுத்துக் கொள்ள விரும்பாத சாமிநாதன் இல்லாளைத் தேடிக் கொண்டு வாழ்க்கையை இனிமையாக்கிக் கொள்ள முடிவு செய்தான். அதன் விளைவு கடன் ஐயாயிரம் ரூபாயாக உயர்ந்தது. ஆனால் அவன் தன் மனத்துக்குகந்த மங்கையாகக் கமலி வாய்த்ததை அவன் பாக்கியமாகவே கருதினான்.

சாமிநாதனின் மனைவி கமலி எளிய குடும்பத்தில் பிறந்தவள்தான். எனினும் தாய் தந்தையரின் வயதான காலத்தில் ஒரே பெண்ணாகப் பிறந்ததால் மிகவும் செல்லமாக — கஷ்டம் தெரியாமல் — வளர்க்கப்பட்டிருந்தாள். பெற்றோர் தம் சக்திக்கு உட்பட்ட வகையில் அவளுக்குச் செய்ய வேண்டியதை நல்ல விதமாகவே செய்து அனுப்பினர். ஆனால் மாப்பிள்ளை சாமிநாதன் தனதுகடனை அடைக்க உதவும் அளவுக்கு அவர்களால் ஒன்றும் பண்ண முடியவில்லை. மகளின் மீதும் மாப்பிள்ளை மீதும் மாசற்ற அன்பு ஒன்றையே அவர்கள் குறையின்றி அளிக்க முடிந்தது.

சாமிநாதனும் அவர்களிடமிருந்து அப்படி எதையும் எதிர்பார்க்கவில்லை. அவன் இயற்கையிலேயே தன்மான மிக்கவன். தர்ம நியாயத்துக்குக் கட்டுப்பட்டவன். எனவே, தனக்குத் தெரிந்து, தானே ஏற்றுக் கொண்ட கடன் பளுவைப் பிறர் தோளில் சுமத்தி நிவாரணம் தேடிக் கொள்ளச் சிறிதும் விரும்பவில்லை. தன் நிலைமையைப் புது மனைவியிடம் ஒளிவு மறைவின்றிச் சொல்லி அவளுடைய முகம் கோணாத ஒத்துழைப்

யைக் கொடுத்து வருமாறு கேட்டுக் கொண்டான். அவனுக்கு அவளை எல்லா வகையிலும் பிடித்திருந்தது.




அவனுடைய மாத வருவாயில் பாதிக்கு மேல் கல்யாணக் கடனுக்கே போய் அடைந்தது. அந்தக் கடன் மட்டும் இல்லையானால் அவர்களுடைய புது மண வாழ்க்கை ஒரு தேனடையாகவே தித்தித்துக் கிடந்திருக்கும்.

ஆயினும் அவர்கள் அதற்காகக் கவலைப்படவில்லை. வெய்யிலில் நடந்தால்தானே நிழலின் அருமையைப் பூரணமாக அநுபவிக்க இயலும்? எதிர்காலத்தின் இன்பமயமான வாழ்க்கைக்கு இந்த ஆரம்ப காலக் கஷ்ட ஜீவனத்தை 'ஓர் இஷ்ட பாடமாக' எடுத்துக் கொண்டு பயில்வது நல்லதே என்ற முடிவுடன் அவர்கள் அமைதியாக நாட்களைக் கடத்தி வந்தார்கள்.

கல்யாணக் கடன் முற்றாகத் தீரக் குறைந்த பட்சம் மூன்றாண்டுகளாவது ஆகும். அதுவரை வீட்டுச் செலவுகளை எண்ணி யெண்ணித் திட்டமிட்டுக் கட்டும் செட்டுமாகச் செய்வது என்று இருவரும் தீர்மானித்தார்கள். எந்தக் காரணத்தைக் கொண்டும் அநாவசியச் செலவுகளுக்கு இடமே வைக்கக் கூடாதென்றும் உறுதி பூண்டார்கள். ஆனால் எதிர்பாராத செலவு ஏதேனும் திடீரென வந்து சேர்ந்தால் என்ன பண்ணுவது என்ற சிந்தனையும் தோன்றாமலில்லை. அவர்களைப் பொறுத்த வரையில் அப்படி வரக் கூடியது ஒரே ஒரு செலவுதான். — கமலி தாய்மைப் பேறு அடைவது!

அந்தச் 'செலவை'த் தடுக்க அவர்களால் முடியுமா? விதி வசமாய்க் கமலி ஒன்றோ இரண்டோ குழந்தைகளுக்குத் தாயாகி விட்டால் அவ்வளவுதான்; அவர்கள் போட்ட மூன்றாண்டுத் திட்டமெல்லாம் முறிந்து வீழ்ந்துவிடும்! அப்புறம் கடன் தீர எத்தனை ஆண்டுகளாகுமோ? வட்டியே அசலுக்கு மேல் ஆகி ஆளை விழுங்கி ஏப்பம் விட்டு விட்டாலும் விடும்.

'கடவுளே! இன்னும் மூன்று வருடங்களுக்குக் குழந்தை என்ற சூறைக் காற்றை என் சிறிய குடும்பம் என்னும் தோட்டத்துக்குள் நுழைய விடாமல் காப்பாற்று, அப்பனே!'

சாமிநாதனின் இவ்வேண்டுதல் ஏற்கப்பட்டதாயிற்று. ஆமாம்; கமலி கமலியாகவே இருந்தாள், கமலியம்மாளாகவில்லை.

மூன்றாண்டுகள் ஓடின. கடன்களும் தீர்ந்தன. சாமிநாதன் சுதாரித்து விட்டான். அந்தச் சிறு குடும்பத்தில் கஷ்டம் தொலைந்து லட்சுமீகரம் மெல்லத் மெல்ல தலைகாட்டத் தொடங்கியது.

ஆனால், சாமிநாதன் இந்தப் புது வாழ்வின் சுகத்தை அநுபவிக்க இயலாதவனானான். அதற்குக் காரணம் அவனுடைய அன்பு மனைவி கமலியே!

கஷ்டப்பட்ட காலத்திலெல்லாம் அந்தக் கஷ்டத்தைச் சிறிதளவும் உணரவிடாதபடி மகிழ்ச்சியும் மலர்ச்சியுமாக நடத்து வீட்டை ஒளியுடன் வைத்து வந்த அவள் இப்போது முற்றிலும் மாறுபட்ட குணக் கூறுபாடுகள் கொண்டவளாய் நடக்க ஆரம்பித்தாள். அவளிடம் ஏற்பட்ட இம்மாறுதல் சாமிநாதனுக்கு எவ்விதச் சிரமங்களையும் அளித்து விடவில்லையாயினும் அவனது மனோகரமான கற்பனைகளை நடைமுறையில் கண்டு அநுபவிப்பதற்கு அது ஊறு விளைவிக்கவே செய்தது. இந்நிலையை முதலில் அவன் அறிந்து வியப்பும் குழப்பமும் அடைந்தான். பிறகு அதன் நிஜக் காரணம் ஒருவாறு தெரிய வந்தபோது அவனே அவளின் போக்கை அநுசரித்து அவனும் அவளைப் போல மாறிப் போனான்.

அந்தக் காரணம், திருமணமாகி மூன்று ஆண்டுகளாகியும் தனக்கு ஒரு குழந்தை பிறக்கவில்லையே என்ற ஏக்கத்தில் கமலி ஒடுங்கி, ஒளி இழந்து கிடக்கிறாள் என்பது தான்!

கடன் தீரும்வரையில் குழந்தை வேண்டாம் என்று நினைத்தவன் சாமிநாதன் தானே தவிரக் கமலி அவ்வாறு எண்ணவில்லை. தான் அப்படி விரும்புவதாக அவனும் அவனிடம் சொன்னதில்லை. அவன் அவ்விதம் நினைத்திருக்கிறான் என்பது அவளுக்குத் தெரியாது. எனவே மணமான மறு வருடத்திலிருந்து தான் ஒரு குழந்தைக்குத் தாயாக வேண்டும் என்ற ஆசையை நெஞ்சில் வளர்த்துக் கொண்டு அதை ஒவ்வொரு மாதமும் எதிர்பார்த்துப் பார்த்து ஏமாற்றமடைந்து வந்த கமலி, மணமாகி மூன்றாண்டுகளுக்குப் பின்னும் அந்த ஆசை நிறைவேறாததைக் கண்டு தன் ஏமாற்றத்தை ஏக்கமாக்கிக் கொண்டாள். அதுவே அவளது போக்கையும் மாற்றத் தொடங்கி விட்டது.

குழந்தை வேண்டாம் என்று சாமிநாதன் எந்த நேரத்தில் நினைத்து வேண்டிக்கொண்டானோ? அவ்வேண்டுதல் அவனுடைய வாழ்நாள் முழுக்கப் பலித்துக் கொண்டே இருந்துவிடும்போல் தோன்றியதைக் கண்டு அவனே இப்போது மிரண்டு போனான். மூன்றாண்டுகளுக்கு முன் குழந்தையை ஒரு கொடும் புயலாக எண்ணி அந்தப் புயலைத் தன் குடும்பம் என்னும் சிறு தோட்டத்தில் புகச் செய்து அழித்து விடாதே என்று வேண்டிக் கொண்டவன், இன்று, ''குழந்தை இல்லையே என்னும் ஏக்கப் புழுக்கத்தில் வெந்து கருகிக் கொண்டிருக்கும் என் குடும்பப் பூங்காவில் குழந்தை யென்னும் ஓர் இளந் தென்றலை அனுப்பி இதப்படுத்து இறைவா!'' என்று வேண்டத் தலைப்பட்டான். வேண்டுவதுபடியெல்லாம் விதி மாறிக் கொண்டேயிருக்குமா? அது மாறுவதுமில்லை; மாற்றப்படுவதுமில்லை.

வீட்டில் அமைதியின்மை, மகிழ்ச்சிக் குறைபாடு, உற்சாக வறட்சி, நம்பிக்கைச் சூன்யம். குழந்தை வரம் கோரி க்ஷேத்திராடனம், விருட்சப் பிரதட்சிணம் செய்வதில் எல்லாம் சாமிநாதனுக்கு அவ்வளவு நம்பிக்கை கிடையாது. எனினும் தத்துவங்களைத் தேவைக்குத் தக்கபடி வியாக்கியானம் செய்து கொள்வது வாழ்முறைத் தந்திரங்களில்

ஒன்று அல்லவா? அதன்படி அவன் அவற்றுக்கு விஞ்ஞான ரீதியில் சில காரணங்களைக் கற்பித்துக் கொண்டு இப்போதைக்கு ஏற்றுக் கொள்ளத் தயார் என்றாலும், வீடு, பணம், ஆள் துணை முதலான பிரச்னைகள் தோன்றி அவற்றை ஏற்கத் தடுத்தன.

குழந்தைக்காக ஏங்கிக் கிடந்த கமலியோ தன் கணவனுக்குத் தெரிந்தும் தெரியாமலும் சில விசித்திரக் காரியங்களை யெல்லாம் மேற்கொள்ளலானாள்.

பாலகிருஷ்ணன் படத்தைப் படுக்கையறையில் மாட்டி வைத்துக் கொண்டு அதை மணிக் கணக்கில் வெறித்துப் பார்ப்பது, வெறுந் தரையில் சோற்றைப் போட்டுக் கொண்டு கைகளைப் பின்னால் கட்டியபடி முழந்தாளிட்டுக் குனிந்து வாயாலேயே துழாவி எடுத்து உண்பது, குழவிக் கல்லை மடியில் வளர்த்திக் கொண்டு தூங்குவது, குருவிகள் வந்து கூடு கட்ட உத்தரத்தில் நெற்கதிர் தொங்கவிடுவது, அக்கம் பக்கத்து வீட்டுப் பிள்ளைக்காரிகளுக்கு எவர் சில்வர் பாலாடை வாங்கிப் பரிசளிப்பது— என்றிப்படி இன்னும் பல.

வருடங்கள் ஐந்தாகின. குழந்தைப் பேறு விஷயத்தில் சாமிநாதன் இப்போது ஒரு முடிவுக்கு வந்து விட்டான். 'நானோ அல்லது கமலியோ மலடாயிருக்கக் கூடும். அதனால் தான் இவ்வளவு காலமாகியும் குழந்தை பிறக்கவில்லை. ஆகவே இனி அந்த ஆசையை அறவே விட்டொழித்து விட வேண்டியது தான்.'

என்ன ஆச்சரியம்! இப்படி அவன் இர்மானித்த ஐந்தாறு தினங்களுக்குப் பின் ஒரு நாள் காலை குளியலறையிலே கமலி மயங்கிச் சாய்ந்தாள். அடுத்துச் சில நாட்கள் குமட்டிக் குமட்டி வாந்தியும் எடுத்தாள். அப்புறம்தான் விஷயம் வெளிப்பட்டது, அவள் தலை முழுகி இரண்டு மாதங்களாகின்றன என்று! டாக்டரம்மாவும் இந்த 'அதிசயத்தை' ஊர்ஜிதம் செய்தாள்.

பிறகு கேட்க வேண்டுமா? சாமிநாதன் மகிழ்ச்சிப் போதையில் மிதக்கலானான். கமலியோ இன்பக் கும்மாளியிட்டுப் பறக்கவே ஆரம்பித்து விட்டாள். அந்தச் சதிபதிகளின் கற்பனைகள், அவற்றின் அடிப்படையில் முன்னேற்பாடாகச் செய்ய முனைந்த காரியங்கள் எல்லாம் ஒரே நாடகக் களேபரம்தான்!

கருத் தரித்திருக்கும் நிலையில் தன் மனைவி இத்தனை அளவு கடந்த சந்தோஷமும் உற்சாகமும் காட்டுவதால் அவளின் உடல் நலனுக்கு அவை ஊறு விளைவித்துவிடுமோ என்று பயந்து போனான் சாமிநாதன். அதற்காக அவளை அவன் நல்ல வார்த்தைகளைக் கொண்டு கண்டிக்கவும் செய்தான். ஆயினும் அவனுடைய சந்தோஷத்தை அவனால் அத்தனை எளிதாகக் கட்டுப்படுத்தி விட முடியவில்லை. அப்போது அவன் செய்த ஒரு குறும்புத்தனமான காரியத்தை நினைத்தால் இன்றும் அவனுக்குச் சிரிப்பு வெடித்துக் கொண்டு வருகிறது.

அன்று ஞாயிற்றுக்கிழமை முற்பகல் நேரம். கமலி சமையல் வேலையில் ஈடுபட்டிருந்தாள். சாமிநாதன் சாய்வு நாற்காலியில் சாய்ந்து ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான்.

''என்னங்க, இதைப் பார்த்தீங்களா?'' என்று பரபரப்புடன் சொல்லிக் கொண்டே சமையல் கட்டிலிருந்து ஓடி வந்தாள் கமலி.

என்னமோ ஏதோ என்று சாமிநாதனும் அவசரமாக நிமிர்ந்து உட்கார்ந்தான்.

''இதோ பாருங்களேன், இந்தப் பொல்லாத குட்டிப் பாப்பா எப்படியெல்லாம் வளைஞ்சு வளைஞ்சு ஓடுது! ரவுண்ட் அடிக்குது!'' என்று முகமெல்லாம் கன்றிச் சிவக்கக் கூறிக்கொண்டே அங்கிருந்து ஓடினாள்.

ஏழாம் மாதத்திலிருந்து கமலி மிகவும் சிரமப்படுவதைக் காணச் சாமிநாதனுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. அதைக் காட்டிலும் அவள் தன் சிரமங்களை அவனுக்குத் தெரிய விடாமல் மறைக்க எடுத்துக் கொள்ளும் முயற்சிகளைப் பார்த்தே அவன் இன்னும் தவிப்படைந்தான்.

அவளைப் பிறந்தகத்துக்கு அனுப்பிவிடலாம் என்றாலும், அங்கே அவளது தந்தை கடந்த இரண்டு மாதங்களாக உடம்பு ரொம்பவும் முடியாமல் படுக்கையில் கிடந்ததால் அவரைக் கவனிக்கவே அவளது தாய்க்குச் சரியாக இருந்தது. இந்நிலையில் மகளையும் பிரசவத்துக்கு அழைத்துக்கொள்ள அவளால் இயலவில்லை. இப்படி ஓர் எதிர்பாராத சங்கடம் ஏற்பட்டு விட்டதே என்று அவர்கள் மிகவும் மன வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அங்கிருந்து வரும் கடிதங்களிலிருந்து அறிய முடிந்தது. இது ஒருபுறமிருக்க, கமலிக்கே தாய் வீட்டுக்குப் போக வேண்டும் என்பதில் அவ்வளவு அக்கறை இருப்பதாகத் தெரியவில்லை. இதற்குக் காரணம் பிரசவ சமயத்தில் கணவன் உடனிருக்க வேண்டும் என்று அவள் உள்ளூற விரும்புவதாக இருக்கலாமாம்.

'குறத்தி பிள்ளை பெற்றால் குறவன்மருந்து தின்னுவானாம்' என்பதுபோல் தன் மனைவி உடலால் படும் அவஸ்தைகளை யெல்லாம் அவன் மனத்தால் பட்டுக்கொள்வதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய முடியாமற் போயிற்று.

எப்படியோ ஒன்பது மாதங்கள் கடந்து இரண்டாம் வாரத்தில் ஒரு புதன்கிழமையான இன்று கமலிக்கு அந்தப் பேறு நேரமும் வந்து, அவளை இதோ, ஆசுபத்திரிக்கு அழைத்துப் போய் விட்டு விட்டு வருகிறான்.

இந்த நெருக்கடியான சமயம் பார்த்து அந்த வேலைக்கார வேலம்மாவும் உதவிக்கு வராமல் மோசம் செய்து விட்டாளே! அதை நினைக்கும்போதுதான் அவனுக்கு ஆத்திரமும் வருத்தமும் மாறி மாறிக் குமுறிப் பொங்கின.

''என்ன தம்பி, இவ்வளவு நேரம் கழிச்சு வருகிறீங்க? இப்ப மணி மூணாச்சே?'' என்று கேட்டவாறு வந்து கதவைத் திறந்தாள் வீட்டுக்கார அம்மாள். அவனுடைய வருகையை எதிர்பார்த்து அவளும் அவளது கணவரும் இவ்வளவு நேரம் தூங்காமல் விழித்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது அவர்களின் தெளிவான முகத்திலிருந்து தெரிந்தது.

# சக்திக்கும் வலிமைக்கும் போர்ன்விடா!

சக்தியளிக்கும் போர்ன்விடா நாவினிமையிலே சிறந்ததோர் பானமாக விளங்குவதன் ரகசியம்—செழுமையான கோகோ!






வளம்மிக்க சிறந்த பொருள்களான கோகோ, மால்ட் சர்க்கரை, பால் இவையாவும் திட்டமாக கலக்கப் பெற்று தயாரிக்கப்பட்டதன் பலன்....தென்பும் திடமும் தரும் ஒரு தீஞ்சுவைப் பானம் போர்ன்விடா. சூடான பாலிலே போர்ன் விடா கலந்து ஒரு கோப்பை அருந்துங்கள்...நாவுக்குத் தான் என்ன இனிமை, உடம்புக்குத்தான் என்ன வலிமை.

சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும்

**காட்பரிஸ் போர்ன்விடா**

2296 A TM

பதினெட்டாம் நூற்றுண்டிலிருந்துதான் கருப்புக் கோட் அணிய ஆரம்பித்தனர் வக்கில்கள். அதற்கு முன்பெல்லாம் அவர்களும் பல நிறங்களில் ஆடைகள் அணிந்தே நீதி மன்றங்களுக்குச் செல்வர்! 1714ம்



ஆண்டு ராணி ஆனே இறந்த பொழுது, வருத்தத்தைத் தெரிவிக்கக் கறுப்புக் கோட் அணிந்து இறுதிச் சடங்கில் கலந்துகொண்டனர். அதுமுதல் இதையே தங்கள் சீருடையாக ஆக்கிக் கொண்டு விட்டார்கள்!

தகவல்: ச. ஸ்ரீதரன்

ஆதாரம்: 'டிட்பிட்ஸ்'

## கோர்ட்டில் கறுப்புக் கோட்

சென்றெழிந்த காலத் தடங்களில் நடக்கப் போனதால் தன் வீட்டுக்கு வரவேண்டிய நேர்த் தடத்தை விட்டு விட்டுச் சுற்று வழிகளில் இறங்கிச் சாவதானமாக வந்து சேர்ந்திருப்பதை அப்போதுதான் உணர்ந்த அவன் அசட்டுச் சிரிப்புடன், "ஆமாம்மா! சும்மா இப்படி மெல்ல நடந்து வந்தேன், நேரமானதே தெரியவில்லை" என்றான்.

"சரி; சீக்கிரமாய்ப் போய்ப் படுத்து விடியக்காலம்பற எழுந்து ஆறு மணிக்கெல்லாம் ஆசுபத்திரிக்குப் புறப்படுங்க தம்பி! அதுக்குள்ளாற நான் காப்பி போட்டு வைக்கிறேன். கையோட எடுத்துட்டுப் போங்க."

"ஆகட்டும்மா!"

அந்த அம்மாள் மாடிக்குப்போய்விட்டாள். வீட்டுச் சொந்தக்காரர் மாடியிலும், அவன் கீழேயுமாகக் குடி யிருக்கிறார்கள்.

சாமிநாதனுக்கு உடல் ரொம்பவும் அசதியாயிருந்தது. படுக்கையில் சாய்ந்தான். தூக்கம் வரவில்லை. அங்கே ஆசுபத்திரியில் கமலி இந்நேரம் பிரசவ வேதனைப்பட்டுக் கொண்டிருப்பாள். இங்கே இவனும் அதே போன்ற வேதனையை மனத்தளவில் படுவது போல் அப்படியும் இப்படியுமாகப் புரண்டு கொண்டே யிருந்தான். சிலசமயம் வாய் விட்டு ஏதேதோ முனகியும் கொண்டான்.

தான் தூங்குவதாகவே அவனுக்குப் பிரமை. ஆனால் விடியற்காலை ஐந்தரை மணிக்கு எழுந்தபோது அன்றிரவு முழுக்கத் தான் ஒரு பொட்டுத் தூக்கமும் தூங்கவில்லை என்பதை அவனால் உணர முடிந்தது.

கமலி வீட்டில் இருக்கிறாள் என்ற நினைப்பில் — அன்றாடப் பழக்கத்தின் காரணமாய்— சில காரியத் தேவைகளுக்கு அவளை எதிர் பார்த்துப் பின் ஏமாந்து, தட்டுத் தடுமாறித் தானே எப்படியோ ஒப்பேற்றிக் கொண்டு ஆசுபத்திரிக்குப் புறப்பட அவன் தயாரான போது, வீட்டுக்கார அம்மாள் ஒரு பிளாஸ்கில் காப்பியை நிறைத்துக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போனாள்.

மணி ஆறரை. இவ்வளவு நேரமாகியும் அந்த வேலைக்காரி வேலம்மாள் வரவில்லை. அவளை எதிர்பார்த்துப் பதினைந்து நிமிடங்கள் காத்திருந்தான். இத்தனை நாட்களும் அவள் காலை ஐந்து அல்லது ஐந்தரை மணிக்கு வந்து விடுவாள். அதற்கு மேல் ஒரு நிமிடமும் தாமதித்து வந்ததை அவன் கண்டதில்லை. அப்படிப் பட்டவளுக்கு இன்று என்ன வந்துவிட்டது? அந்த வேலம்மாளைப் பற்றிக் கமலி இவனிடம் என்னவெல்லாம் சொல்லிப் புகழ்ந்திருக்கிறாள்! தன் பெற்றோருக்கு எழுதும் ஒவ்வொரு கடிதத்திலும்கூட அவளைக் குறித்து ஒரு வரியாவது எழுதத் தவற மாட்டாள். அத்தனை திருப்தியும் பரிவும் அவளுக்கு இவள்மீது உண்டு. அப்படி ஒரு வேலைக்காரி தனக்கு வாய்த்தது பெரிய அதிர்ஷ்டம் என்று அவள் அடிக்கடி சொல்வாள். அதை இவனும் முழுக்க ஆமோதிப்பான். பட்டணத்தில் ஒரு நல்ல வேலைக்காரி கிடைப்பது எவ்வளவு சிரமம் என்பதை அவன் அறியாதவனா?

வேலம்மாவுக்கு வயசு நாற்பத்தைந்து இருக்கலாம். நல்ல களையான முகம். ஆனால் அதிலே சதா சர்வம் ஏதோ ஓர் ஏக்கம் குடி கொண்டிருப்பதாகத் தோன்றும். அவள் சிரிப்பதென்பது ரொம்பவும் அபூர்வம். ஆயினும் சிடுசிடுப்பைக் காண முடியாது. அவளுக்குக் கணவனும், பதினைந்து வயதில் ஒரு பையனும் இருப்பதாகக் கேள்வி. அவர்கள் அவளோடு இருக்கவில்லை. எங்கோ வெளியூரில் இருக்கிறார்களாம். இவள் இங்கே இருப்பது தனிமையில்தான். இதற்கு மேல் அவளைப்பற்றித் தகவல் ஏதும் தெரியாது. தெரிந்துகொள்ள வேண்டிய அவசியமும் ஏற்படவில்லை.

இப்படி இவ்வீடே கதி என்று இருந்தவள் இன்று பார்த்து ஏன் மட்டம் போட்டு விட்டாள்? ஒருகால் அவள் உடம்புக்கு ஏதேனும் இருக்குமோ? இங்கிருந்து வேலையை முடித்துக் கொண்டு போகும்போது நன்றாகத் தானே போனாள்! அப்படி உடம்பு முடியவில்லையானால் நேரில் வந்து ஒரு வார்த்தை சொல்லி விட்டுப் போகலாமே? நடக்க முடியாத அளவு அப்படித் திடீரென்று என்ன வந்து தொலைந்து விடும்?.. நெஞ்செல்லாம் பற்றி எரிய ஆசுபத்திரிக்குப் புறப்பட்டான் சாமிநாதன்.

ஆசுபத்திரி வராந்தாப் படியில் ஏறியதுமே அந்தக் கோபக் குமுறல்கள் மறைந்து ஒருவிதப் பயமும் பதற்றமும் அவனைச் சூழ்ந்து கொண்டன. பனிக்கட்டியின் மீது நடப்பது போல் பாதங்கள் வியர்த்துக் கொட்டிச் சில்லிட்டன. நெஞ்சு படபட வென அடித்துக் கொண்டது. நீளமான

வராந்தாவை யொட்டி அமைந்திருந்த வார்டுகளின் ஒவ்வொரு நம்பரையும் பார்த்த படி தயங்கித் தயங்கி நடந்தான்.

ஏழு, எட்டு, ஒன்பது...

சட்டென்று நின்ற சாமிநாதன் அந்த ஒன்பதாம் நம்பர் அறையில் வாசலருகில் போய் உள்ளே எட்டிப் பார்த்தான். குப் பென்று 'லைசால்' வாசனை அவன் மூக்கைத் தாக்கியது.

அந்த விசாலமான அறையிலே இரண்டு வரிசைகளாகச் சுமார் பதினைந்து கட்டில்கள் போடப்பட்டிருந்தன. அவற்றில் ஒன்று கூடக் காலியாக இல்லை. ஒவ்வொரு கட்டிலி லும் ஒரு தொட்டில்; வலது புறம் ஒரு கப்—போர்டு.

படபடக்கும் தன் பார்வையை நிமிர்த்தி அங்கிருந்த ஒவ்வொரு கட்டிலின் மீதும் ஓட விட்டான். அதோ, அந்த முதல் வரிசையின் மூன்றாவது கட்டிலிலிருந்து ஒரு மெலிந்த கரம் மேலே உயர்ந்து அசைகிறது. கமலியின் கையா அது?...

அளவு கடந்த திகிலும், அளவுக்கு மீறிய ஆவலுமாக அந்தக் கட்டிலை நோக்கி மெல்ல நடந்தான் அவன். அந்தக் கட்டிலின் அருகில் போய் நின்றான். அவனுடைய பார்வை முதலில் கமலியை நோக்கித்தான் சென்றது. பிறகே தொட்டில் பக்கம் திரும்பியது.

அப்பாடா! தாயும் சேயும் நலம். கமலிக்குச் சுகப்பிரசவமாகி யிருக்கிறது. அவளிலிருந்து பிரிந்த சாமிநாதனின் உயிர்ப் பிம்பம் அதோ, சின்னஞ் சிறு பொம்மை போல் தொட்டிலில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறது!

கமலி அவனைப் பார்த்துப் புன்னகை பூத்தாள். அந்தப் புன்னகையில்தான் என்ன கம்பீரம்! எத்தகைய பெருமிதம்! பதிலுக்கு அசடு வழியத் தலைகுனிந்து இளநகை புரிந்தான் சாமிநாதன். அவர்கள் சற்று நேரம் ஒன்றுமே பேசவில்லை. ஆனால் அவர்களது பார்வை பேச்சாகியது; அதன் பாஷ்யமாக அமைந்தது அவர்களின் புன்னகை.

''எப்படி? எல்லாம் நலம்தானே?''

''ஊம்!''

'எத்தனை மணிக்கு? '

''காலம்பற நாலரை.'

வெளிறிச் சாம்பிய அவள் முகத்தைக் கனிவுடன் பார்த்துக் கொண்டிருந்தான் அவன். அவளோ அவனிடமிருந்து இன்னு மொரு கேள்வியை மிகவும் ஆவலோடு எதிர்நோக்குகிறவள்போல் அவனையே விழி அசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இதைக் கவனியாத அவன் பையிலிருந்து பிளாஸ்கை எடுத்து கப் — போர்டு மேல் வைத்தான். இந்தச் சமயம், அங்கே அவசரமாக வந்த நர்ஸ் ஒருத்தி பிளாஸ்கைத் திறந்து வைத்துவிட்டு, ''காப்பி ஆறட்டும். சூடாக எதையும் கொடுக்கக் கூடாது'' என்று இதமாகச் சொல்லிவிட்டு அப்பால் சென்றாள். அசடு வழியச் சிரித்துக்கொண்ட சாமிநாதன் மீண்டும் தன் மனைவியைப் பார்த்தான்

'இது என்ன குழந்தை? ' என்று அவனிடமிருந்து ஆவலுடன் எதிர்பார்த்த இந்தக் கேள்வியை அவன் இன்னமும் கேட்காததால் அவளே அடக்கமுடியாமல் கேட்டாள்.

இப்போதுதான் அந்த நினைவு வந்தவன் போல் அவசரமாக அவளைப் பார்த்து, ''ஆமாம்; இது என்ன குழந்தை?'' என்று வினவினான் சாமிநாதன்.

கமலி மென்னகை புரிந்தாள். ''உங்களுக்கு என்ன பாப்பா வேணும்? பிள்ளைப் பாப்பாவா? பெண் பாப்பாவா?''

இதே கேள்வியை அவள் அவனிடம் இதற்கு முன் — ஐந்தாம் மாதம் முதலே— எத்தனையோ தடவை கேட்டு விட்டிருக்கிறாள். அப்போதெல்லாம் அவன் ஒன்றும் பதில் சொல்லாமல் சிரித்து மழுப்பிவிடுவான். ஆனால் உள்ளூற ஆண் குழந்தையையே விரும்புகிறான் என்பதை அவள் அறிவாள்.

உண்மை அதுதான். எனினும் தான் விரும்பினதைச் சொல்லாமல், ''பெண் குழந்தைதானே? அதுதான் எனக்கு.....'' என்றான் குறும்பாகக் கண் சிமிட்டி.

''ஏமாந்தீங்களா? இது ஆண் சிங்கம்!''

சாமிநாதனுக்குச் செவியில் தேனூறு பாய்வது போல் இருந்தது. மகிழ்ச்சிப் பரவசத்தால் உடல் வெட வெடக்கக் கட்டிலின் தலைப்பை மெல்லப் பிடித்துக் கொண்டான்.

தன் கணவனுக்குக் குழந்தையைத் தூக்கிக் காட்ட வேண்டும் என்று கமலியின் கைகள் பரபரத்தன. ஆனால் அவளால் அப்படி இப்படி அசைய முடியவில்லை. இதற்குள் அந்தப் பக்கம் வந்த ஒரு டாக்டரம்மா சாமிநாதனைப் பார்த்து, 'நேரமாகிவிட்டது, போகலாம்' என்பதற்கு அறிகுறியாகச் சமிக்ஞை செய்தாள். அவனும் உடனே கமலியிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டான்.

மகிழ்ச்சிப் பரவசத்தில் மிதந்தவனாய் நேரே தபாலாபீசுக்குச் சென்ற சாமிநாதன், 'ஆண் குழந்தை பிறந்திருக்கிறது; தாயும் சேயும் நலம்' என்று கமலியின் பெற்றோருக்குத் தந்தி கொடுத்தான்.

அந்த வீட்டுக்கார அம்மாளும் ஐயாவும் அவனுடைய மகிழ்ச்சியில் முழுப் பங்கு பெற்றனர். தங்களுக்கே ஒரு பேரன் பிறந்து விட்டாற் போன்ற குதூகலம் அவர்களுக்கு.

இவ்வளவு நேரமாகியும் வேலம்மா வேலைக்கு வரவில்லை. அவளுக்கு என்ன வந்து விட்டது ?

சாமிநாதன் இப்போது அவளை நினைத்துக் கோபமோ கவலையோ கொள்ளாமல் ஆபீசுக்குப் புறப்பட்டான். போகும் போது மறக்காமல் அரைக் கிலோ கற்கண்டு வாங்கிக் கொண்டும் போனான் !

அன்று மாலை காரியாலய அதிகாரியின் அநுமதி பெற்று ஒரு மணி நேரம் முன்னதாகவே வீட்டுக்கு வந்த சாமிநாதன், அந்த வீட்டுக்கார அம்மாளையும் அழைத்துக் கொண்டு மருத்துவமனைக்குக் கிளம்பினான்.

கமலியும் குழந்தையும் நலமாக இருந்தார்கள்:

வேலைக்காரி வராமல் மட்டம் போட்டு விட்ட விஷயத்தைக் கமலியிடம் தெரிவித்தான் சாமிநாதன். தனக்கு அந்த வேலம்மா

உதவியாக வரவில்லையே என்ற கோபம் கூடக் கமலிக்கு இப்போது ஏற்படவில்லை; தன் கணவன் சாப்பாட்டுக்கு என்ன பண்ணுவான் என்னும் கவலைதான் அவளை வாட்டியது. ஹோட்டலில் சாப்பிட்டுக்கொள்வதாகச் சமாதானம் சொன்னான் அவன்.

பார்வையாளருக்குரிய நேரம் முடிந்தது. சாமிநாதனும் வீட்டுக்கார அம்மாளும் அங்கிருந்து போக மனமின்றிப் புறப்பட்டார்கள்.

அடுத்த நாள் காலை அவன் ஆசுபத்திரிக்குக் கிளம்பிக் கொண்டிருந்த சமயம் வாசலில் ஒரு டாக்சி வந்து நின்றது. கமலியின் தாயார் மீனாட்சியம்மாள்தான் மாயவரத்திலிருந்துவந்து சேர்ந்தாள். அவள் வருவாள் என்று சாமிநாதன் எதிர்பார்க்கவே இல்லை. அவளுடைய கணவருக்கு இப்போது உடம்பு கொஞ்சம் தேவலையாக இருந்ததால் தந்தி கிடைத்ததும் புறப்பட்டு விட்டிருக்கிறாள். நிம்மதியும் சந்தோஷமும் அடைந்தான் அவன்.

### கண்டிக்கப்பட வேண்டிய நபர்!

பையனின் தந்தைக்குப் பள்ளியிலிருந்து டெலிஃபோன் அழைப்பு வந்தது. ஆசிரியர் பேசினார்: ''ஸார்! உங்கள் மகன் வகுப்பில் பையன்களின் பென்சிலையெல்லாம் திருடிவிடுகிறானாம். ஏகப்பட்ட புகார். வீட்டிலே அவனைக் கொஞ்சம் கண்டித்து வையுங்கள்.''



தந்தையின் பதில்: ''திருட்டுப் பயல்! அவனுக்கு ஏன் அத்தனை பென்சில்? நான்தான் வேண்டிய அளவு ஆபீஸிலிருந்து பென்சில் கொண்டு வந்து தருகிறேனே!

தகவல்: **மு. சு. தியாகராசன்**

ஆதாரம்: **''டிட்பிட்ஸ்''**

வந்த உடனேயே தன் மகளைப் பார்க்க வேண்டும் என்று பரபரத்தாள் மீனாட்சியம்மாள். ஆகவே, தான் போவதை நிறுத்திக் கொண்டு வீட்டுக்கார அம்மாளுடன் அவளை ஆசுபத்திரிக்கு அனுப்பி வைத்தான் சாமிநாதன். மாமியாருடன் கூடப் போக அவனுக்கு வெட்கம்!

என்ன சோதனை இது! சாமிநாதனின் காரியாலயத்தில் ஆண்டுக் கணக்கை முடிக்கும் வேலை அன்று ஆரம்பமாகியது. எல்லாச் சிப்பந்திகளுமே காலையும் மாலையும் இரண்டு மூன்று மணி நேரம் அதிகமாக வேலை செய்ய வேண்டிய கட்டாயம். மேலதிகாரியின் மீற முடியாத கட்டளை.

சாமிநாதன் தவித்தான். வேறு வழியின்றி விவரத்தை ஓர் ஆபீஸ் பையன் மூலம் வீட்டுக்குச் சொல்லி அனுப்பினான். மீனாட்சியம்மாள் மட்டுமே ஆசுபத்திரிக்குப் போய்க் கமலியையும் குழந்தையையும் பார்த்து விட்டு வந்தாள்.

அன்றிரவு ஒன்பது மணிவாக்கில் வீடு திரும்பிய சாமிநாதன் தன் மனைவி—குழந்தை பற்றி மாமியாரிடம் விசாரித்தான். விசேஷமாக அவள் ஒன்றும் சொல்லவில்லை. 'ரெண்டு பேரும் நல்லா இருக்கிறாங்க' என்று மாத்திரமே சொன்னாள். அவளது முகத்தில் ஏதோ ஒரு வாட்டம் காணப்பட்டது. கவலைக் குறிகளும் தென்பட்டன. பிரயாணக் களைப்பாக இருக்கும் என்று அதற்குக் காரணம் கற்பித்துக்கொண்டு அமைதியடைந்தான்.

அடுத்த நாளும், மறு நாளும் கூட அவன் ஆபீஸே கதி என்று கிடக்க வேண்டியவனானான். ஆனாலும் கவலைப்படவில்லை. கமலியையும் குழந்தையையும் போய்ப் பார்த்து வர வீட்டில் மாமியார் இருக்கிறாள் என்ற தைரியம். பெண்ணைப் பெற்றவளைவிடவா இவன் அதிகக் கவனிப்புக் காட்டிவிட முடியும்—அதுவும் பிரசவித்திருக்கும் சமயத்தில்?

ஐந்தாம் நாள் மதியத்தோடு சாமிநாதனுக்கு ஆபீஸ் வேலைகள் முடிந்தன. அதனால் அன்று எல்லோருக்கும் அரை நாள் லீவு விடப்பட்டது. கமலியும் அன்று தான் டிஸ்சார்ஜ் ஆகி வீட்டுக்கு வரப் போகிறாள். மீனாட்சியம்மாளும் சாமிநாதனும் மாலை ஆறு மணிக்கெல்லாம் ஆசுபத்திரிக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

கமலி கட்டிலில் உட்கார்ந்திருந்தாள்.

குழந்தை தன் காயாம்பூக் கண்களை மலர்த்தியபடி தொட்டிலில் படுத்திருந்தது. அவ்வப்போது சின்னச் சின்னக் கைகளையும் கால்களையும் ஆட்டி அசைத்துக் கொண்டிருந்தது. அதன் வயிற்றில் போடப்பட்டிருந்த கட்டு அவிழ்க்கப்பட்டுக் கொப்பூழில் போரிக் பவுடர் அப்பியிருந்தது.

மகிழ்ச்சி பொங்கக் கமலியைப் பார்த்தான் சாமிநாதன். ஆனால் அவளோ அவனைப் பார்க்காமல் வேறு பக்கம் திரும்பி உட்கார்ந்திருந்தாள்.

''என்ன கமலி! வீட்டுக்குப் போகலாமா?''

''ஊம்!''

அவனுக்குச் சிரிப்பு வந்தது. கடந்த மூன்று நாட்களாக அவளைத் தான் வந்து பார்க்காததால் இப்படிக் கோபித்துக்கொண்டிருக்கிறாளாக்கும் என்று எண்ணிக் கொண்டான். காரண காரியங்களைச் சொல்லிச் சமாதானப்படுத்த இது நேரமில்லை, இடமுமில்லை. எனினும் உள்ளூற ஒரு குறுகுறுப்பு. அது தன் மாமியாரைப் பற்றியது. அவளும் இங்கு வந்த பின் ஒரு மாதிரியாக அல்லவா காணப்படுகிறாள்? மகளிடம் எதுவும் பேசவில்லை; குழந்தையிடமும் கொஞ்சவில்லை. அவனுக்குத் தெரியாமல் நேற்றோ முந்தா நாளோ தாய்க்கும் பெண்ணுக்கும் ஏதேனும் தகராறு மூண்டிருக்குமோ? அதனால்தான் இருவரும் இப்படிக் கிழக்கு மேற்காக

முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறீர்களோ?...

குழப்பமடைந்த சாமிநாதன், "சரி; புறப்படுவதற்குத் தயாராக இரு, கமலி! நான் போய் டாக்டரம்மாவைப் பார்த்து டிஸ்சார்ஜ் ஆர்டர் வாங்கிக்கொண்டு வந்துவிடுகிறேன்" என்றவாறு வெளியே சென்றான்.

அவன் திரும்பி வரப் பதினைந்து நிமிடங்களாயின. அதற்குள் வீட்டிலிருந்து எடுத்து வந்து தந்த தன் சொந்த ஆடைகளை உடுத்திக் கொண்டு புறப்படத் தயாரானாள் கமலி. ஆனால் இப்போதும் அவள் கலகலப்பாயில்லை. குழந்தை இருந்த தொட்டில் பக்கம் முதுகைக் காட்டி உட்கார்ந்து வேறெங்கோ வெறித்துக் கொண்டிருந்தாள்.

"புறப்படலாமா?" என்றவாறு உள்ளே வந்தான் சாமிநாதன்.

மெல்ல எழுந்த கமலி, அந்த வார்டில் இருந்த மற்றப் பிரசவக்காரிகளிடம் சொல்லிக் கொண்டு விடைபெறுவதற்காக ஒவ்வொரு கட்டிலண்டையும் போனாள். அவர்களிடமெல்லாம் அவளுடைய வாய்தான் பேசியதே தவிர அவளின் கண்கள் அங்கே தொட்டில்களில் படுத்திருந்த குழந்தைகளைத் தன்னை மீறிய ஒரு பரபரப்புடன் கூர்ந்து கவனிப்பதைச் சாமிநாதன் வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தான். அந்த அறையை ஒரு சுற்றுச் சுற்றிக் கொண்டு தன் கட்டிலண்டை வந்து நின்றாள் அவள்.

"குழந்தையை எடுத்துக்க கமலி!" என்றபடி கையிலிருந்த டவலை நீட்டினாள் மீனாட்சியம்மாள்.

கமலி பதிலேதும் பேசாமல் முன்னால் நடந்தாள். அவளின் இந்த விசித்திரப் போக்கைக் கண்டு சாமிநாதன் வியப்பும் திகைப்பும் அடைந்தான். ஆனால் வாய் திறந்து எதுவும் கேட்கவில்லை.

முகத்தைத் துடைக்கும் சாக்கில் கண்களைத் துடைத்துக் கொண்ட மீனாட்சியம்மாள் தொட்டிலில் பரப்பிரம்மமாய்ப் படுத்துக் கிடந்த குழந்தையை மெல்லத் தூக்கி அணைத்தபடி மகளின் பின்னால் நடந்தாள்.

அந்த வார்டில் வேலை பார்க்கும் ஆயாக்கள், சுத்திகரிப்புக்காரிகள் ஆகியோருக்குக் கைநிறைய இனாம் கொடுத்துவிட்டு ஆசுபத்திரியின் போர்ட்டிகோவுக்கு வந்தான் சாமிநாதன். அங்கு ஒரு சைக்கிள் ரிக்ஷா நின்றிருந்தது. அதில் கமலியையும் அவளது தாயாரையும் ஏற்றி விட்டுத் தான் பின்னால் வருவதாகச் சொன்னான். இப்போதும் குழந்தை மீனாட்சியம்மாளின் மடியில்தான் இருந்தது. கமலி அதை வாங்கிக் கொள்ளவில்லை; பார்வையைக்கூட அதன் மீது திருப்பவில்லை.

இத்தனை நாட்களும் தன் மனைவியையும் குழந்தையையும் கண்ணும் கருத்துமாக கவனித்துக் கொண்ட அந்த வார்டின் ஸ்டாஃப் நர்ஸைப் பார்த்து நன்றி தெரிவிக்க வேண்டும் என்று சாமிநாதனின் மனம் அவாவியது. அவன் முன்பே அவளைத் தேடிப் பார்த்தான். கண்ணில் தென்படவில்லை. மீண்டும் ஒருமுறை தேடிப் பார்க்கலாமே என்று உள்ளே செல்லத் திரும்பினான்.

"மிஸ்டர், ஒரு நிமிஷம்!"

சட்டென்று நின்றான் சாமிநாதன். அவன் தேடிப்போன அதே நர்ஸ் இனிய புன்முறுவலுடன் அவனை நோக்கி வந்தாள்.

"உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். கேட்க அவகாசம் இருக்குமா?"

வியப்புடன் நிமிர்ந்த சாமிநாதன், "நானும் இப்போது உங்களைத் தேடித்தான் வருகிறேன், சிஸ்டர்!" என்றான் குழைந்த குரலில்.

நர்ஸின் முகம் வெளிறியது. "அப்படியா? உங்கள் மனைவி..." என்று ஏதோ சொல்ல வாயெடுத்தாள். அதற்குள் சாமிநாதன் குறுக்கிட்டு, "ஆமாம் சிஸ்டர்! என் மனைவியின் சார்பாகவும் என் சார்பாகவும் உங்களுக்கு நன்றி கூறவே வந்தேன். உங்களின் கனிவு நிறைந்த பேருதவிகளை நாங்கள் என்றும் மறக்க மாட்டோம்" என்றான்.

"அதெல்லாம் இருக்கட்டும் மிஸ்டர்! நான் சொல்ல வந்த விஷயம் வேறு!" என்று மெல்லச் சிரித்துச் சொன்ன நர்ஸ், சுற்று முற்றும் பார்த்துவிட்டு மேலும் தொடர்ந்தாள்; "இந்தத் தகவலை உங்கள் மனைவி ஒருகால் உங்களிடம் சொல்லியிருக்கலாம் அல்லது சொல்லாமலும் இருக்கலாம். ஆயினும் அவள் மட்டுமின்றி நீங்களும் இவ்விஷயமாய் வீண் குழப்பமோ சஞ்சலமோ கொள்ளக் கூடாது என்பதற்காக நானே உங்களைத் தேடி வந்து அது பற்றிச் சொல்ல முற்படுகிறேன். இதை என் கடமையாகவும் கருதுகிறேன்."

வியப்பு மேலிட்டவனாய், அவளை விழியசைக்காமல் ஏறிட்டு நோக்கினான் சாமிநாதன்.

"இதுபோன்ற ஆசுபத்திரிகளில் பிரசவம் செய்யும் பெண்களுக்கும் அவர்களது குழந்தைகளுக்கும் பிரசவமான உடனேயே ஒரு நம்பர் கொடுப்பது வழக்கம். அந்தந்தத் தாயின் குழந்தை இது என்பதற்கு அடையாளமாக அம்மாதிரி எண்கள் தரப்படும். ஒரே எண்ணுள்ள இரண்டு தகடுகளில் ஒன்றைத் தாயின் கையிலும், மற்றொன்றைக் குழந்தையின் கையிலும் கட்டி வைப்போம். குழந்தைகளைக் குளிப்பாட்டவோ, வைத்தியப் பரிசோதனைக்கோ தூக்கிச் சென்று மறுபடியும் அவ்வந்தத் தாய்மார்களிடம் குழந்தைகளை ஒப்படைக்கும்போது மாறாட்டம் நிகழ்ந்துவிடாமல் இருக்கவே இந்த ஏற்பாடு. இவ்வாறே உங்கள் மனைவிக்கும் குழந்தைக்கும் ஒரொரு நம்பர்த் தகடு கட்டப்பட்டது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக முந்தா நாள் காலை உங்களுடைய குழந்தையை இளம் நர்ஸ் ஒருத்தி குளிப்பாட்ட எடுத்துச் சென்றபோது அதன் கையில் கட்டப்பட்டிருந்த நம்பர் தகடு எப்படியோ அவிழ்ந்து விழுந்துவிட்டது. அவள் அதைக் கவனிக்கவில்லை. குளிப்பாட்டியதும் குழந்தையைக் கொண்டு வந்து தாயிடம் ஒப்படைத்து விட்டாள். நான் குழந்தையின் எடையைக் கணக்கிட வந்தபோது அந்தத் தவற்றை அறிந்து உடனே தண்ணீர்த் தொட்டியண்டை ஓடிப் போய்ப் பார்த்தேன். அங்கே அந்த நம்பர்த் தகடு கிடந்தது. அதை எடுத்து வந்து குழந்தையின் கையில் கட்டினேன். இதை

## ஸ்ரீ புவனேசுவரி மடம்

### அம்பத்தூர்

சென்னையை அடுத்த அம்பத்தூரில் இருந்து கொண்டு ஆன்மிக ஒளியைப் பரப்பி வரும் புவனேஸ்வரி பீடத்தின் அதிபதியான மௌன ஸ்வாமிகளின் மடத்தில் பல அபிவிருத்திகள் செய்ய வேண்டி விருப்பதால் பக்தி உணர்வு கொண்ட ஆஸ்திகப் பெருமக்களுக்கு ஓர் அரிய சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. உலக நாட்டியப் பேரொளி பத்மினி குழுவினரின் ''தசாவதாரம்'' (நடன நாடகம்) 3-3-1968 ஞாயிற்றுக் கிழமை யன்று தியாகராயநகர்; வாணி மகாலில் நடைபெறுகிறது. பக்தர்கள் மேற்படி நடன நாடகத்தைக் காணும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு திருப்பணிக்கு உதவி செய்யலாம்.

டிக்கெட் விவரம்: ரூ. 100: 50: 25 & 10

டிக்கெட்டுகள் கிடைக்குமிடம்:

வாணி மகால் தியாகராயநகர்; நாதன் ஏஜென்ஸீஸ், தியாகராயநகர்; சுக்நிவாஸ், மயிலாப்பூர்; ஹோட்டல் ஸ்வாகத், ராயப்பேட்டை; தீரா ஹோட்டல், விக்டோரியா கிரஸண்ட் தெரு; அம்பீஸ் கேப், பிராட்வே, சென்னை; இங் & கோ. தம்பு செட்டித் தெரு; அம்பாள் கேப், திருவல்லிக்கேணி; பார்க்கர்பிரஸ், பந்தர் தெரு.




### சித்திரக்கலை

மதுரையில் வசிக்கும் எம். அருணாசலம் கூறுகிறார். (47. பாம்பான் கிணற்றுத் தெரு. தெற்கு வாசல், மதுரை-1) தங்கள் புத்தகம் கிடைக்கப் பெற்றேன். தமிழில் இதுபோல் ஓவியப் புத்தகம் காண்பதரிது. எளிய நடையில் தெளிவாக விளக்கியுள்ளீர்கள்.

தங்கள் எம். அருணாசலம்

ஓவியக் கலையின் பூரா அம்சங்களையும் சேர்த்து ஓவியம் என்ற புத்தகம் தயாரித்துள்ளோம். விலை ரூ. 2. வேண்டுவோர் ரூ. 2 M. O. செய்யவும். மேலும், ஆண் பெண் இருபாலரும் எங்கள் வித்யாலயத்தில் தபால் மூலம் ஓவியம் கற்கலாம். ஆறு மாதத்தில் ரூ. 15ல் கற்கலாம். விவரங்களுக்கு இரண்டு 10 N. P. ஸ்டாம்புடன் விண்ணப்பிக்கவும்.

**ராகவன் சித்ர வித்யாலயம் (K)**

மேல்நரமா

மேல்மா P. O. (via) வந்தவாசி N. A.

## *You'll be safe with NEW INDIA*

Whatever the special risk or liability confronts you, there's a NEW INDIA policy to take care of it.

NEW INDIA is the leader in all types of General Insurance famous for prompt and liberal settlement of claims.

## *Protect yourself - Insure with NEW INDIA*

# The New India Assurance Company Limited

Registered Office:

**New India Assurance Building**

**MAHATMA GANDHI ROAD - FORT, BOMBAY-1**

உங்கள் மனைவி பார்த்து விட்டாள். அவளைச் சந்தேகம் பற்றிக் கொண்டது. தன் குழந்தையை மாற்றி வேறு யாருடைய குழந்தையையோ கொண்டு வந்து கொடுத்து விட்டதாகக் கூச்சல் போட ஆரம்பித்தாள். நான் நடந்த உண்மைகளை எடுத்துச் சொன்னேன். எனக்கே நன்றாகத் தெரியும் அது அவளுடைய குழந்தைதான் என்று. எவ்வாறென்றால் அவள் பிரசவித்த சமயம் நான்தான் அருகிலிருந்து கவனித்துக் கொண்டேன். ஆனாலும் அவள் என் பேச்சை நம்பவில்லை. அழுது பிரலாபிக்கத் தொடங்கினாள்...''

மேலே பேச முடியாமல் நர்ஸுக்குத் தொண்டை யடைத்தது. தன்னைச் சமாளித்துக் கொண்டு தொடர்ந்தாள். ''இந்த விஷயம் மேலிடத்துக்குச் சென்றது. பெரிய டாக்டரம்மா வந்து விசாரணை நடத்தினார். சில நுணுக்கமான பரிசோதனைகளும் செய்தார். உங்கள் மனைவியின் குழந்தையே அது என்பது நிச்சயமாகியது. ஆயினும் தாயின் திருப்திக்காக அவளையே விட்டு அந்த வார்டிலிருந்த எல்லாக் குழந்தைகளையும் பார்க்கச் சொன்னார். ஒவ்வொன்றாகப் பார்த்து வந்த உங்கள் மனைவிக்கு எதுவும் தன் குழந்தையாகப் படவில்லை. அவளது குழந்தை போல் இருந்த ஒரு குழந்தையை மட்டும் தூக்கிப் பார்த்தாள். அது பெண் குழந்தை. ஆகவே அவள் அப்போதைக்கு அமைதியடைந்தாள். எனினும் அவளுடைய சந்தேகம் முற்றாகத் தீரவில்லை. என்பது பின்னால் தெரிந்தது. குழந்தைக்குப் பால் கொடுக்காமல் அடம் பிடித்தாள். அது பசியால் அழுது துடிப்பதைப் பார்த்தும் பாராதவளாக இருந்தாள். நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். குழந்தையைத் தொட்டுத் தூக்கி அணைத்துப் பால் கொடுக்காத முன்னமேயே நடந்து விட்ட அந்தச் சம்பவத்தில் சந்தேகம் கொண்டு அது தன் குழந்தை அல்ல என்பது மூடத்தனம் என்றெல்லாம் கூறினேன்.. அவள் எதையும் காதில் வாங்கவில்லை. மிரட்சியுள்ள அவளது மனம் தெளியும் வரை குழந்தைக்குப் பசும்பால் தருமாறு டாக்டரம்மா எனக்குக் கட்டளை யிட்டார். இந்த நான்கு நாட்களாக உங்கள் குழந்தை பசும் பாலைத்தான் பருகி வந்தது. இதனால் தாய்க்குப் பால் கட்டிக் கொண்டது. சிரமப் பட்டாள். ஜுரமும் வந்தது. அதற்கு வேறு சிகிச்சை செய்தோம். அப்போதும் அவள் குழந்தைக்குப் பால் கொடுக்காமலே இருந்தாள். இன்றும் அதே நிலையில்தான் இந்த ஆசுபத்திரியை விட்டுப் போயிருக்கிறாள். விசித்திரமான பெண்...''

துயரத்தோடு பெருமூச்சு விட்ட நர்ஸ் மேலும் சொன்னாள்: ''எனது பதினைந்து வருட கால நர்ஸ் சேவையில் இதுபோன்ற ஓர் அநுபவம் எனக்கு ஏற்பட்டதே இல்லை. பாவம், அந்த இளம் நர்ஸ் இவளால் 'சஸ்பெண்ட்' செய்யப்பட்டிருக்கிறாள். அர்த்தமற்ற வெறும் சந்தேகத்தால் உங்கள் மனைவி தன் குழந்தையை வெறுக்கிறாள். அதைத்தான் என்னால் பொறுக்க முடியவில்லை. அவளிடம் உண்மையை தயமாக எடுத்துச் சொல்லி அவள் மனத்தை மாற்றுங்கள். குழந்தையையும் கவனித்துப் பாருங்கள். நான் சர்வ உறுதியோடு சொல்கிறேன். அது உங்கள் குழந்தையேதான். அதில் எள்ளத்தனை ஐயமும் கொள்ளாதீர்கள்.''

தாய்மைப் பேரன்புடன் இவ்வாறு கூறி விட்டு அங்கிருந்து தன் வார்டை நோக்கிச் சென்றாள் அந்த நர்ஸ்.

பிரமை பிடித்தவன் போல் நின்றிருந்த சாமிநாதன் தலை குனிந்தபடி ஆசுபத்திரியிலிருந்து வெளியே வந்தான். அவனுக்கு இப்போது எல்லாம் புரிந்து போயிற்று. கமலியின் வெறித்த போக்கும், மாமியாரின் முக வாட்டத்துக்குமான காரணங்களை நன்கு தெரிந்து கொண்டான். இந்த எதிர்பாராத சங்கடத்துக்கு என்ன செய்வது?

சந்தோஷம் தாண்டவமாட வேண்டிய அந்த வீட்டில் சோகம் கவிந்து கிடப்பதை உள்ளே வரும்போதே உணர்ந்து கொண்டான் சாமிநாதன். அவனுக்கு முன்னால் வீடு வந்து சேர்ந்திருந்த கமலியும் அவளின் தாயும் ஏதோ காரசாரமான பேச்சில் ஈடுபட்டிருந்தார்கள். அவனைக் கண்டதும் சட்டென்று பேச்சை நிறுத்தினார்கள். மீனாட்சியம்மாள் அடுக்களைக்குள் சென்று மறைந்தாள். கமலி படுக்கையில் சுருண்டாள். புதிதாக வாங்கிப் போட்டிருந்த கட்டிலில் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தது குழந்தை.

சாமிநாதன் இதையெல்லாம் கவனியாதவன் போல் வீட்டுக்கார ஐயாவோடு பேச உட்கார்ந்து விட்டான்.

இரவு சாப்பாட்டு நேரம் வந்தது. கமலிக்குப் பத்திய உணவு. முதலில் அவள் சாப்பிட முரண்டினாள். பிறகு வேண்டா விருப்புடன் இரண்டு பிடி விழுங்கிவிட்டுப் போய்விட்டாள். சாமிநாதனும் உண்டு முடித்துப் படுக்கச் சென்றான்.

மீனாட்சியம்மாள் அன்று மாலை வாங்கிய பாலைக் காப்பிக்கும், தயிருக்குமாக முழுவதும் உபயோகித்து விட்டதால் குழந்தைக்குப் பால் இல்லை. பதினொரு மணி வாக்கில் குழந்தை பசியெடுத்துக் கொண்டு அழ ஆரம்பித்தது. கமலி அதைச் சட்டை செய்யவில்லை. வெறுப்புடன் வேறு பக்கம் திரும்பிப் படுத்துக் கொண்டாள்.

மீனாட்சியம்மாள் வந்து கமலியிடம் ஏதேதோ இரகசியமாகச் சொல்லிப் பார்த்தாள். எதற்கும் அவள் மசியவில்லை. குழந்தையின் வீறல் மிகுதியாயிற்று. இந்தப் பாதி ஜாமத்தில் பசும் பாலுக்கு எங்கே போவது? மீனாட்சியம்மாள் பரிதவித்தாள். சட்டென்று அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. வெந்நீரில் கொஞ்சம் சர்க்கரையைக் கலந்து குழந்தைக்குப் புகட்டினாள். அந்த இனிப்பு நீரைப் பருகிவிட்டு குழந்தை தூங்க ஆரம்பித்தது. அவள் சற்றே நிம்மதியுடன் பக்கத்து அறைக்குப் படுக்கப் போய்விட்டாள்.

இவ்வளவையும் சாமிநாதன் பார்த்துக் கொண்டுதான் இருந்தான். அவனுக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. படுக்கையில் புழுவாக நெளிந்து கொண்டிருந்தான். தூக்கம் வரவில்லை. நேரமும் நகர்ந்தது.

நள்ளிரவு கடந்து போய் மணி மூன்றரை அல்லது நான்கு இருக்கும். குழந்தை விழித்துக்கொண்டு அழ ஆரம்பித்தது. வெறும் சர்க்கரைத் தண்ணீர் அதன் வயிற்றில் எவ்வளவு நேரத்துக்குத் தங்கும்?

கமலி தூங்காமல்தான் இருந்தாள். இப்போது அவள் ஏதோ வேதனையால் முனக ஆரம்பித்தாள். மறுபடி பால் கட்டிக்கொண்டது போலும்! ஆனாலும் குழந்தைக்குப் பாலூட்டவில்லை.

சாமிநாதனால் இதற்கு மேல் பொறுக்க முடியாமல் போகவே படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

''கமலி!''

அவள் விம்மிப் பொருமினாள். பதிலேதும் தரவில்லை.

'' கமலி !'' என்று மீண்டும் மெல்ல அழைத்தவாறு அவளருகில் வந்து அமர்ந்தான் சாமிநாதன். கமலியும் எழுந்து வேறு பக்கம் திரும்பி உட்கார்ந்தாள்.

''என்ன கமலி, என்ன இதெல்லாம்?''

அவள் இப்போது மௌனமாயிருந்தாள்.

'' எனக்கு எல்லாம் தெரியும், கமலி ! ஆசுபத்திரியின் ஸ்டாஃப் நர்ஸ் என்கிட்டே முழுத் தகவல்களையும் சொன்னாள்.... ஆசுபத்திரியிலே அந்த டாக்டரம்மா உனக்கு எவ்வளவோ எடுத்துச் சொல்லியிருக்கிறாங்க. அதையெல்லாம் யோசிச்சுப்பார் !''

''அதெல்லாமே எனக்குச் சந்தேகங்களாயிருக்குதே !''

''அப்படீன்னா இந்தக் குழந்தையை என்னதான் பண்ணப் போறே ?''

''நாளைக்கே இதை என் அம்மா தூக்கிக்கிட்டு ஊருக்குப் போயிடட்டும். அவங்களே வளர்த்துக்கட்டும்; இல்லேன்னா யாருக்காவது கொடுத்துக்கட்டும். எனக்குக் கவலை இல்லே. நான் இப்ப பிள்ளை பெத்தவளாவே நினைக்கலே. அந்த எண்ணம் இருந்தால்தானே கவலையும் வருத்தமும்? அந்த மாதிரி எதையும் என்னால் உணர முடியலே. அதனால்தான் இப்படிச் சொல்றேன்.''

மென்மைக்கு உறைவிடமான பெண்ணின் மனம் ஒரு சிறு விரிசல் கண்டாலும் எத்தனை கடினமான பாறையாக இறுகி விடுகிறது !

''இங்கே பார், கமலி! சும்மா ஒரு பேச்சுக்குச் சொல்றேன்: இது என் குழந்தைதான்னு நான் சொன்னால் நீ நம்ப மறுக்கிறே; ஆனால் நீயே ஒரு குழந்தையைக் கொண்டு வந்து அது என்னுடையதுன்னு சொன்னால் நான் அதை நம்பியாகணும், இல்லையா ? அப்படி நம்ப மறுத்தால் நீ என்ன பண்ணுவே ?''

கமலி மிரண்டு போனாள். நலிந்திருந்த அவள் உடல் நடுங்கிப் படபடத்தது.

'' கமலி! உலகத்திலிருக்கிற எல்லா ஜீவராசிகள்கிட்டவும் தூய்மையான தாய்மைக் குணம் உண்டு. இது போதுமானது. இப்படி இருக்கிறதனாலேதான் உலகம் இதுவரை அழிஞ்சுடாம நிலைச்சு நிற்குது. பந்தம், பாசம் என்பது வெறும் ரத்தம், நிணம், நரம்பு, தசை, எலும்பு இதுகளின் பரிவர்த்தனையில் ஏற்படுகிறதில்லே; அது ஒவ்வொரு ஜீவராசியின் ஆத்மாவிலிருந்தும் இயற்கையாகவே பீறிட்டு வருகிற ஒரு மகா ரகசியம்; பசு—பதி என்கிற தத்துவத்தில் இது அடக்கம். அதுக்குப் பேர்தான் பாசம். அதுதான் நிஜமான பந்தம். 'இது என் ரத்தம், இது என் நரம்பு, இது என் சதை, இது என் எலும்பு' என்கிற அடிப்படையில் ஒண்ணை நேசிக்கிறதோ, பாசம் செலுத்துகிறதோ உண்மையான நேசமில்லே, அது பாசமும் இல்லே; வெறும் வெளிவேஷமே !''

பசி தாளாமல் அழுது கொண்டிருந்த குழந்தையைத் திரும்பிப் பார்த்த சாமிநாதனின் கண்களில் கனல் புகுந்தாற்போல் இருக்கவே அவன் அடைத்த குரலில் மேலும் சொன்னான்: ''கமலி! கடைசியா ஒண்ணு சொல்றேன். நீ நினைக்கிறது போல இந்தக் குழந்தை உன்னுடையதாக இல்லாமல் போனாலும் இதை உன் குழந்தைன்னு ஏற்றுக் கொள்கிறதினாலே உன்னோட தாய்மைக்குப் பங்கம் எதுவும் நேர்ந்துவிடாது. அத்தோடு, இது உன் குழந்தையாயிருந்தால் இதுக்கு மட்டுமே நீ தாயாக இருக்க முடியும்; இது உன் குழந்தை இல்லேன்னு தெரிஞ்சும் இதை உன்னோட குழந்தையாக ஏத்துக்கிட்டாலோ இந்த உலகத்திலிருக்கிற அத்தனை கோடி குழந்தைகளுக்கும் தாயாகிவிடுவே ! அந்த மகத்தான பெருமையை நீ அடையப் போறயா, இழக்கப் போறயா? யோசிச்சுப் பார் !''

அவள் அமைதியாக எழுந்து போய்த் தன் படுக்கையில் சாய்ந்தாள். சோர்வு அவள் கண்களைக் கிறக்கியது. குழந்தை இன்னமும் பசியால் அழுது கொண்டுதான் இருந்தது.

விடியற்காலை ஐந்து மணி. வெளிக் கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டுக் கூடத்து அறையில் படுத்துக் கொண்டிருந்த மீனாட்சியம்மாள் எழுந்து போய்த் திறந்தாள்.

இவ்வளவு நேரமும் தூங்காமல் கட்டிலில் உட்கார்ந்து மௌனமாய்க் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த கமலியும் மெல்ல நிமிர்ந்து சன்னல் வழியே எட்டிப் பார்த்தாள். வாசல் படி மீது வேலைக்காரி வேலம்மாதான் வந்து நின்று கொண்டிருந்தாள்.

அவளைப் பார்த்துத் திடுக்குற்றவள்போல் ஓரடி பின்னால் நகர்ந்த மீனாட்சியம்மாள், ''என்னடீ, நீ இங்கே வந்தே ?'' என்று வியப்பும் திகைப்புமாகச் சற்று அதட்டுவது மாதிரி கேட்டாள்.

வேலம்மாவுக்கும் அவளைப் பார்த்துத் திகைப்பாகிவிட்டது. ''ஓ..... மாயவரத் தம்மாவா!.... நீங்க எப்பம்மா வந்தீங்க?'' என்று குழறினாள் அவள்.

''என்னைக் கேட்கிறது இருக்கட்டும் : நீ ஏன் இங்கே வந்தே, அதைச் சொல்லு !'' என்று கோபம் செறிந்த இரகசியக் குரலில் வினவினாள் மீனாட்சியம்மாள்.

''நான் இந்த வீட்டிலேதாம்மா வேலை செய்யறேன். அது ஆச்சே ஒரு வருசம்.....''

''அடி, பாவி ! உன்னை யார் இங்கே வேலைக்கு வரச் சொன்னது ?''

''எனக்கு முதல்லே தெரியாதம்மா! அப்புறம்தான்.......''

''தெரிஞ்சுநாக்கும்.எப்படித்தெரிஞ்சுது?''

''உங்க பேரு, ஐயாவோட பேரு. ஊரு, தெரு, வியாபாரம் இதுகளையெல்லாம் கமலி ஒரு நாள் என்கிட்டே சொல்லிக்கிட்டு இருந்திச்சு. அதிலிருந்து தெரிஞ்சுக்கிட்டேன்.''

''உன்னை இன்னான்னு அவள்கிட்டே சொல்லிட்டியா ?''

''இல்லேம்மா ! சத்தியமா, ஆண்டவன் மேலே ஆணையா நான் அதைச் சொல்லவே இல்லே. அதை எப்படிச் சொல்லுவேன், உங்க கிட்ட உப்பு, வெத்திலே வைச்சு சத்தியம் பண்ணிக் கொடுத்தப்புறம்?''

''இதை நம்பலாமா?''

''ஐயோ, என்னை வதைக்காதீங்கம்மா!... நான் ரொம்ப நொந்து போயிருக்கிறேன்.''

''அது சரி; இந்த ஐஞ்சாறு நாளா நீ ஏன் வேலைக்கு வரலையாம் ?''

''..................''

''சொல்லுமே! உன்னோட பெண் இடுப்பு நோவெடுத்துப் படற அவஸ்தையைக் காண வேணும்னுதானே இங்கு வராம நின்னுட்டே? இப்படிப்பட்டவள் என்னிக்காவது ஒருநாள் அந்த உண்மையை அவள்கிட்ட சொல்லிடலாம் இல்லேயா? உன்னை எப்படி நான் நம்பறது ?''

''சும்மா என்னைப் போட்டு உருட்டிப் பெரட்டாதீங்கம்மா ! இந்தப் பெண்ணை நாலு மாசத்துக் குழந்தையா உங்ககிட்டே ஒப்படைச்சேன். நீங்க மட்டும் அப்ப இதை வாங்கிக்காம இருந்திருந்தா எங்கனுச்சும் கிணத்திலோ குளத்திலோதான் எறிஞ்சிருப்பேன். வாங்கிக்கிட்டீங்க. வாங்கி அதன் உயிரை மட்டுமில்லாம, என்னோட உயிரையும், என் அப்பன் ஆத்தா மானத்தையும் காப்பாத்தினீங்க. இதோ ஆச்சு, இருபத்தாறு வருசம். இது வரை அவரை என் கனவிலேகூட காண்கிறதில்லே. இந்த வீட்டுக்கு வந்து, அந்தப் பெண்ணைப் பார்த்து, அவள் என் மகள்தான்னு தெரிஞ்சப்புறம் கூட அது மாதிரி நினைப்பு எனக்குத் தோணலே. இனிமேதானா அதை அவள்கிட்ட சொல்லப் போறேன்? அப்படிச் சொல்றதனாலே என்ன லாபம் வரப் போவுது? நீங்க அந்த இரகசியத்தை வெளியிட்டாலும் நான் அதை இல்லேன்னு மறுத்துடுவேன்.''

''அது போகட்டும். இந்த ஐஞ்சு நாளா நீ எங்கே போயிருந்தே, அதைச் சொல்லு !''

''ஊரிலே என் பையனுக்கு உடம்பு ரொம்ப டேஞ்சர்னு கடிதாசி வந்துச்சு. மனசு கேட்கலே, போனேன்.''

''அந்தப் பையனும் உன் புருஷனும் சேர்ந்து உன்னை அடிச்சு விரட்டிப்பிட்டாங்கன்னு ஐஞ்சாறு வருஷங்களுக்கு முன்னாடி கேள்விப்பட்டேனே ?''

''ஆமாம்மா!.... இருந்தாலும்,...''

''மகா யோக்கியன்தான். முதல்லே உன்னைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கி ஒரு குழந்தையையும் கொடுத்துட்டு ஓடிப் போனவன்கிட்டே இப்ப நீ மறுபடியும் தொடர்பு வைச்சிருக்கிறியாமே, நிஜம் தானா ? இதனால்தான் உன் புருஷனும் மகனும் உன்னை விரட்டிப்பிட்டான்களாமே?''

''பொய்மா, பொய் !'' என்று மார்பில் அறைந்து கொண்டு விம்மிய வேலம்மா, ''அதையெல்லாம் நம்பாதீங்கம்மா! இந்தப் பெண் கமலியை உங்ககிட்ட ஒப்படைச்ச அன்னைக்கே அவனையும் அடியோட மறந்து தலைமுழுகிப்பிட்டேன். இனி இந்த ஜன்மத்தில் அந்தப் பாவியை நினைப்பேனா? அது நடக்கவே நடக்காது'' என்று நடுங்கினாள்.

''சரி, சரி; இப்ப என்ன செய்யப் போறே ?''

''இங்கே வேலைக்கு......!''

''கூடவே கூடாது. இனி மேல் இந்த வீட்டிலே நீ காலை வைக்கவே கூடாது. வேறு எங்காவது போய் உன் வயித்துப்பாட்டுக்கு வழி தேடிக் கொள்ள வேண்டியது. இங்கே நிற்காதே, போயிடு!''

மீனாட்சியம்மாள் கதவைச் சாத்தினாள். வேலம்மா தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அந்த விடியற்சாம கருக்கல் இருட்டில் இறங்கி எங்கோ நடந்து மறைந்தாள்.

இவ்வளவையும் படுக்கையறையின் சன்னல் வழியே பார்த்தும் கேட்டும் கொண்டிருந்த கமலியின் நெஞ்சு திடுதிடுத்தது. கண்களில் நீர் பெருக்கெடுத்து வழிந்தது.

'என்னைப் பெற்றவள் வேலம்மாவாம், வளர்த்தவள் மீனாட்சியம்மாளாம்! இவை உண்மையானால் இவ்விரண்டு பேரில் எனக்குச் சத்தியமான தாய் யார்?'

அவள் அவசரமாகச் சுற்றுமுற்றும் பார்த்தாள். சற்றுமுன் சாமிநாதன் சொன்ன சில சொற்கள் அவளது செவிகளில் மீண்டும் ஒலிப்பது போல் இருக்கவேதான் அவ்வாறு திருதிருத்தாள்.

'பந்தம், பாசம் என்பதெல்லாம் வெறும் குருதி, தசை, எலும்பு ஆகியவற்றின் உறவுச் சேர்க்கையால் மட்டும் ஏற்படுவதல்ல ; அது ஒவ்வொரு ஜீவராசியின், ஆத்மாவிலிருந்தும் ஏதோ ஒன்றின் தூண்டுதலால் இயற்கையாகவே பீறிட்டு வருகிற ஒரு மகாரகசியம். அதற்குப் பெயர்தான் பாசம், அதுதான் உண்மையான பந்தம். அது சுயநலக் கலப்பற்ற தூய நம்பிக்கையிலே பிறப்பது. இதைத் தவிர அதற்கு வேறு எந்த ஆதாரமும் கிடையாது.'

கமலி சரேலெனக் கட்டிலை விட்டிறங்கித் தொட்டிலை நோக்கி ஓடினாள். அந்தச் சத்தத்தில் சாமிநாதன் தூக்கம் கலைந்து திடுமென எழுந்து உட்கார்ந்தான்.

குழந்தை இன்னமும் பசியால் வீரிட்டுக் கொண்டுதான் இருந்தது. அந்த அழகிய, தங்கப் பொம்மை போன்ற குழந்தையைப் பேராவேசப் பாசத்தோடு வாரியெடுத்து மார்பில் அணைத்துக் கொண்டாள். அமுத தாரைகள் தாமே பீரிட்டுப் பாய்ந்து குழந்தையின் மலர் வதனமெங்கும் மழையாய்ப் பொழிந்து வழிந்தது.




- ☐ பழக்க தோஷம்
- ☐ அதிசயமில்லை
- ☐ அவர் வழி செல்பவர்கள்
- ☐ 'தனி ரயில்'—தனிப்புகழ்

**'வா**பஸ் வாங்கு' என்ற தலைப்பில் கூத்தன் என்ற ஆசிரியர் (கதாசிரியர்) எழுதியிருந்த குறிப்பைப் படித்தேன். அது மிக மிக அற்புதமாக இருந்தது என்று சொன்னால், அதை நீங்கள் நம்பத்தான் வேண்டுமே யொழிய நம்பமாட்டேன் என்று மறுக்கவோ எதிர்க்கவோ கூடாது என்று மிக்க பணிவன்புடனும் வணக்கத்துடனும் கேட்டுக் கொள்ளுகிறேன். அட தெய்வமே! இப்படிச் சுற்றி வளைத்துச் சொல்லும் பழக்கம் என்னையும் பிடித்துக் கொண்டு விட்டதே!

காரைக்குடி — கி. கமலம்

ஃ ஃ ஃ

**செ**ன்ற இதழில் வாழை நெஞ்சில் குலை தள்ளியிருக்கும் போட்டோ படத்தைப் போட்டு, சின்ன விமர்சனமும் போட்டிருக்கிறது. வாழைத் தோட்டம் வைத்திருப்பவர்களுக்கு இந்த நிகழ்ச்சி அவ்வளவு அதிசயமில்லை.

தஞ்சாவூரில் என் வீட்டுத் தோட்டத்தில் வாழை இலை அறுக்கப் போன சமயம் விஷமமாக அரிவாளால் ஒரு வாழை மரத்தை மற்ற மரங்களுடன் நெருக்கமாயிருக்கிறதென்று வெட்டித் தள்ளப் பார்த்தேன். ஐந்தடி உயரத்தில் அரிவாள் குறுக்கே வெட்டாமல் நீளப் போக்கில் பாய்ந்தது. ஓர் அடி நீளத்துக்கு மேல், காலடி ஆழத்துக்குக் காயம் பண்ணி விட்டது. பிறகு அந்த மரத்தை முழுக்க வெட்டிச் சாய்க்க முடியவில்லை. இரண்டு மாதங்கள் கழித்துப் பிளந்திருந்த இடத்தின் வழியாக முதலில் மொத்தை தோன்றி, நாளாக நாளாக முழுத் தாரும் வெளியே வந்துவிட்டது. மேலே பழைய இலைகளும் இருந்தன. தார் வெளி வந்த பிறகு புதுக் குருத்து கிடையாது.

அதே மாதிரி புயலடித்த சமயம் வேறொரு வாழைமரத்தின் நடுவில் காயம் பட்டுத் தார் ஒன்று வெளியே வந்தது.

சதுரங்கப்பட்டணம்
1–2–68 — கி. ரங்கஸ்வாமி அய்யங்கார்

ஃ ஃ ஃ

**இ**ங்கு பஸ் ஊழியர்களின் வேலைநிறுத்தத்தால் நகர வாழ்க்கையே பாதிக்கப்பட்டிருக்கிறது. பல்லாயிரக்கணக்கான பம்பாய்வாசிகளின் அன்றாட அலுவல்கள் பாதிக்கப்பட்டிருந்தபோது, சுதந்திரக் கட்சியினர் செய்த சேவை மிகவும் பாராட்டத்தக்கது. கட்சித் தொண்டர்கள் அநேக லாரிகளை மக்களின் தேவைக்காகப் பயன்படுத்தினர். அலுவலகத்துக்குச் செல்லும் ஊழியர்களுக்கு மட்டுமின்றிப் பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளுக்கும் வாகனங்கள் விடுகின்றனர். சுயநலமற்ற தேசசேவைக்காகவே தம்மை அர்ப்பணித்துக் கொண்ட ராஜாஜியின் வழி செல்லும் கட்சியினர் வேறு எப்படி இருப்பார்கள்?

பம்பாய் — 74 — எஸ். சீனிவாஸன்
7–2–68

ஃ ஃ ஃ

**செ**ன்ற 11–2–68 கல்கியில் சிறப்பு அம்சம் ''தமிழுக்குத் தனி ரயில்'' என்னும் பயணக் கட்டுரை. ஏழு நாட்களில் தமிழகத்தில் தமிழ்க் கருத்தரங்கு மாநாட்டுப் பிரதிநிதிகள் கண்ணாரக் கண்டவற்றையும், காது குளிரக் கேட்டவற்றையும், உளம் நெகிழ நுகர்ந்தவற்றையும் சுருக்கமாக ஆனால் தெளிவாகவும், சுவையாகவும் எடுத்தெழுதி, ஏற்பட்ட சிற்சில குறைபாடுகளையும் நாசூக்காகக் குறிப்பிட்டுக் கட்டுரை சமைத்திருக்கும் திரு புத்தனேரி சுப்பிரமணியம், தான் கவிஞர் மட்டுமல்ல, நல்ல கட்டுரையாளரும் கூட என்பதை நிலைநாட்டிக் கொண்டிருக்கிறார்.

கடம்பூர் — வே. தாமரைச் செல்வன்

ஃ ஃ ஃ

**க**ல்கி 11–2–68 இதழில் வெளிவந்த 'தமிழுக்குத் தனி ரயில்' என்ற கட்டுரையை நானும் எனது நண்பர்களும் படித்து மிகவும் மகிழ்ந்தோம்.

தமிழ் வலம் வந்த தூதுவர்கள் மக்களின் அன்பு வெள்ளத்தில் குளித்து, சுசீந்திரம் கோவிலுக்குள் அசட்டையாகச் சென்று, மூவாசையோடு நாலாவது தமிழ் ஆசையைப் பெற்று மகிழ்ந்த பாங்கினைச் சுவையாக அளித்துள்ளார், திரு புத்தனேரி சுப்பிரமணியம். இனிய, எளிய, தூய்மையான தமிழில், மிகவும் சரளமான நடையில் கட்டுரையை வடித்துக் கொடுத்திருக்கிறார்.

திருநெல்வேலி — சண்முகசுந்தரன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

